மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு-6

கவிச் சக்கரவர்த்தியான ஒட்டக்கூத்தர்

இயற்றிய

# மூவருலா

பழைய வுரை குறிப்புரைகளுடன்

மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்களுடைய குமாரர்

S. கலியாணசுந்தர ஐயரால்

பதிப்பிக்கப் பெற்றது

கலாக்ஷேத்திரம், அடையாறு

உரிமைப் பதிவு 1946 விலை ரூ. 4—0—0

*First Edition—July* 1946

## இப்புத்தகத்தில் அடங்கியவை

1. இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி ... iii
2. பிழையும் திருத்தமும் ... iv
3. முகவுரை ... v
4. கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் வரலாறு ... xi
5. விக்கிரம சோழன் வரலாறு ... xvi
6. இரண்டாம் குலோத்துங்க சோழன் வரலாறு... xviii
7. இரண்டாம் இராசராச சோழன் வரலாறு ... xx

---

8. விக்கிரம சோழனுலா மூலமும் குறிப்புரையும் ... 1–64
9. குலோத்துங்க சோழனுலா மூலமும் பழையவுரையும் குறிப்புரையும் ... 65-166
10. இராசராச சோழனுலா மூலமும் குறிப்புரையும் ... 167–231
11. மூவருலா அரும்பத முதலியவற்றின் அகராதி... 232–258

---

Printed at KABEER PRINTING WORKS, Triplicane, Madras
and Published by S. Kalyanasundara Iyer
Paper Issue Card No. Ms. 376

## நூற் பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

அகநா - அகநானூறு
அடிக் - அடிக்குறிப்பு
அடியார் - அடியார்க்குநல்லார்
அரும்பத - அரும்பதவுரை
இராசராச - இராசராசசோழனுலா
இ. வி. - இலக்கண விளக்கம்
ஐங் - ஐங்குறுநூறு
கந்த - கந்தபுராணம்
கம்ப - கம்பராமாயணம்
கலி - கலித்தொகை
கலிங்கத் - கலிங்கத்துப்பரணி
குமர - குமரகுருபரர் பிரபந்தங்கள்
குலோத். உலா - குலோத்துங்க சோழனுலா
குலோத். பிள்ளைத் - குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ்
குறுந் - குறுந்தொகை
சங்கர - சங்கர சோழனுலா
சிலப் - சிலப்பதிகாரம்
சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சீவக - சீவக சிந்தாமணி
சோழ மண்டல - சோழ மண்டல சதகம்
தக்க - தக்கயாகப்பரணி
தஞ்சை - தஞ்சைவாணன் கோவை
திருநா - திருநாவுக்கரசு நாயனார்
திருவா - திருவாசகம்
தே - தேவாரம்
தொல் - தொல்காப்பியம்
ந - நச்சினார்க்கினியம், நச்சினார்க்கினியர்
நற் - நற்றிணை
நாலடி - நாலடியார்
நெடுநல் - நெடுநல்வாடை
பட்டின - பட்டினப்பாலை
பதிற் - பதிற்றுப்பத்து
பரி - பரிபாடல்

பரிமேல் - பரிமேலழகர், பரிமேலழகருரை
பி - ம் - பிரதி பேதம்
பிரபு - பிரபுலிங்க லீலை
புறநா - புறநானூறு
பு. வெ. - புறப்பொருள் வெண்பாமாலை
பெரிய - பெரிய புராணம்
பெருங் - பெருங்கதை
பெருந் - பெருந்தொகை
பேர் - பேராசிரியர்
பொருந - பொருநராற்றுப்படை
மணி - மணிமேகலை
மதுரை - மதுரைக்காஞ்சி
மலைபடு - மலைபடுகடாம்
முத் - முத்தொள்ளாயிரம்
முருகு - திருமுருகாற்றுப்படை
மேற் - மேற்கோள்
விக்கிரம - விக்கிரம சோழனுலா
வி. பா - வில்லிபுத்தூராழ்வார் பாரதம்

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 73 | 37 | களகளபன் | கனகளபன் |
| 103 | 37 | மூருகு | முருகு |
| 109 | 33 | கலீங்கத் | கலிங்கத் |
| 124 | 39 | புகும். இல்லும் | புகும்இல்லும் |
| 186 | 13 | விடானென்பார் | விடாளென்பார் |
| 196 | 17 | மலையாக | மாலையாக |
| 201 | 5 | பொய்கென்னும் | பெய்கென்னும் |
| 220 | 21 | தடழ்தோள் | தடந்தோள் |
| 223 | 12 | நேரியின் | நேரியன் |
| 223 | 16 | ; என்பதாலும் | என்பதாலும் |

பக்கம் 143 இல் உள்ள 'அரிவைப்பருவத்தாள்' என்று தொடங்கும் பாரா பழையவுரைப் பகுதியுடன் சேர்ந்திருக்க வேண்டும்.

உ

கணபதி துணை

# முகவுரை

சடைகெழு மகுடந் தண்ணிலா விரிய
வெண்ணிலா விரிதரு தரளக்
குடைநிழல் விடைமேற் கொண்டுலாப் போதும்
குறிப்பெனே கோங்கிண ரனைய
குடைகெழு நிருபர் முடியொடு முடிதேய்ந்
துக்கசெஞ் சுடர்ப்படு குவையோங்
கிடைகெழு மாடத் திஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே.

(கருவூர்த் தேவர் திருவிசைப்பா)

உலாவென்பது தமிழ் மொழிக்குரிய பலவகைப் பிரபந்தங்களுள் ஒன்று; பாட்டுடைத் தலைவன் உலாவருதலைச் சிறப்பித்துப் பாடப்படுதலின் இஃது இப்பெயர் பெற்றது; உலா - பவனி. இந்தப் பிரபந்தம் உலாப் புறமெனவும் வழங்கும். இது கலிவெண்பாவால் இயற்றப்படும்; தலைவன் வீதியிற் பவனி வருகையில் அவ்வீதியிலுள்ள பேதை முதற் பேரிளம்பெண் ஈறான ஏழு பருவப் பொது மகளிரும் அவனைக் கண்டு காமுற்றதாகப் பாடப்படுவது.

காப்பியங்களில் அவற்றின் தலைவர்கள் உலாவரும் காட்சிகளைப் புனைந்து அமைத்தல் கவிமரபு. முடி புனைந்தும், மணம் புரிந்தும், வெற்றி பெற்றும் அத் தலைவர்கள் உலாவரும் செய்தியைப் பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய தமிழ்க் காவியங்கள் அழகு பெறக் கூறுகின்றன. தலைவன் உலா வருவதாகக் காப்பியங்களிற் சுருக்கமாக அமைக்கப்படும் செய்தியையே தமக்குரிய பொருளாகக் கொண்டு விரிவுபெற அமைந்த பிரபந்தமே உலாவாகும். தலைவன் பெயர் கூறப்படுதலாலும் அவனைக் கண்டு மகளிர் மாத்திரம் காதல் கூர்ந்த செய்தியை உரைப்பதாலும் இது புறப்பொருளைச் சார்ந்த பெண்பாற் கைக்கிளையுள் அடங்கும்; பாடாண்திணைக் குரியதுமாம்; இதற்கு ஆதாரம், "ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப" (தொல்.

புறத். 30) என்பது குலோத்துங்க சோழனுலா உரையாசிரியர் கருத்து.

தத்தம் புலமைத்திறத்துக்கு ஏற்றபடி கருத்துக்களைத் தொடர்பு பெற அமைத்து விரித்துத் தாம் வழிபடும் தெய்வங்கள் மீதும், தம் ஆசிரியர்மீதும், தம்மை ஆதரித்த உபகாரிகள்மீதும் பல புலவர்கள் உலாக்களைப் பாடியிருக்கின்றனர். சேரமான்பெருமான் நாயனுர் இயற்றிய ஆதியுலாவும், தத்துவராயரால் இயற்றப்பட்ட ஞான விநோதனுலாவும், ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்ட மூவருலாவும் இம் மூன்று வகைக்கும் முறையே உதாரணங்களாக விளங்குவன.

தலைவர்கள் தத்தமக்குரிய ஊர்திகளில் பவனி வந்ததாகக் கூறுதல் பண்டை மரபென்பதை ஆதியுலா முதலியவற்றிற் காணலாம். ஸ்தல சம்பந்தமான உலாக்களில் பெரும்பாலன தலைவர்கள் திருத்தேரில் உலாவந்ததாகவும் ஒரே நாளில் ஏழு பருவமகளிரும் தரிசித்ததாகவும் கூறுகின்றன. ஏழு பருவ மகளிருக்கேற்ப ஏழு நாட்களில் தலைவர் ஏழுவகை வாகனங்களில் வந்ததாகச் சொக்கநாதருலா உரைக்கின்றது. தலைவர் பட்டத்து யானையிற் பவனி வந்ததாக மூவருலா கூறுகின்றது.

பாட்டுடைத் தலைவருடைய பெருமை, நீராடுதல், அப்பால் தத்தமக்குரிய ஊர்திகளுக்குச் செல்லுதல், உடன்வருவோர், பலவகை மகளிர் குழாங்கள் அவரைத் தரிசிக்கக் காத்திருந்து பின் தரிசனம் செய்து காமுறுதல் ஆகிய இச் செய்திகள் உலாவின் முற்பகுதியாக அமையும். அதன்பின் முறையே பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் ஏழுபருவ மகளிரின் இயல்புகளும் விளையாட்டுக்களும், அவர்கள் தலைவரைத் தரிசித்தலும் அதனுல் உண்டான விளைவுகளும் கூறப்படும்.

இந்த அமைப்பு எல்லா உலாக்களுக்கும் பொதுவாயினும் அவ்வந்நூலாசிரியருக்கே உரிய நடையின் அமைப்பிலும் காலப் போக்கில் உண்டான கருத்துக்களிலும் வேறுபாட்டைக் காண லாகும். இவ்வேறுபாட்டு நலமே எத்தனை உலாக்களைப் படித் தாலும் சலிப்பு உண்டாகாமைக்குக் காரணமாகின்றது.

தனித்தனியே உள்ள பல்வேறுபட்ட பொருள்களையுடைய செய்யுட்களாலாகிய தொகுதிபோலன்றித் தொடர்ந்த பொரு ளுடையதாய் ஒரே நெடும்பாட்டால் இயலுதலின் இதனைத் தொடர் நிலைச் செய்யுளுள் ஒன்ருகவே கருதல் தகும். சிறு காப்பிய வரிசையில் வைத்து எண்ணுதற்கு ஏற்ற தகுதிகள் இதன்பால் உள்ளன.

புற நிகழ்ச்சிகளை வருணித்தலைக்காட்டிலும் அகத்து நிகழ்ச்சியாகிய காமவுணர்ச்சியை வருணித்தல் அரிது ; ஆதலின், "பேசுமுலாவிற் பெதும்பை புலி" என்று ஒரு தனிப்பாடல் கூறும்.

மூவருலாவாகிய இது கவிச் சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தரென்னும் புலவர் பெருமானால் விக்கிரம சோழன் மீதும், அவன் மகனாகிய இரண்டாங் குலோத்துங்க சோழன்மீதும், அவன் மகனான இரண்டாம் இராசராச சோழன்மீதும் தனித்தனியே இயற்றப்பட்ட மூன்று உலாக்கள் அடங்கியது. இம்மூன்று உலாக்களும் முறையே 342, 387, 391 கண்ணிகளையுடையன. கலிவெண்பாவில் ஓரெதுகை அமைந்த இரண்டடிகளைக் கண்ணியென்றல் மரபு ; இது, "முன்னா யகரிலவன் மூதுலாக் கண்ணிதொறும், பொன்னா யிரஞ்சொரிந்த பூபதியும்" (சங்கர சோழனுலா) என்னும் கண்ணியால் அறியப்படும். ஒவ்வொரு நூலின் இறுதியிலும் ஒவ்வொரு வெண்பா அமைந்துள்ளது ; குலோத்துங்க சோழனுலாவில்மட்டும் ஒரு கட்டளைக் கலித்துறையும் சேர்ந்துள்ளது.

இவ்வுலாக்களில் சோழர்களுடைய குலத்தொன்மை, தலைவர் பெருமை, பள்ளியெழுதல், நீராடி அலங்காரம் செய்துகொள்ளல், பட்டத்து யானையின்மீது அமர்தல், உடன் வருவோர், குழாங்கள், அவர்கள் கூற்று என்பன முதலிலும் ஏழு பருவ மகளிருடைய உணர்ச்சிகளும், செயல்களும், விளையாட்டுக்களும் தலைவர்களைக் கண்டு காமுற்றதும், அவர்கள் அருள் செய்ததும் ஆகிய இந் நிகழ்ச்சிகள் பின்பும் கூறப்படுகின்றன. தலைவன் உருவத்தைக் கிழியில் வரைதல், பந்து அம்மானை ஆடல், விறலி தலைவன் பெருமையைப் பாடுதல், மதுவை அருந்துதல், தலைவன் நிறத்துக்கு ஏற்ப உடுத்தல், பூணல், பூக்கொய்தல், நீராடல், கழங்காடல், சிற்றில் இழைத்தல் முதலிய விளையாட்டுக்கள் ஆகிய இவற்றைக் காணலாம்.

குலோத்துங்க சோழனுலாவிற்கு மட்டும் பழைய உரையொன்று உள்ளது ; அது பதவுரையும் விசேடவுரையுமாக அமைந்துள்ளது ; உலாவிற்குரிய இலக்கண அமைதியை நன்கு விளக்குவது. புறப்பொருள் வெண்பா மாலையுட் கூறப்படும் பெண்பாற்கைக்கிளைத் துறைகளுள் இன்னது இன்னபருவத்திற்குரியதென்று தெள்ளிதின் விளக்குவது ; தொல்காப்பியம், பரிபாடல், பெருங்கதை முதலிய நூல்களிலிருந்து இவ்வுரையாசிரியர் மேற்கோள்கள் காட்டியுள்ளார். இவர் தக்கயாகப்பரணியுரை யாசிரியரோ அவரைப் போன்ற வேறொருவரோ என்பது விளங்கவில்லை ; இவர் பெயரும் தெரியவில்லை. குலோத்துங்க

சோழனுலாவிற்கு எழுதிய உரையின் குறிப்பால் இவர் ஏனை யிரண்டு உலாக்களுக்கும் உரையியற்றி யிருக்கலாமென்று எண்ண இடமுண்டாகின்றது.

மூன்று உலாக்களிலுமுள்ள சரித்திரக் கூறுபாடுகளை நன்கு கத் தெரிந்து குறிப்பு எழுதுவதற்கு உதவியாக இருந்தது, சென்னைச் சர்வ கலாசாலை இந்தியசரித்திரப் பேராசிரியராகிய ஸ்ரீமான். க. அ நீலகண்ட சாஸ்திரிகளவர்கள் வெளியிட்ட "சோழர்கள்" என்னும் நூலாகும்.

நூலாசிரியர் வரலாறும், பாட்டுடைத் தலைவர்கள் வரலாறுகளும் இதன் பின்னே சுருக்கமாக எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளன.

இப்பதிப்பிற்குக் கிடைத்த கையெழுத்துப் பிரதிகளின் விவரம்:

## விக்கிரம சோழனுலா

| | | |
|---|---|---|
| யாழ்ப்பாணத்து நல்லூர், சதாசிவ பிள்ளையவர்கள் | பிரதி | 1 |
| தொழூவூர் வேலாயுத முதலியாரவர்கள் | ,, | 1 |
| மேலகரம் திரிகூட ராசப்பக் கவிராயரவர்கள் வீட்டுப் | ,, | 1 |
| திருநெல்வேலிச் சாலிவாடீசுவர ஓதுவாரவர்கள் | ,, | 1 |
| சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைப் | ,, | 1 |
| திருவாங்கூர்ச் சிலாசாஸன பரிசோதகராக இருந்த ஸ்ரீமான் து. அ. கோபிநாத ராவ் அவர்கள் | ,, | 1 |
| கோட்டுசேரி நாராயணசாமி ஐயரவர்கள் | ,, | 1 |
| கும்பகோணம் ஸப்கலெக்டர் ஆபீஸ் சிரஸ்தேதார் முத்துஸாமி பிள்ளையவர்கள் | ,, | 1 |
| கும்பகோணம் வாணாதுறை சாகேதராம பிள்ளையவர்கள் | ,, | 1 |
| மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் | ,, | 1 |

இவற்றுள் தொ. வேலாயுத முதலியாரவர்கள் பிரதியில் 'வெகுதானியளுூ மாசிமீ 4௳ சாலிவாகன சகாப்தம் 1740-இ மேற்செல்லா நின்றதில் நிறைவேறியது. கி. பி. 1818. காவை சின்னசாமி எழுதியது' என்ற வாக்கியங்கள் காணப்படுகின்றன.

## குலோத்துங்க சோழனுலா

| | | |
|---|---|---|
| திருவாவடுதுறை யாதீனத்துப் புத்தகசாலை மூலப் | பிரதி | 1 |
| மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டு உரைப் | பிரதி | 1 |

இவ்வுரைப் பிரதியின் ஈற்றில் 'அகரு-ஆம் ஆண்டு கார்த்திகைமீ 10௳ சோமவாரத்தினுள் குலோத்துங்க சோழனுலா

வுரை முற்றும். பற்றமடைச் சிதம்பர நாதன் எழுதி முற்றும் கணபதியே நம:' என்னும் வாக்கியங்களும், மூலப் பிரதியின் ஈற்றில் 'பிரமாதிஸூ சித்திரைமீ 14உ எழுதி நிறைவேறியது' என்னும் வாக்கியமும் காணப்படுகின்றன.

## இராசராச சோழனுலா

| | |
|---|---|
| திருவாவடுதுறை யாதீனத்துப் புத்தகசாலைப் | பிரதி 1 |
| மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் | ,, 1 |
| தொழுவூர் வேலாயுத முதலியாரவர்கள் | ,, 1 |

மூன்றும் பிரதியின் ஈற்றில் 'பிரமாதிஸூ வைகாசிமீ 14ஆம்உ எழுதி நிறைவேறியது. சகாப்தம் 1741 இ மேற்செல்லு' என்ற வாக்கியம் காணப்படுகின்றது.

செந்தமிழ்ப் பத்திரிகை 24-ஆம் தொகுதியில் வெளிவந்த குலோத்துங்க சோழனுலாவில் முதற்கண்ணியின் பின், "பார் மேவு, பூமகள் கேள்வன் புயல்வண்ண னுந்தியில், நாமகள் கேள்வனு நான்முகனும் - கோமகனாய், ஆங்கவர்க்குக் காசி பனு மவன் பின்னவனும், ஆங்கதற்பி னுதித்த னின்னருளால் - ஓங்கி" என்னும் இரண்டு கண்ணிகள் அதிகமாகக் காணப்படுகின்றன.

என் தந்தையாரவர்கள் கும்பகோணத்திலிருந்த காலந்தொடங் கியே மூவருலாவைப் பதிப்பிக்க எண்ணிப் பல பிரதிகளையும், அவற்றிற்கு இன்றியமையாத இலக்கியம் சரித்திரம் சம்பந்தமான பலவகைக் குறிப்புக்களையும் ஆராய்ச்சி செய்து தொகுத்து வைத் திருந்தார்கள். அக்குறிப்புக்களும், பிரதிகளை ஒப்புநோக்கிக் குறித்துவைத்திருந்த பாடபேதங்களும் இப்பதிப்பு இவ்வளவு திருத்தமாக வெளிவருதற்கு முக்கிய ஆதாரமாக இருந்தன. பல வகையான வேலைகளால் இப்பதிப்பை அவர்களே வெளியிட இய லாமற் போயிற்று. இதற்குமுன் மூவருலாவின் பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. உரையோடு கூடிய பதிப்பு ஒன்றும் வெளி வராமையால் படிப்பவர்களுக்கு உபயோகமாகுமென்று கருதி இப்பதிப்பை வெளியிடலானேன்.

அடையாற்றில் என் தந்தையாரவர்கள் பெயரால் ஒரு நூல் நிலையம் அமைந்திருப்பதை அன்பர்கள் அறிவார்கள். அந்நூல் நிலையத்தின் வெளியீடாகவே இது பிரசுரமாக வேண்டுமென்று அடிக்கடி எனக்கு ஊக்கமளித்துவந்த அந்நூல் நிலையத்தின் அத்தி யட்சகராகிய ஸ்ரீமதி ருக்மிணி தேவியாரவர்களுடைய பெருந்தகை மையையும் சிறந்த தமிழபிமானத்தையும் மிகவும் பாராட்டு கின்றேன்.

இப்பதிப்பின் செலவுக்காக நன்கொடையளித்த திருவாங்கூர் ஸமஸ்தானத்துக்கும் திருவாங்கூர் ஸர்வ கலாசாலையாருக்கும் மிக்க நன்றி பாராட்டுகின்றேன்.

என் தந்தையாரவர்களிடம் பல வருஷங்கள் பாடங்கேட்டு அவர்களுடனிருந்து நூற்பதிப்பு முறையில் நன்கு பழகியவரும், திருப்பனந்தாள் காசிமடத்து 1000 ரூ. தமிழ்ப் பரிசை முதலிற் பெற்றவரும் சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் ஹைஸ்கூல் முதல் தமிழாசிரியருமான ம-ா-ா-ஸ்ரீ வி. மு. சுப்பிரமணிய ஐயரவர்கள் B.O.L. இந்நூலுக்குக் குறிப்புரை முதலியன எழுதுவதற்கு மிக்க உதவி செய்தார்கள். அவர்களுடைய அன்புடைமை மறக்கற்பாலதன்று.

அவ்வப்போது வேண்டிய ஆலோசனைகளைக் கூறிய அடையாற்று நூல் நிலையத்து நூற்பரிசோதகர் ம-ா-ா-ஸ்ரீ ச.கு. கணபதி ஐயர் B.O.L. அவர்களுக்கும், அச்சிடுங்காலத்தில் ஒப்புநோக்குதல் முதலியவற்றிற்கு உதவியாக இருந்த திருவல்லிக்கேணித் தேசீயப் பெண்கள் உயர்தரக் கலாசாலை முதல் தமிழ்ப் பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ வித்துவான் H. வைத்தியநாதையரவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

என் தந்தையாரவர்கள் தொகுத்து வைத்திருக்கும் மற்ற நூல்களையும் ஒவ்வொன்றாக வெளி வரும்படி செய்வித்தருளும் வண்ணம் ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கின்றேன்.

சென்னை
16-7-46

இங்ஙனம்
S. கலியாணசுந்தரையர்.

## ஒட்டக் கூத்தர் வரலாறு

மூவருலாவின் ஆசிரியராகிய ஒட்டக் கூத்தருடைய இயற்பெயர் கூத்தரென்பது; இவர் கூத்த முதலியாரென்றும் வழங்கப் படுவர்; கூத்தரென்பது ஸ்ரீ நடராஜப்பெருமானுடைய திருநாமம். இவர் பிறந்த ஊர் மலரியென்பர்; "மலரி வருங்கூத்தன்" (தண்டி. மேற்.) * இவர் அம்பர் நாட்டைச் சேர்ந்தவர்.

இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் வடமொழி நூல்களிலும் பயிற்சி மிக்கவர். செய்யுளியற்றும் ஆற்றல் இவர்பால் மிகச் செவ்வனே அமைந்திருந்தது. வடமொழியிலுள்ள பலவகையான சொற்களையும் தொடர்மொழிகளையும் தாம் இயற்றும் செய்யுட்களில் உரிய இடங்களில் அமைத்துப் பாடுவர். அவ்வாறமைப்பதில் இவருக்கு மிகுந்த ஊக்கமும் பிரீதியுமுண்டு. பல மாணுக்கர்கட்குப் பாடஞ் சொல்லும் இயல்பினர்; சிவபக்திச் செல்வம் வாய்ந்தவர். இவர் இன்னராதல் இவரியற்றிய வேறு நூல்களாலும் இவ்வுலாக்களாலும் விளங்கும்.

இவர் விக்கிரம சோழன் காலத்தில் அவனுடைய ஆஸ்தான பண்டிதராகவும், குலோத்துங்கனுக்கு வித்தியா குருவாகவும், அவனுக்கும் அவன் குமாரன் இரண்டாம் இராசராசனுக்கும் ஆஸ்தான பண்டிதராகவும் இருந்து அவர்களுடைய அவைக் களத்தை அலங்கரித்துப் பல புலவர்களை ஆதரித்துப் பல நூல்களை இயற்றியும் இயற்றுவித்தும் விளங்கினர். அக்காலத்தில் அம்மூவருள் ஒவ்வொருவர் மீதும் ஒவ்வோருலாவும் குலோத்துங்க சோழன் மீது ஒரு பிள்ளைத் தமிழும் இயற்றினுர். இவரிடத்துப் பேரன்புற்ற அம்மூவருள் ஒருவன் இவருக்கு அரிசிலாற்றங் கரைக் கண்ணுள்ளதாகிய ஓரூரை அளித்தான்; இவர் பெயரால் அது † கூத்தனூர் என்று இக்காலத்து வழங்கப்படுகின்றது. இவர் கலைமகளுடைய திருவருள் பெற்றவராதலின் அவ்வூரில் அத்தேவியின் திருவுருவத்தைப் பிரதிஷ்டிப்பித்துக் கோயிலெடுப்பித்து வழிபட்டு வந்தனர். இஃது, "ஆற்றங்கரைச் சொற்கிழத்திவாழியே" (தக்க. 813) என்பதனுல் விளங்கும்; இத்திருக்கோயில் இன்றும் நல்ல நிலைமையில் உள்ளது.

தன்மீது இவர் பாடிய உலாவிலுள்ள ஒரு கண்ணியை ஒட்டி ஒரு செய்யுள் இயற்றும்படி விக்கிரம சோழன் கேட்க அவ்வாறே

* நல்லுரைக் கோவை III, 12.

† இது தஞ்சாவூர் ஜில்லா பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்துக்கு அருகிலுள்ளது.

விரைந்து பாடினமையால் இவர் ஒட்டக்கூத்தரென்னும் பெயர் பெற்றாரென்பர். பந்தயம் வைத்துப் பாடுதலில் சிறந்தவராதலின் இப்பெயர் பெற்றாரென்றும் கூறுவர்; ஒட்டம்-பந்தயம்.

விக்கிரம சோழன் இவருக்கு ஒரு சமயம் யானை, காளம் முதலிய வரிசைகளை அளிக்க இவர், "இவ்விருதுகளைப் பெறுதற்கு யான் உரியனல்லேன்" என்று, "பெருக்கத்துவேண்டும் பணிவு" என்பதற்கு இணங்கத் தம்முடைய பணிவைத் தெரிவித்தனர். இவை தமிழ் நாவலர் சரிதையிலுள்ள "இடுக்கட் புண்படு", "பத்துக்கொண்டன" (118, 119) என்னும் செய்யுட்களால் விளங்கும்.

இராசராசனுலாவைப் பாடி அரங்கேற்றியபொழுது இவ் ருக்கு அவ்வரசன் ஒவ்வொரு கண்ணிக்கும் ஆயிரம் பொன் விழுக் காடு பரிசில் வழங்கினான். இது, "தெள்ளித்தம்,முன்னா யகரிலவன் மூதுலாக் கண்ணிதொறும், பொன்னா யிரஞ்சொரிந்த பூபதியும்," (சங்கர சோழனுலா), "கூட, னராதிபன் கூத்தனெதிர் நண்ணியோர் கண்ணிக், கொராயிரம்பொன் னீந்த வுலாவும்" (தமிழ் விடு தூது) என்பவற்றால் அறியப்படும்.

இவரை ஆதரித்தவர்கள் மேற்கூறிய மூவரே யன்றித் திருச் சிற்றம்பலமுடையான் பெருமாள் நம்பி, காவிரிப்பூம்பட்டினத்தி லிருந்த உபகாரிகளாகிய வீரர் சிலர், புதுவைக் காங்கேயன், திரிபுவனச் சோமனென்னும் செல்வர்களுமென்று தக்க யாகப்பரணி யாலும் அதனுரையாலும் பிறவற்றாலும் விளங்குகின்றது.

தக்க யாகப்பரணியின் இறுதியில், "ஆக்கம் பெருக்கு மடந்தை வாழியே" (813) என்று திருமகளை வாழ்த்தியிருத்தல் சோழர் முதலியோரால் நன்கு ஆதரிக்கப்பெற்று மேன்மேலும் செல்வம், புகழ், மதிப்பு ஆகிய இவற்றை இவர் மிகுதியாக அடைந்து யாதுங் கவலையின்றி வாழ்ந்து வந்தனரென்பதைப் புலப்படுத்துகின்றது.

இராசராச சோழன் II காலத்தில் முதுமைப் பிராயம் அடைந் திருந்த இவர் உடற்றளர்ச்சி யுற்றிருந்தாரேனும் அறிவில்தளர்ச்சி யுறவில்லை. மூவருலாவில் இராசராச சோழனுலா ஏனையிரண் டினும் அளவாலும் சுவையாலும் மிக்கிருத்தலும் தக்க யாகப் பரணியின் அமைப்பும் இதனை அறிவிக்கும்.

இவர் காலத்திலிருந்த புலவர்கள் நம்பிகாளியார், நெற்குன்றவாண முதலியார் முதலியோர்; கம்பரும் புகழேந்தியும் இவர் காலத்தினரென் பது சிலர் கொள்கை; அதற்குத் தக்க ஆதாரங்கள் கிடைக்க வில்லை.

இவர் சயங்கொண்டார் இயற்றிய கலிங்கத்துப் பரணியை, "பாடற் பெரும் பரணி தேடற் கருங்கவி கவிச்சக்ரவர்த்தி பரவச் செஞ் சேவகஞ் செய்த சோழன் றிருப்பெயர" (குலோத். பிள்ளைத். 14) என்று பாராட்டியிருத்தலால் அவர்மீது இவருக்குள்ள மதிப்பும் பிறபுலவர்களைப் பாராட்டும் அருங்குணமும் விளங்கும்.

இவர் உலக இயல்பைக் கடந்து வருணனைகளை அமைப்பதால் கௌடப்புலவரெனப்படுவார்; இது தக்க யாகப்பரணியுள் 29, 37, 85-ஆம் தாழிசைகளாலும் பூதகணங்களின் செயல்களை விரித்துக் கூறுவதாலும் உணரலாகும். செய்யுள் செய்யும் ஆற்றலில் அக்காலத்துள்ள கவிகளுட் சிறந்து விளங்கினமையால் * கவிராக்ஷஸனென்றும், † கவிச்சக்கரவர்த்திகளென்றும், ‡ சக்கரவர்த்திகளென்றும் அரசஞற் காளம் என்னும் விருது பெற்றமையால் $ காளக்கவி யென்றும், இருமொழி நூல்களுள்ளும் இன்றியமையாதனவற்றைச் செவ்வனே அறிந்து அறிந்தவற்றை நன்கு புலப்படுத்திச் செய்யுள் செய்யும் திறமை வாய்ந்திருந்தமையின் ** சருவஞ்ஞ கவி யென்றும் இவர் வழங்கப்படுவர்.

இவர் பரணியில் தேவியைப் பற்றிக் கூறுவனவெல்லாம் பெரும்பாலும் யாமள சாஸ்திரக் கருத்துக்களைப் பின்பற்றியனவென்று தெரிதலால் இவருக்கு அந்நூல்களிற் பயிற்சியுண்டென்றும், சைன முதலிய பிறசமயங்களைப் பற்றிய செய்திகளையும் பரிபாஷைகளையும் எடுத்தாளுதலின் அச்சமய நூல்களை அறிந்தவரென்றும் சொல்லலாம்.

மூவருலாவையன்றி இவர் இயற்றியனவாக இப்பொழுது தெரியவரும் நூல்கள்:—அரும்பைத் தொள்ளாயிரம், ஈட்டியெழுபது, காங்கேயன் நாலாயிரக் கோவை, குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ், தக்க யாகப்பரணி என்பன. அன்றியும் இவர் அவ்வப்பொழுது செய்தனவாகச் சில செய்யுட்கள் தமிழ் நாவலர் சரிதை முதலியனவற்றிற் காணப்படுகின்றன. தக்க யாகப்பரணி 776-ஆம் தாழிசை உரையினால் விக்கிரம சோழன்மீது கலிங்க வெற்றியைக் குறித்து ஒரு பரணி இவராற் பாடப்பெற்றதென்று தெரிகின்றது; ஷை நூல் 13-ஆம் தாழிசையுரையில் உரையாசிரியர், "என்ருர் தாமே" என்று சுட்டிக்காட்டிய, "முத்தின் கனங் குழையை யுங்குமிழை யுங்கதுவி முட்டுங் கருங்கயல்க ளின்கடை

* சோழமண்டல சதகம், 93, மேற்.
† தக்க. 813-4 மூலம், 536, 776, உரை. ‡ தக்க. 457 உரை.
$ தக்க. 70, உரை, விசேடக் குறிப்பு. ** தக்க. 433, உரை.

யடங்குவன " என்பதும், சிலப்பதிகாரவுரையில் அடியார்க்குநல்லார் காட்டிய மேற்கோள்களுள் பரணித்தாழிசையாகக் காணப்படும், "மோடி முன்றலையை வைப்ப ரேமுடி குலைந்த குஞ்சியை முடிப் பரே, ஆடி நின்றுகுரு திப்புதுத் திலத மம்மு கத்தினிலமைப்பரே', " மண்ணிளுள ற வறுத்ததங்கடலை வைத்தபீடிகை வலங்கொள, விண்ணி ழுயகிதன் யாக சாலைதொறு மீளவுஞ் சிலர் மிறைப் பரே " என்பவைகளும் அப்பரணியி லுள்ளன போலும்.

"சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே, நின்றளவி லின்ப நிறைப்பவற்றுள்-ஒன்று, மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று,* மலரிவருங் கூத்தன்றன் வாக்கு" என்ற தண்டியலங்கார மேற்கோட் செய்யுளால் இவர் வாக்குநயத்தைக் அக்காலத்தார் நன்கு மதித்தனரென்பதும், இவரால் ஆதரிக்கப் பெற்ற புலவர்களுள் தண்டியலங்கார மேற்கோளாசிரியரும் ஒருவரென்பதும் விளங்குகின்றன.

தக்கயாகப்பரணியிலும் இவரியற்றிய வேறு நூல்களிலும் அமைந்துள்ள பிரயோகங்களை உற்று நோக்குகையில் இவர் சைவத்தில் மிக்க பற்றுடையவரென்பது தெளிவாகும்.

துர்க்கா பரமேசுவரி கலைமகளைநோக்கி ஆளுடைய பிள்ளையா ருடைய கதையைச் சொல்லும்படி கட்டளையிட்டு அங்ஙனமே சொல்லிய கலைமகளை மனமுவந்து தன் அருகில் வீற்றிருக்கும்படி அருளியதாகக் கூறியிருப்பதும், தக்கயாக சங்காரத்தைக் கூறும் ஏனைய நூல்களில் வீரபத்திர தேவர் கலைமகளுடைய நாசியை அரிந்ததாகக் காணப்படும் செய்தியைக் கூருதொழிந்ததும், வாழ்த்தில், "ஆற்றங் கரைச்சொற் கிழத்தி வாழியே" என்று பாராட்டியிருப்பதும் இவருக்குக் கலைமகள்பாலுள்ள பேரன் பைப் புலப்படுத்தும். இவர் தமிழ்ப் பரமாசாரியராகிய அகத்திய ரிடத்து மிக்க பக்தியுடையவர்; தக்க. 40, 233. 624-ஆம் தாழிசை களைப் பார்க்க. இரு மொழியிலும் வல்லவராயிருப்பினும் வீர பத்திர தேவர் போர்க்கோலங் கொண்டெழுந்தகாலத்தில் தும்பை மாலையை அணிந்து கொண்டதாகக் கூறப்புகுந்த இவர், "பொதி யில் வாழ் முனி புங்கவன்றிரு வாய்மலர்ந்த புராணநூல், விதியி னுல்வரு தும்பை மாலை விசும்புதூர மிலைச்சியே" (தக்க. 624) என்று கூறியதாலும் அகத்திய முனிவரை, "ஒரு தமிழ் முனி வரன்" என்றும் பொதியின் மலையை, "தமிழ்க் குன்று", "தமிழ்ப் பொதியில்" (ஷை 539, 489) "செய்ய தமிழ் முழங்கத் தெய்வப்

---

* மலரி. திருவெறும்பியூரின் பழம் பெயர்; சாஸனத் தமிழ்க்கவி சரிதம், ப. 68.

பொதியிலாய்" (இராச. 67) என்றும் பாராட்டியதாலும் "கோக்குந் தமிழ்க்கொத் தனைத்தும் வாழியே", "வாழி தமிழ்ச்சொற் றெரிந்த நூற்றுறை வாழி தமிழ்க் கொத்தனைத்து மார்க்கமும், வாழிதிசைக்கப் புறத்து நாற்கவி" என்று வாழ்த்தியதாலும் தமிழ் மொழியிலும் அதன் வளர்ச்சியிலும் இவர் அதிக அபிமானமுடையவரென்பது விளங்கும்.

கடவுள் வாழ்த்தில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரைவாழ்த்தியிருத்தலாலும், அவர் கதையைக் கோயில் பாடியதிற் புகுத்தி விளங்கப் பாராட்டி யிருத்தலாலும் தனிப்பாடலில், "முத்துப் பூந்தரி னிற்குங்குருளை" என்று போற்றி யிருத்தலாலும் பிறவற்றாலும் இவருக்கு அவர்பால் இருந்த சிறந்தபக்தி வெளியாகின்றது.

இவர் நன்றியறிவிற் சிறந்தவர்; இந்நூலில் பொதுவாகச் சோழர்களைச் சிறப்பித்தும் சிறப்பாகத் தம்மை ஆதரித்த சோழர்களைப் பலபடப் பாராட்டியும் காவிரிப்பூம் பட்டினத்திருந்த உபகாரிகளையும் பல்லவராயனென்று பட்டம் பெற்ற நம்பிப் பிள்ளையையும் நல்ல சந்தர்ப்பத்திலெடுத்துச் சிறப்பித்தும் இருப்பதால் இது தெளிவாகும்.

போர் செய்யச் சென்ற வீரபத்திர தேவர் காஞ்சியில் சிவபெருமானுக்கு நிழல் செய்யும் மாமரத்தின் பல்லவத்தை அணிந்தனரென்று கூறியிருத்தலால் காஞ்சீபுரத்தில் இவருக்கிருந்த பேரன்பு விளங்கும்.

இவருடைய வரலாறுகள் விரிக்கிற் பெருகுமாதலின் இன்றியமையாத சில வரலாறுகளும் தக்க யாகப்பரணியாலும் இவ்வுலாக்களாலும் அறியப்பட்ட செய்திகளுமே இங்கே தெரிவிக்கப் பட்டன.

இவ்வுலாக்களிற் கூறப்பட்ட சோழர்களது வமிசாவளி வருமாறு:—



# விக்கிரம சோழன் வரலாறு

உலா மூன்றனுள் முதலுலாவின் தலைவனான விக்கிரம சோழன் முதற் குலோத்துங்கனுடைய குமாரர்களுள் நாலாமவன்போலும். இவன் தாயார் பெயர் மதுராந்தகி யென்பது. இவன் கி. பி. 1118 ஜூன்மீ 29உ யன்று பட்டமெய்தினான்போலும். இவன் நட்சத்திரம் உத்திராடம். தன் தந்தையோடு சேர்ந்தே சோணாட்டை ஆண்டுவந்தவன்.

இவனுடைய மெய்க்கீர்த்திகளுள் சிறியது 'பூமாது புணர்' அல்லது 'பூமகள் புணர' என்றும், பெரியது 'பூமாலை மிடைந்து' என்றும் தொடங்குகின்றன. பெரிய மெய்க்கீர்த்தி தன் ஆட்சியின் பிற்காலத்தில் இவன் சிதம்பரத்தில் இயற்றிய திருப்பணிகளையும், அமைத்த நிபந்தங்களையும் பற்றிய பகுதி புதியதாக இடையே அமைக்கப்பட்டு விளங்குகின்றது.

தக்க யாகப்பரணியுரையால் இவன்மீது ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்ட பரணியொன்று உண்டென்று தெரிகின்றது. இப்பொழுது அது கிடைக்கவில்லை.

விக்கிரமாதித்தியன் VI இறந்த பின் வேங்கை நாட்டிலிருந்த தெலுங்கத் தலைவர்கள் மேற்குச் சளுக்கியருடைய தலைமையில் அடங்கியிருப்பதினும் சோழர் ஆதிக்கத்தின்கீழ் இருப்பதைப் பெரிதும் விரும்பினர். கங்க நாட்டிலும் விக்கிரம சோழனுடைய சேனாதிகாரி ஒருவன் சுகதூரில் ஒரு கோயிலும், மத்திவால பேசிரக் என்னுமிடத்தில் ஒரு விமானமும் கட்டியதாகச் சாஸனங்கள் கூறுதலால் அந் நாட்டிலும் இவன் சோழர் ஆதிக்கத்தை மீண்டும் நிலை நாட்டினானென்பது அறியப்படும்.

இவனது ஆறும் ஆட்சியாண்டில் தென்னார்க்காடு வட ஆர்க்காடு ஜில்லாக்களில் பெரும் பகுதியான நிலப்பரப்பு வெள்ளத்தால் அழிவுற்றதால் உணவுப் பஞ்சமும் கஷ்டமும் விளைந்தன வென்று தெரிகிறது.

கி. பி. 1128-இல் விக்கிரம சோழன் தன்குல தெய்வமாகிய ஸ்ரீ நடராஜப்பெருமானுக்குத் தன் வருவாயிற் பெரும்பகுதியைக் கோயிலிற் புதிய கட்டடங்கள் கட்டுவதிலும் பற்பல பொருள்களை அளிப்பதிலும் செலவிட்டனன். இந் நிகழ்ச்சி இவனது 11-ஆம் ஆட்சி யாண்டுத் தொடக்கமான சாஸனங்களில் பொறிக்கப்பட்டுள்ளது. குலோத்துங்கன் I இறுதிக் காலத்தில் நரலோக வீரனால் திருத்தியமைத்துத் தொடங்கப்பட்ட திருப்பணிகள்

விக்கிரமசோழன் காலத்தில் நிறைவேறின வென்று ஊகிக்கலாம். பிற்காலத்துச் சாஸனங்களில் ஸ்ரீ நடராஜப்பெருமானுடைய வெளிப்பிராகாரம் விக்கிரம சோழன் திருமாளிகையென்றும். திருவீதிகளுள் ஒன்று விக்கிரமசோழன் தெங்கு திருவீதியென்றும் கூறப்பட்டுள்ளன. ஸ்ரீரங்கம் கோயிலொழுகில் விக்கிரம சோழனே ஐந்தாம் மதிலும் ராமன் கோயிலும் வேறு சில கட்டடங்களும் கட்டினனென்பது காணப்படுகின்றது.

கங்கைகொண்ட சோழபுரமே தலைநகராக விளங்கிவந்தது. கும்பகோணத்திற்கு அருகிலுள்ளதும் முடிகொண்ட சோழபுரமென்னும் வேறு பெயருடையதுமான பழையாறு, செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள வசாறு என்னும் ஊர்களிலும், காட்டு மன்னார் கோவில் என இப்போது வழங்கும் வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்துள்ள அரண்மனையிலும் பற்பல காலங்களில் தன் நாட்டைச் சுற்றிப் பார்வையிட்டபோது தங்கியிருந்ததாகத் தெரிதலால் ராஜ்யத்தில் முக்கியமான நகரங்களில் அரண்மனைகள் இருந்தனவென்பது அறியப்படும்.

விக்கிரம சோழனது பட்டப் பெயர்களுள் மிகப் பிரசித்தமானது தியாக சமுத்திரம் என்பது; இது சிலாசாஸனங்களிலும் உலாவிலும் காணப்படுகின்றது. பதினாறும் ஆட்சியாண்டுச் செவ்விலிமேட்டு வடமொழிச் சாஸனத்தில் 'தியாகவாராகரம்', 'அகளங்கன்' என்னும் பட்டங்கள் காணப்படுகின்றன. இவனுக்கு 'முக்கோக்கிழான்', 'தியாகபதாகை' என்னும் மனைவியர் இருவர் இருந்தனர். இவ்விருவருள் முக்கோக்கிழான் கி. பி. 1126-27-இல் காலஞ் சென்றபின் தியாகபதாகையே பெருந்தேவியாக விளங்கிவந்தனள். திருவிடைமருதூர்ச் சாஸனமொன்றில் அகப்பரிவாரத்தோடு கூறப்படும் நேரியன் மாதேவியார் மூன்றும் மனைவிபோலும்.

கருணாகரத் தொண்டைமான், முனையர்கோன், சோழகோன், கண்ணனென்னும் மறையோன், சுத்தமல்லன் முடிகொண்டான், வாணகோவரையன் என்னும் மறுபெயர்கொண்ட வாணன், நரலோக வீரன், காடவன், வேணாடர்கோன், அனந்தபாலன், வத்தவன், சேதிராயன், காராளை காவலன், நுளம்ப பல்லவன், திரிகர்த்தன் என்னும் தலைவர்கள் உலாவிற் கூறப்படுகின்றனர். சிலா சாஸனங்களிலிருந்து நரலோகவீரன் மகனான மாதவராயன், செங்கேணி வமிசத்தைச் சேர்ந்த சம்புவராயர், ராஜநாராயணன், சுந்தன் கங்கைகொண்டான், பாண்டிநாடு கொண்டான் என்னும்

ஒருவன், ஆனைவாரியென்னுமிடத்தில் வாழ்ந்த தொண்டை மண்டலச் சளுக்கியரென்பவர் பெயர்கள் அறியப்படுகின்றன.

தெலுங்கு நாட்டிலும் பொத்தப்பி நாட்டை ஆண்ட மகா மண்டலேசுவரன் பெட்டரசன் ராஜேந்திர சோழப் பொத்தப்பிச் சோழன் என்னும் கன்னரதேவன், கொங்கயன், கொள்ளிப் பாகைக்குத் தலைவனான நம்பயன், மஹாமண்டலேசுவரன் கட்டி தேவ மஹாராஜா, யாதவராயர்கள் இவன் ஆட்சிக்குட்பட்ட தலைவர்களாக இருந்தார்களென்பது சாஸனங்களால் அறியப் படுகின்றது.

"கூடிய சீர்தந்த வென்றெடுத்த கூத்தனுலாச், சூடிய விக்கிரம சோழனும்" (சங்கர சோழனுலா) என்று இவன் பாராட்டப் பெற்றுள்ளான்.

---

## இரண்டாங் குலோத்துங்கன்

இரண்டாம் உலாவின் தலைவனான குலோத்துங்கன் II தன் தந்தையான விக்கிரம சோழனால் கி. பி. 1133-ஆம் ஆண்டில் இளவரசாக நியமிக்கப்பட்டான். இவனது சாஸனங்களின் மெய்க்கீர்த்திகள் 'புகழ்சூழ்ந்த புணரி', 'திருமன்னி விளங்கு', 'பூமியும் திருவும்', 'பூமருவிய திருமடந்தையும்', 'திருமன்னி வளர இருகுவடனைய', 'புகழ்மாது விளங்க', 'வீரமே துணை', 'பூமேலரிவையும்', 'பூமேவிவளர', 'பூமாதுவளர', 'திருமகள் சயமகள்', 'சுங்கந்தவிர்த் திருணீக்கி யுலகாண்ட' என்பன போன்ற பலவகைகளில் தொடங்குகின்றன. இவைகளெல்லாம் இவன் ஆட்சிச் சிறப்பை உயர்த்துக் கூறுகின்றனவே யல்லாமல் சரித்திர நிகழ்ச்சிகளுள் ஒன்றையும் கூறவில்லை. சிதம்பரத்தில் இவன் முடி சூடியதாகவோ, அல்லது அந்நகரத்தைப் புதுப்பித்து அழகுபடுத்தியதாகவோ கருதக்கூடிய வண்ணம் இவனது ஒரு சாஸனம் அமைந்துள்ளது. திருப்புறம்பயத்தில் காணப்படும் இவனது ஏழாம் ஆட்சியாண்டுச் சாஸனத்தில் தில்லைநகரத் திருப் பணியும், கோயில் திருப்பணியும் இவனால் இயற்றப்பட்டன வாகக் கூறப்பட்டுள்ளன. உலாக்கள் இவற்றைப்பற்றி மிக விரிவாகக் கூறுகின்றன. இச் செய்திகள் தக்க யாகப்பரணியிலும் இராசராச சோழனுலாவிலும் சுருக்கமாகக் கூறப்படுவதாலும் விக்கிரமசோழன் சாஸனங்களிலும் தில்லைத் திருப்பணி கூறப் படுவதாலும் திருப்பணி விக்கிரமசோழன் காலத்தே தொடங்கப்

பெற்றுக் குலோத்துங்க சோழன் பட்டத்துக்கு வந்த சில ஆண்டு களுக்குப்பின் முடிவுற்றதாகக் கருதுவதற்கு இடமுண்டு.

போர்ச் செய்தி ஒன்றும் சாஸனங்களில் கூறப்படாமையால் இவனாட்சி அமைதி நிலவியதாக இருந்ததென்று சொல்லலாம். தில்லைக் கோவிந்தராஜப் பெருமாள் இவனால் எடுத்தெறியப்பட்ட தாக உலாவும் தக்கயாகப் பரணியும் கூறுகின்றன. இவனால் ஆத ரிக்கப்பட்ட புலவர்கள் ஒட்டக்கூத்தரும் சேக்கிழாரும் ஆவர்: கூத்தர் இவனுக்கு வித்தியா குருவாகவும் விளங்கினர். கங்கைகொண்ட சோழபுரமே தலைநகராக விளங்கிவந்தது. இவன் தனது மூன்றாம் ஆட்சியாண்டில் விக்கிரமசோழபுரத்து அரண்மனையில் வாழ்ந்துவந்ததாக ஒரு சாஸனம் கூறுகின்றது. திருமழபாடிச் சாஸனத்தால் இவனுக்கு இருமனைவியர் இருந்தன ரென்பது அறியப்படும். அவருள் முக்கியமானவள் புவனமு ழுதுடையாள் என்னும் தியாகவல்லி; மற்றொருத்தி மலாடர் குலத்தைச் சேர்ந்த முக்கோக்கிழானென்பாள்.

இவன் கொண்ட பட்டங்களுள் மிகவும் பிரசித்தமானது அநபாயனென்பது உலாவினாலும் பெரிய புராணத்தாலும் திருமந்திர வோலையான அநபாய மூவேந்த வேளானென்பவன் பெயரமைதியாலும் விளங்கும். அநேக ஊர்களில் இவனால் அளிக்கப்பட்ட நிலங்கள் அநபாயநல்லூரென்று வழங்கப்பட் டன. பேரம்பலம் பொன்வேய்ந்த பெருமாள், திருநீற்றுச் சோழன், எதிரிலிச்சோழன், கலிகடிந்த சோழன் என்பன வேறு சில பட்டங்கள்.

இவன் தந்தைகாலத்தைப் போலவே இவன் காலத்தும் இவன் கீழ்த் தலைவர்களும் பலதானங்கள் அளித்த செய்தி சாஸனங் களால் தெரியவருகின்றது. அவர்களுள் முக்கியமானவர்கள் நாலாயிரவன் அம்மையப்பன், அம்மையப்பன்கண்ணுடைய பெரு மாள், திருமாணிகுழிப்பக்கத்தைச் சேர்ந்த சிறு பகுதியைக் காத்துவந்த பல்லவத் தலைவனும் குலோத்துங்க சோழக் காடவரா யனென்னும் மறுபெயருடையவனுமான மோகனாட்கொல்லி என் பவர்கள். இவர்களுள் மோகனாட்கொல்லி சில ஆண்டுகளுள் உயர் நிலையை யடைந்தானென்பது திருநாம நல்லூர், திருவதிகை விருத்தாசலம் முதலிய பற்பல இடங்களில் பல பெயர்களோடும் பட்டங்களோடும் இவன் பெயர் காணப்படுவதால் அறியப்படும். இவன் திருநாம நல்லூர், திருவதிகை முதலிய இடங்களிலுள்ள ஆலயங்களுக்குப் பொன்னாபரணங்களும், பலதானங்களும் செய்து அளித்ததோடு விருத்தாசலத்தில் இறைவன் மஹாஸ்நபனத்தின்

பொருட்டு ஏழிசைமோகன் என்ற ஒரு மண்டபம் கட்டினு னென்றும் படிப்படியாக இவன் பட்டப்பெயர்களும் உயர்வடைந் தனவென்றும் அவ்விடங்களிற் காணப்படும் சாஸனங்கள் கூறு கின்றன. இவன் பரம்பரையில் தோன்றிய கோப்பெருஞ் சிங்கனே பிற்காலத்தில் சோழ சாம்ராஜ்யத்தை நிலைகுலையச் செய்தவன். ராஜராஜ மகத நாடாள்வான் என்னும் வாண குலத்தலைவன், திருக்கோவலூரைச் சூழ்ந்த சேதி நாட்டை ஆண்ட மலையமான்களுள் விக்கிரம சோழச் சேதிராயன், அவன் மகனுன விக்கிரமசோழக் கோவலராயன், கிளூர் மலையமான் குலோத்துங்க சோழச் சேதிராயன் என்பவர் மலையமான் களுட் சிலர். தமிழ்நாட்டுச் சிற்றரசர்களுள் அடிக்கடி கூறப் படும் வேறு இருவர் நுளம்பனும், அதியமானும் ஆவர். சீயகங் கன் என்னும் கங்கர் குலத் தலைவன் காளஹஸ்திக் கோயிலுக் குத் தானம் அளித்ததாகக் கூறப்படுகின்ருன். குலோத்துங்க சோழ யாதவராயனென்னும் கட்டிதேவன் கோயிலில் தபஸ்வி களுக்கும், பிராமணர்களுக்கும், ஏனையோருக்கும் உணவளித் தற்கு ஒரு கிராமத்தைத் தானம் செய்ததாக ஒரு சாஸனம் கூறும்.

இவன் கி. பி. 1150-ஆம் ஆண்டுவரையில் ஆண்டதாகத் தெரிகிறது.

இவன்மீது ஒட்டக்கூத்தருக்கு உள்ள பேரன்பு உலா, பிள்ளைத் தமிழ் என்னும் இரண்டு பிரபந்தங்கள் பாடியிருத்த லால் விளங்கும். இது, "பாடிய, வெள்ளைக் கலியுலா மாலை யொடு மீண்டுமவன், பிள்ளைத் தமிழ்மாலை பெற்ருேனும்" (சங்கர சோழனுலா, 24-5) என்பதனுலும் வலியுறுகின்றது.

---

## இரண்டாம் இராசராசசோழன் வரலாறு

மூன்ரும் உலாவின் பாட்டுடைத் தலைவனும் தக்க யாகப் பரணியை ஆக்குவித்தோனும் ஆகிய 'இராசராச சோழன் II' என்பவன் அநபாயனென்று சிறப்பிக்கப்படுபவனும் ஸ்ரீபீடங் கண்ட பெருமாளென்று தக்க யாகப்பரணியுரையாசிரியரால் சுட்டப்படுபவனும் தில்லையம்பலம் பொன்வேய்ந்து அங்கே பல திருப்பணிகளைச் செய்வித்தவனுமாகிய இரண்டாங் குலோத் துங்க சோழனுடைய திருக்குமாரனுவன். சோழேந்திர சிம்மன், கண்டன், வரோதயன், வீரோதயன், ராஜகம்பீரன், எதிரிலிச் சோழன், நெறியுடைச் சோழன், திரிபுவன சக்கரவர்த்திகள்

கோநேரின்மை கொண்டான் என்னும் பட்டங்களையுடையவன்; ஒட்டக்கூத்தர் பாடிய உலாவைப் பெற்ற பெருமை வாய்ந்தவன்; அவரால் வரராசராசனென்று சிறப்பிக்கப் பெற்றவன்.

இவன் கி. பி. 1146-ஆம் ஆண்டில் சிங்காதன மேறினன். "பூமருவிய புவிமாதும்", "பூ மருவிய பொழிலேழும்", "புயல் வாய்த்து வளம்பெருக", "கடல் சூழ்ந்த பார்மாதர்" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்திகள் இவனுக்குண்டு.

இவனுக்குப் புவனமுழுதுடையாள், தரணி முழுதுடையாள், உலகுடை முக்கோக்கிழானடிகள், அவனி முழுதுடையாள், தென்னவன் கிழானடிகள் என ஐவர் மனைவியரிருந்தனரென்பதும் அவர்களுள் புவனமுழுதுடையாள் இவன் பட்டத்துத் தேவியென்பதும் மெய்க்கீர்த்திகளால்விளங்குகின்றன, இவன்காலத்தில் காவிரிப்பூம் பட்டினம், தஞ்சை, பழையாறை, கங்கைகொண்ட சோழபுரம், உறையூரென்பன தலைநகர்களாக இருந்தன. இராசராசனுலாவில் அரசன் புகார்வீதியில் உலாப்போந்தானெனக் குறிப்பிடப்படுவதாலும் வேறு சில ஆதாரங்களாலும் பெரும்பான்மையும் காவிரிப்பூம்பட்டினமே இவனுடைய தலைநகராகச் சிறந்திருந்ததென்று தெரிகின்றது.

தன்குல தெய்வமான ஸ்ரீ நடராஜப் பெருமானிடம் விசேஷ பக்தி பூண்டவன்; "தொல்லைத் திருமரபிற் கெல்லாந் தொழுகுலமாம், தில்லைத் திருநடனஞ் சிந்தித்து" (இராசராச. 47.) இவனுடைய முன்னோர் சிலரால் அனுதரவு செய்யப்பட்டுவந்த வைணவ சமயத்தை மீண்டும் தன் நிலை யடையச் செய்தனன்; "விழுந்த வரிசமயத்தையு மீளவெடுத்து" (இராசராச மெய்க்).

இவன் காலத்து ஒருவகைப் போரும் நிகழவில்லையாதலின் நாடு மிகவும் அமைதியாக இருந்தது. இவனுடைய அரசாட்சியின் தன்மையும் இவன் குடிகளைக் காத்துவந்த இயல்பும் கீழ்க் கண்டவாறு இவன்மெய்க் கீர்த்தியிற் பாராட்டப்பட்டுள்ளன: "ஆதியுகங், கொழுந்துவிட்டுத் தழைத் தோங்கக் கோடாதறங் குளிர் தூங்க, மாரிவாய்த்து வளஞ்சுரக்கத் தாரணியோர் பிணி நீங்க, நல்லோர்தங் கற்புயர நான்மறையோர் தொழில்வளர, எல்லோருந் தனித்தனியே வாழ்ந்தனமென மனமகிழ்ந்து, ஒருவருடனொருவர்க்கு மொன்றினுட னொன்றுக்கும், வெருவருபகை மனத்தின்றி விழைந்துகாத லுடன்சேர, இந்திரன்முதற் றிசாபாலரெண்மருமொரு வடிவாகி, வந்தபடி தரைநின்று மனுவாணை தனிநடாத்தி......தந்தையிலோர்க்குத் தந்தையாகியுந் தாயிலோர்க்குத்

தாயாகியும், மைந்தரிலோர்க்கு மைந்தராகியு மன்னுயிர்கட் குயிராகியும்........அரசியற்கை முறை நிறுத்தி."

சிலாசாஸனங்களினுல் இவன் காலத்தில் சில சில தலங்களில் இலகுளீச பாசுபதர், வாமமதத்தார், சைவர், வைணவர் முதலிய பல சமயத்தினரும் கவலையின்றி வாழ்ந்திருந்தன ரென்பது அறியப்படும். இன்னும் பல தலங்களில் பல திருப்பணிகள் இவனுல் இயற்றப்பட்டன. அவற்றுள் திருப்பனந்தாளிலிருந்து ஸ்ரீ தாடகேச்சரத்து நாயகர் தீர்த்தங்கொடுக்கக் கொள்ளிடத் துக்கு எழுந்தருளுதற்காக ஒரு சாலை அமைக்கப்பெற்று இவன் பேரால் * 'ராஜகம்பீரன் திருவீதி' என்று வழங்கப்பட்டதென் பதும் † திருப்பாலைத் துறையுடைய மகாதேவருக்குச் சில நிலங் கள் வழங்கப்பட்டன வென்பதும் அந்நிலங்கள் உள்ள இடத் திற்கு ராஜகம்பீர நல்லூரென்னும் பெயர் வைக்கப்பட்டதென்ப தும் குறிப்பிடத் தக்கன.

இவன் ஒருசமயம் துலாபுருடதானம் செய்தனன். அப்போது அக்காட்சியைக் கண்டு களித்து ஒட்டக்கூத்தர், "தொழுகின்ற மன்னர்" (தமிழ்நா. 124) என்ற தொடக்கத்தையுடைய செய் யுளைப் பாடினர்.

இவன் தமிழில் மிக்க அபிமானமுடையவனுதலால் பல புலவர்களை ஆதரித்து வந்ததோடு கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட் டக்கூத்தரை மிக்க மரியாதையோடு உபசரித்து வேண்டியவற்றை யெல்லாம் உதவிப் பாதுகாத்து வந்தான். இவன் காலத்தில் ஒட்டக்கூத்தர் முதுமையுடையவராக இருந்தனரென்று தெரிகின் றது. ஒரு சமயத்தில் ஆதனத்திலிருந்து எழும்பொழுதோ நடக்கும் பொழுதோ அவர் தளர்ச்சியுறுவதுகண்டு அவருக்கு இம்மன்னர் மன்னன் கைகொடுத்துதவினுன். அப்போது அப்புலவர் சிகாமணி மிக மகிழ்ந்து, "கொலையைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச், சிலையைத் தடவிய கையே யிதுசெக தண்டத்துள்ள, மலையைத் தடவிய விந்தத்தடவி மலைந்த வொன்னுர், தலையைத் தடவி நடக் குங்கொல் யானைச் சயதுங்கனே" (தமிழ்நா. 134) என்று இவன் கையைச் சிறப்பித்துப் பாடினுர். இவ்வரிய செயலால் இவ்வர சன் அப்புலவரிடத்தில் வைத்திருந்த பேரன்பும், எளியனுக இருத்தலும் புலப்படுகின்றன. அவர், தன்மீது பாடிய உலாவை அரங்கேற்றுகையில் ஒவ்வொரு கண்ணிக்கும் ஒவ்வோராயிரம்

---

* Annual Report of Epigraphy, No. 45 of 1914.

† A. R. No. 440 of 1012.

பொன் வழங்கினான். தக்க யாகப்பரணியின் கடவுள் வாழ்த்திலும் இறுதிவாழ்த்திலும் இடையிலும் அவராற் பலவாறு பாராட்டப்பெற்றனன்.

தனது சபையிற் பல புலவர்கள் கூடித் தமிழ்ச் சுவையை எடுத்துப் பாராட்ட அவற்றை விரும்பிக் கேட்டு மகிழ்ந்து வீற்றிருக்குமியல்பினனாதலின், "செய்ய தமிழ் முழங்கத் தெய்வப் பொதியிலாய்" (இராசராச. 67) என்று செந்தமிழ்ப் பரமாசாரியராகிய அகத்திய முனிவரும் தமிழ்ச் சங்கமும் இருந்த பொதியின் மலையாக இவன் அவை உருவகிக்கப்பட்டிருத்தலும், இயலிசை நாடகமாகிய முத்தமிழும் செழித்தோங்க அவற்றில் வல்ல புலவர்களைப் பாதுகாத்து வந்தமையால் "முத்தமிழ்க்குந் தலைவன்" (இராச. மெய்க்.) என்று பாராட்டப் படுதலும் இவனுக்குத் தமிழின் பாலுள்ள பேரன்பைத் தெரிவிக்கின்றன.

இவனுடைய காலத்தில் மகா சாமந்தனாக இருந்தவன் ஒட்டக்கூத்தரால் தக்க யாகப்பரணியில் பாராட்டப்பட்ட திருச்சிற்றம்பல முடையான் பெருமாள் நம்பியென்பவன், திருமந்திர வோலைக்காரனாக இருந்தவன் இராஜாசிரயப் பல்லவராய னென்பவன்.

சில நாடுகளின் பெயரும் ஊர்களின் பெயரும் இவன் காலத்தில் மாற்றப்பட்டு வழங்கின. அவற்றுட் சில ராஜகம்பீரன் வளநாடு, உலகுடை முக்கோக்கிழானடி வளநாடு, ராஜகம்பீர நல்லூர் முதலியன. ராஜகம்பீரன் மலையெனப் பெயரிய மலையும் ஒன்றுண்டு.

இவனுக்கு வழங்கிய ஏனைய பெயர்கள் இராச கம்பீரன், இராச புரந்தரன், கண்டன், குலதீபன், சனநாதன், சொக்கப் பெருமாள், தெய்வப்பெருமாள், வரராசராசன்.

இம் மன்னர்பிரான் கி. பி. 1173-ஆம் வருஷம் வரையில் இருந்தானென்று தெரிகின்றது.

சங்கரசோழனுலா வாசிரியர் இவனை, "தெள்ளித்தம், முன்னையகரிலவன் மூதுலாக் கண்ணிதொறும், பொன்னையிரஞ்சொரிந்த பூபதியும்" (கண்ணி, 25-6) என்று பாராட்டிக் கூறியுள்ளார்.

உ

கணபதி துணை

# விக்கிரம சோழனுலா



1. சீர்தந்த தாமரையாள் கேள்வன் றிருவுருவக்
கார்தந்த வுந்திக் கமலத்துப்—பார்தந்த

2. ஆதிக் கடவுட் டிசைமுகனு மாங்கவன்றன்
காதற் குலமைந்தன் காசிபனும்—மேதக்க

3. மையறு காட்சி மரீசியு மண்டிலஞ்
செய்ய தனியாழித் தேரோனும்-மையல்கூர்

4. சிந்தனை யாவிற்கு முற்றத் திருத்தேரில்
மைந்தனை யூர்ந்த மறவோனும்—பைந்தடத்

5. தாடு துறையி லடுபுலியும் புல்வாயும்
கூடநீ ரூட்டிய கொற்றவனும்—நீடிய

## குறிப்புரை

1. சீர்தந்த : இது விக்கிரம சோழனென்னும் பெயருக்குப் பொருத்தமான மங்கல முதன்மொழி. தாமரையாள் கேள்வன் - திருமால். திருவுருவமாகிய கார் தந்த ; கார் - மேகம். பார்தந்த - பூமியைப் படைத்த.
(பி - ம்.) 'திருவுருவாம்', 'திருவுதரக்'

2. ஆதிக் கடவுளாகிய திசைமுகன். ஆங்கவன் : ஒரு சொல். குலமைந்தன் - மேன்மையையுடைய மகன். மேதக்க - மேன்மை பொருந்திய.

3. மையறு காட்சி - குற்றமற்ற அறிவையுடைய. மண்டிலம் - வட்டவடிவம். செய்ய - சிவந்த. தனியாழி - ஒற்றைச் சக்கரம். தேரோன் - சூரியன் ; குலோத். உலா, 1 ; இராசராச. 2.
(பி - ம்.) 'மண்டிலஞ்சேர்'

4. சிந்தனை-கவலை. முற்ற - முடியும் பொருட்டு. மறவோன் - ஆதிமனு ; நியாய வீரன் என்றபடி.
(பி - ம்.) 'திருத்தேருள்' 'ஊர்ந்த மனுவோனும்'

5. ஆடுதுறையில் - நீராடுந் துறையில். அடுபுலி - மானைக் கொல்லும் புலி. புல்வாய் - மான். கொற்றவன் : மாந்தாதா ; குலோத். உலா, 7, குறிப்பு : இராசராச. 5.

6. மாக விமானந் தனியூர்ந்த மன்னவனும்
போக புரிபுரந்த பூபதியும்—மாகத்துக்

7. கூற வரிய மனுக்கொணர்ந்து கூற்றுக்குத்
தேற வழக்குரைத்த செம்பியனும்—மாறழிந்

8. தோடி மறலி யொளிப்ப முதுமக்கட்
சாடி வகுத்த தராபதியும்—கூடார்தம்

9. தூங்கு மெயிலெறிந்த சோழனு மேல்கடலில்
வீங்குநீர் கீழ்கடற்கு விட்டோனும்—ஆங்குப்

10. பிலமதனிற் புக்குத்தன் பேரொளியா ளுகர்
குலமகளைக் கைப்பிடித்த கோவும்—உலகறியக்

---

6. மாகவிமானம் - தெய்வ விமானம். தனியூர்ந்த - தான் மட்டும் ஏறிச் செலுத்திய. போகபுரி - நாகருலகம்; இது போகத்திற் சிறந்ததென்பர்; சிலப். 1 : 22. பூபதி - அரசன்; இவ்வரசன் பெயர் தெரியவில்லை. மாகத்து - தேவவுலகத்தில்.

(பி - ம்.) 'விமானந்தனை.' 'மன்னவனப், போக புவிபுரந்த பூபதியு மியாகத்துக்'

7. மனு - மந்திரம். தேற - தெளியும்படி. செம்பியன் - கிள்ளி வளவன்; குலோத். உலா, 6. மாறு - பகைமை.

8. மறலி - யமன். முதுமக்கட்சாடி வகுத்தவன்; சுரகுரு என்பவன்: குலோத். உலா, 12; "அணிபெற வெழுதிய வழகிய குரைகவி னுட்செறி மட்சாடி, குடிபுக முடிபுனை சுரகுரு வழிமுதல் கொட்டுக சப்பாணி" (குலோத். பிள்ளைத். 39); "சித்தமகிழ்ந் தீனமறச் செங்கோ னடத்தநமன், உத்தம னென் றந்நா ளுயிர்கொடுபோ காமையினால், மொய்த்த முதியோர்க்கு முது மக்கட் சாடிபல, வைத்தகுல தீபனே மன்னுகோ மன்னுகோ" (திருவெண் காட்டுப் புராணம், சத்தியநல்விரதச். 9.) கூடார் - பகைவரான அசுரர்.

(பி - ம்.) 'மறலியொழிய', 'யொளிய'

9. தூங்கும் எயில் - ஆகாயத்தில் திரியும் மதில்கள்; "திறல்விளங் கவுணர் தூங்கெயி லெறிந்த, விறன்மிகு முரசின் வெல்போர்ச் சோழன்" (தொல். களவு. 11, ந. மேற்.); குலோத். உலா, 13. விட்டோன்: ஸம்ஹார் ஷண சக்கரவர்த்தி; குலோத். உலா, 14.

(பி - ம்.) 'கீழ்கடலில்'

10. பிலம் - பாதாளவுலகம். கோ: இவனைக் கிள்ளிவளவன் என்று கூறுவர்; குலோத். உலா, 19. நெடுமுடிக்கிள்ளி யென்றும் கூறுவர்; மணி. 24 : 29-59. காக்கும் - தன்னாற் காக்கப்படும். களி கூர்ந்து - சிங்கா தனத்தில் இருத்தலைப்போல மகிழ்ச்சி மிக்கு.

(பி - ம்.) 'கோனும்'

11. காக்குஞ் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து
தூக்குந் துலைபுக்க தூயோனும்—மேக்குயரக்

12. கொள்ளுங் குடகக் குவடு டறுத்திழியத்
தள்ளுந் திரைப்பொன்னி தந்தோனும்—தெள்ளருவிச்

13. சென்னிப் புலியே றிருத்திக் கிரிதிரித்துப்
பொன்னிக் கரைகண்ட பூபதியும்—இன்னருளின்

14. மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திவனும்—மீதெலாம்

15. எண்கொண்ட தொண்ணூ றிற்றின் மேலு மிருமூன்று
புண்கொண்ட வென்றிப் புரவலனும்—கண்கொண்ட

---

11. தூக்குந் துலை - புருவைவைத்து நிறுத்த தராசு. மேக்கு - மேலே.
(பி - ம்.) 'துலைப்புக்க'

12. குடகக் குவடு - குடக மலையை. பொன்னி - காவிரியை. தந்தோன் - சிவூகன்; குலோத். உலா, 15; இராசராச. 15, 85. தெள்ளருவி - தெளிந்த அருவிகளையுடைய.
(பி - ம்.) 'குடகைக்'

13. சென்னி - சிகரத்தில். புலியேறு இருத்தி - புலிக் கொடியை நாட்டி. கிரிதிரித்து - மேருமலையைத் திரியச் செய்து; 155; இராசராச. 17. கரை கண்ட பூபதி: கரிகாலன்; குலோத். உலா, 18; "தொக்க கலியின்மூ வாயிரத்துத் தொண்ணூற்றில், மிக்க கரிகால வேந்தனுந்தான் - பக்கம், அலைக்கும் புகழ்ப்பொன்னி யாறுகரை கண்டான், மலைக்கும் புயத்தானும் வந்து" (சோழமண்டல. மேற்.); 'கரிகாலக் கரை' (திருச்செந்துறைச் சாஸனம்.)

14. பொய்கை கவி கொண்டு - பொய்கையார் பாடிய களவழி நாற்பதைக் கொண்டு. வில்லவன் - சேரமான் கணைக்காலிரும்பொறை; குலோத். உலா, 20; இராசராச. 18; "பாடிய பொய்கை களவழி கேட்டுப் பழம்படியேபடிப் படிந்து, வாடிய பொறைய னைச்சிறை விட்ட மன்னவ னொருதிரு மருகன்" (குலோத். பிள்ளைத். 103); "சேரமான், தன்னடிக் கண்டு தளைவிடுத்தா யேழ்தளையுன், பொன்னடிக்குண் டென்பதென்ன புத்தியோ" (தமிழ் விடுதூது, 78-9.) பார்த்திவன்: கோச் செங்கட் சோழன். மீதெலாம் - மார்பு முழுவதும்.
(பி - ம்.) 'தளைவிடுத்த', 'மீதெல்லாம்', 'ஈதல்லால்'

15. எண்கொண்ட - மதித்தல் கொண்ட. தொண்ணூற்றுறு புண் கொண்டவன்; குலோத். உலா, 21; இராசராச. 19.

16. கோதிலாத் தேறல் குனிக்குந் திருமன்றம்
காதலாற் பொன்வேய்ந்த காவலனும்—தூதற்காப்

17. பண்டு பகலொன்றி லீரொன் பதுசுரமும்
கொண்டு மலைநாடு கொண்டோனும்—தண்டேவிக்

18. கங்கா நதியுங் கடாரமுங் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியனும்—வங்கத்தை

19. முற்று முரணடக்கி மும்மடிபோய்க் கல்யாணி
செற்ற தனியாண்மைச் சேவகனும்—பற்றலரை

20. வெப்பத் தடுகளத்து வேழங்க ளாயிரமும்
கொப்பத் தொருகளிற்றாற் கொண்டோனும்—அப்பழநூல்

---

16. தேறல் - சிவபெருமான். குனிக்கும் - கூத்தாடும். திரு மன்றம் - சிற்றம்பலம். பொன் வேய்ந்த - பொன்னோடுகளை வேய்ந்த. காவலன் : முதலாம் பராந்தகன். தூதற்கா - மேலாடையைக் களையும்படி சேரனால் அவமதிக்கப்பட்ட தன் தூதன் பொருட்டு.

(பி - ம்.) 'கோதிலாத் தெற்குக்'

17. பண்டு - முற்காலத்தில். ஈரொன்பது சுரம் - பதினெட்டுக் குறும் புகள்; குலோத். உலா, 24; இராசராச. 21. மலைநாடு - சேரநாட்டை. கொண்டோன்; முதல் இராசராசன். தண்டு ஏவி - சேனையை யனுப்பி.

(பி - ம்.) 'ஈரொன்பது சிரமும்', 'தண்டினால்'

18. கடாரம் - மலேயாவிலுள்ள 'கெடா' என்னும் நாடு. செம்பி யன் : இராஜேந்திர சோழன்; குலோத். உலா, 25, உரை. வங்கத்தை - வங்காளத்தை.

(பி - ம்.) 'கடாரமுங் கைவரக், கங்கா புரிபுரந்த கற்பகமும்'

19. மும்மடி - மூன்று முறை. கல்யாணி - சாளுக்கியருக்குரிய தலை நகரான கல்யாண புரம். சேவகன் : இராஜாதிராஜன். பற்றலரை - பகை வரை. வெப்பத்து - கோபத்தையுடைய. வேழங்கள் ஆயிரம் - ஆயிரம் யானைகளை; இவ்விதம் கூறுதல் ஒரு மரபு; "கண்ட நாயகர் காக்கு நவிலையில், கொண்ட வாயிரங் குஞ்சர மல்லவோ" (கலிங்கத். 385.)

(பி - ம்.) 'மும்முடி போய்க் கல்யாணம்', 'தனி யானைச்'

20. கொப்பத்து - கொப்பம் என்ற ஊரில்; இவ்வூர் கிருஷ்ணாநதிக் கரையிலுள்ள ஒரு தீர்த்தமென்றும் தற்காலத்தில் 'கித்ராபூர்' என வழங் கும் ஊராயிருக்கலாம் என்றும் கூறுவர் (சோழர்கள். பக். 307); இராசராச. 24. கொண்டோன் : இராசாதிராசன். அப்பழநூல் என்றது வேதத்தை.

21. பாடரவத் தென்னரங்க மேயாற்குப் பன்மணியால்
ஆடரவப் பாய லமைத்தோனும்—கூடல

22. சங்கமத்துக் கொள்ளுந் தனிப்பரணிக் கெண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனும்—அங்கவன்பின்

23. காவல் புரிந்தவனி காத்தோனு மென்றிவர்கள்
பூவலய முற்றும் புரந்ததற்பின்—மேவலர்தம்

24. சேலைத் துரந்து சிலையைத் தடிந்திருகால்
சாலைக் களமறுத்த தண்டினன்—மேலைக்

---

21. பாடுஅரவம் - ஓதப்படும் ஓசையையுடைய; அரங்கத்திற்கு அடை. அரங்கமேயாற்கு - அரங்கநாதருக்கு. ஆடு அரவப்பாயல் - சேஷசயனம். அமைத்தோன்: இராஜமகேந்திரன்; இவன் பெயரால் ஸ்ரீரங்கத்தில் இராஜமஹேந்திரன் திருவீதி என ஒரு தெரு உள்ளது.

(பி - ம்) 'கூடலர்', 'கூடலார்'

22. கூடல சங்கமம்: இது துங்கபத்திரையும் கிருஷ்ணநதியும் கூடுமிடத்திலுள்ள ஓரூர் (சோழர்கள். பக். 321.) பரணி - பரணி யென்னும் நூல். துங்கம் - உயர்வு. துணித்தோன்: வீரராஜேந்திர சோழன்; இராசராச. 25.

(பி - ம்.) 'சங்கமத்தைக்', 'துங்கமத்த'

23. அவனி காத்தவன்; அதிராஜேந்திரன். மேவலர்தம் - பகைவருடைய.

(பி - ம்.) 'முற்றும் புரிந்தவனும் மேவலார்'

24. சேல் - பாண்டியருக்குரிய மீனக்கொடி. சிலை - சேரருக்குரிய விற்கொடி. இரு கால் - இரண்டு முறை. சாலைக்களம்: இவ்வூர் முத்துச் சலாபம் உடையதென்பதும் அதன்பொருட்டு இது தாக்கப்பட்டதென்பதும், "தண்டில்விழி குத்தெயில் தகர்த்துடைய முத்துச் சலாபமுழு தும்பொறையர் சாலையொடு கொண்டாய்" (குலோத். பிள்ளைத். 91) என்னும் செய்யுளால் அறியப்படும். தண்டு - படை. தண்டினன்: இவன் முதற் குலோத்துங்கன். இவன் பாண்டியரையும் சேரரையும் வென்றமை, "விட்ட தண்டினின் மீனவ ரைவரும், கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலுநீ", "போரின் மேற்றண்டெடுக்கப் புறக்கிடும், சேரர் வார்த்தை செவிப்பட்ட தில்லையோ", "வேலைகொண்டு விழிஞ மழித்ததுஞ், சாலை கொண்டதுந் தண்டுகொண்டேயன்றோ" (கலிங்கத். 380-82) என்னும் தாழிசைகளால் விளங்கும். "மீனவர் நிலைகெட வில்லவர் குலைதர" என்ற குலோத்துங்கனது மூன்றாம் மெய்க்கீர்த்திப் பகுதியும் இதனை வலியுறுத்தும்.

(பி - ம்.) 'சிலையைக் கடிந்து'

25. கடல்கொண்டு கொங்கணமுங் கன்னடமுங் கைக்கொண்
டடல்கொண்ட மாராட் டரசை—உடலை
26. இறக்கி வடவரையே யெல்லையாத் தொல்லை
மறக்கலியுஞ் சுங்கமு மாற்றி—அறத்திகிரி
27. வாரிப் புவனம் வலமாக வந்தளிக்கும்
ஆரிற் பொலிதோ ளபயற்குப் - பார்விளங்கத்
28. தோன்றியகோன் விக்கிரம சோழன் ஞெடைத்தும்பை
மூன்று முரசு முகின்முழங்க—நோன்றலைய

---

25. மேலைக் கடல்கொண்டு - மேல்கடலைத் தனக்கு உரிமையாகக் கொண்டு. கொங்கணம் - வடகன்னடம்; இது சங்க நூல்களில் 'கொண்கானம்' என வழங்கும். கன்னடம் - தென்கன்னடம். கன்னட தேசத்தரசர்களுக்கும் சோழர்களுக்கும் பகைமை இருந்து வந்ததென்பது 'சோழனுடைய ஐசுவரியத்தின் பெருமை கண்டு சகியாதே வெம்பித்திரியும் கன்னட ராசனை சந்த்ர கௌரிவல்லபன் யுத்தம் செய்ய அவனைக் கலியாணபுரத்தினின்றும் தாக்க அவனும் துரப்புண்டு விந்தாடவியிற் சென்று புக' (தக்க. 62, உரை) என்னும் பகுதியால் அறியப்படும். மாராட்டரசை - பெரிய ராஷ்டிர கூடர்களுக்கு அரசனை ; 72.

(பி - ம்.) 'அடல்கொண் டமரா டரச ருடலை', 'மாரட்டரசை'

26. வடவரை - இமயமலை. எல்லையா - தன் நாட்டிற்கு எல்லையாக. மறக்கலி - கொடுமையுடைய கலியை. சுங்கமும் மாற்றி - பரதாழ்வான் முதலாக வந்த சுங்கத்தையும் தவிர்த்து : தவிர்த்தவன் முதற்குலோத்துங்க சோழன் ; குலோத். உலா, 26 ; இராசராச. 26. இதனால் முதற்குலோத்துங்கனுக்குச் சுங்கம் தவிர்த்த குலோத்துங்க சோழ தேவர் என்ற பெயருண்டாயிற்று. அறத்திகிரி - தருமத்தை வளர்க்கும் ஆக்ஞாசக்கரம்.

27. வாரிப் புவனம் - கடலை எல்லையாகவுடைய உலகத்தை. வலமாக வருதல் ஒரு மரபு ; "குணகடல் பின்ன தாகக் குடகடல், வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப, வலமுறை வருதலு முண்டென்று" (புறநா. 31 : 13-5) ; "வங்க மறிகடல் சூழெழு பார்வலம் வந்த மனுகுல சோழனை" (வி. பா. 17-ஆம் போர். 66.) ஆரிற்பொலி - ஆத்திமாலையால் விளங்கிய. அபயற்கு - முதற்குலோத்துங்க சோழனுக்கு. அபயன் : கலிங்கத். 2, 3, 12, 16. (பி - ம்.) 'வாரித் திகிரி' 'வலமாகத் தந்தளிக்கும்'

28. தொடைத்தும்பை - தும்பை மாலையை அணிந்த. மூன்று முரசும் - வீர முரசும், நியாய முரசும், தியாக முரசும் ; 121, 272 ; மண முரசுடனே ஏனை யிரண்டு முரசென்பாருமுளர் ; புறநா. 58: 12, உரை. முகில் முழங்க - மேகத்தைப் போல ஒலிக்க. வாத்தியங்களுக்கும் போருக்குரிய பூவைச் சூட்டுதல் மரபு : "பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக், குருதி வேட்கை யுருகெழு முரசம்" (புறநா. 50 : 4-5) ; "நினது, தாம முரசு" (294) என்பர் பின். நோன்தலைய - வலிய இடத்தையுடைய.

(பி - ம்.) 'முரச முகில்'

29. மும்மைப் புவனம் புரக்க முடிகவித்துச்
செம்மைத் தனிக்கோ றிசையளப்பத்—தம்மை

30. விடவுட் படுத்து விழுக்கவிகை யெட்டுக்
கடவுட் களிறு கவிப்பச்—சுடர்சேர்

31. இணைத்தார் மகுட மிறக்கி யரசர்
துணைத்தா ளபிடேகஞ் சூடப்—பணைத்தேறு

32. நீராழி யேழு நிலவாழி யேழுந்தன்
போராழி யொன்றுற் பொதுநீக்கிச்—சீராரும்

33. மேய திகிரி விரிமே கலையல்குற்
றூய நிலமடந்தை தோள்களினும்—சாயலின்

---

29. மும்மைப் புவனம் - தமிழ் நாட்டின் மூன்று பிரிவுகள். இதனுற் சில சோழ அரசர்கள் திரிபுவன சக்கரவர்த்திகள் என்று வழங்கப் பெறுவர். மும்மை எண்ணின் மேல் நின்றது; "ஒருமைச் செயலாற்றும்" (குறள், 835) என்பது போல. திசை அளப்ப - எட்டுத் திசைகளையும் தனக்கு உள்ளாக்க. தம்மை என்றது திசைகளை.

(பி - ம்.) 'முடிசூடிச்', 'முடிசூட்டிச்' 'தம்முள் விட'

30. விட உட்படுத்து - மிகவும் உள்ளே அடக்கி. விழுக்கவிகை - சிறந்த குடை. எட்டு கடவுட்களிறு - எட்டுத் திசைகளிலுமுள்ள தெய்வத் தன்மை பொருந்திய யானைகளை. கவிப்ப - உள்ளே அடக்க; "காத்துக் குடையொன்று லெட்டுத் திசைகவித்த, வேத்துக் குலகிரியின் மேருவே" (330.) (பி - ம்.) 'விடவுட்படுத்த', 'களிறுங்'

31. இணைத்தார் மகுடம் - இரண்டு மாலைகளை யணிந்த கிரீடத்தை; என்றது சூடும் பூவையும் அடையாளப்பூவையும்; "கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே" (தொல். மரபு. 79.) இறக்கி - நீக்கி. அரசர் - மற்றச் சிற்றரசர். துணைத்தாள் அபிடேகம் - விக்கிரம சோழனது இரண்டு கால்களாகிய கிரீடத்தை; "பலர்முடிமேல், ஆர்க்குங் கழற்கா லனகன்" (69-70.) பணைத்து ஏறு - பெருத்துமிக்க.

(பி - ம்.) 'சூட்டப்'

32. நீராழி ஏழும் - கடல்க ளேழும். நிலவாழியேழும் - ஏழு தீவுகளும். கடலேழு, பூமி ஏழு: குலோத். உலா, 150 - 51. போராழி ஒன்றால் - போரைச் செய்யும் தனது சக்கரம் ஒன்றால். பொது நீக்கி - மற்ற அரசருக்கும் பொது என்பதை விலக்கி; 58; "பொதுமட்க, வாங்கெயினேமி வரையாக மண்ணாண்டு" (குலோத். உலா, 12 - 3.)

33. திகிரிவிரிமேகலை - சக்கரவாளகிரியாகிய விரிந்த மேகலையை யணிந்த. நிலமடந்தை தோள்களில் இருத்தல்; "தடமுலைப் பார்மடந்தை தன்னுடனே தோளிற், சுடர்மணிக் கேயூரஞ் சூழ" (46.) சாயல் - மென்மை.

34. ஓது முலகங்க ளேழுந் தனித்துடைய
கோதில் குலமங்கை கொங்கையினும்—போதில்

35. நிறைகின்ற செல்வி நெடுங்கண் களினும்
உறைகின்ற நாளி லொருநாள்—அறைகழற்காற்

36. றென்னர் திறையளந்த முத்திற் சிலபூண்டு
தென்னர் மலையாரச் சேறணிந்து—தென்னர்

37. வரவிட்ட தென்ற லடிவருட வாட்கண்
பொரவிட்ட பேராயம் போற்ற—விரவிட்ட

38. நித்திலப் பந்தர்க்கீழ் நீணிலாப் பாயலின்மேல்
தொத்தலர் மாலைத் துணைத்தோளும்—மைத்தடங்

---

34. உலகங்களேழும் தனித்துடைய குலமங்கை: விக்கிரம சோழன் தேவியின் பெயர்; இவள் பெயர் சாஸனங்களில் 'முக்கோக்கிழான்' என்று வழங்கும்; 39.

35. போதில் நிறைகின்ற செல்வி: திருமகள்.

(பி - ம்.) 'நாளி னொருநாள்'

36. தென்னர் - பாண்டியர். திறையாக அளந்த முத்து. மலை - பொதியில் மலை. ஆரச்சேறு - சந்தனக் குழம்பை. "தன்கடற் பிறந்த முத்தி னாரமும், முனைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலைத், தெறலரு மரபிற் கடவுட் பேணிக், குறவர் தந்த சந்தி னாரமும், இருபே ராரமு மெழில்பெற வணியும்" (அகநா. 13 : 1-5); "கோவா மலையாரங் கோத்த கடலாரம், தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே" (சிலப். 17 : உள்வரி வாழ்த்து.) (பி - ம்.) 'சேறளைந்து'

37. தென்னர் வரவிட்ட தென்றல் என்றது பாண்டிநாட்டிலுள்ள பொதியில்மலையில் தோன்றி வடக்கே செல்லுதல் பற்றி; "மலையத் தோங்கி மதுரையின் வளர்ந்து, புலவர் நாவிற் பொருந்திய தென்றல்"; "புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பிற், பொதியிற் றென்றல் போலா தீங்கு, மதுரைத் தென்றல் வந்தது காணீர்" (சிலப். 13 : 25 - 6, 130 - 32.) பேராயமென்றது மகளிரை; "இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (சிறுபாண். 220); 'இவர் அரசனுக்குப் பாட்டாலும் கூத்தாலும் வார்த்தையாலும் மகிழ்ச்சியைச் செய்யும் மகளிர்' (பொருந. 84-5, ந.) விரவிட்ட - கலந்த. (பி - ம்.) 'போராயம் போற்ற', 'வரவிட்ட'

38. நிலாப் பாயல் - நிலாவைப் போன்ற வெண்மையான படுக்கை. பாயலின் மேல் எய்திய (40) என இயைக்க. தொத்து அலர் மாலை - பூங் கொத்துக்கள் அலர்ந்த மாலையை அணிந்த. துணை - இரண்டு; இதனைக் கண்ணோடும் முலையோடும் கூட்டுக.

(பி - ம்.) 'பாயன்மேற்'

39. கண்ணு முலையும் பெரிய களியன்னம்
எண்ணு முலகங்க ளேழுடைய—பெண்ணணங்கு

40. பெய்த மலரோதிப் பெண்சக்ர வர்த்தியுடன்
எய்திய பள்ளி யினிதெழுந்து—பொய்யாத

41. பொன்னித் திருமஞ் சனமாடிப் பூசுரர்கைக்
கன்னித் தளிர றுகின் காப்பணிந்து—முன்னை

42. மறைக்கொழுந்தை வெள்ளி மலைக்கொழுந்தை மோலிப்
பிறைக்கொழுந்தை வைத்த பிரானைக்—கறைக்களத்துச்

43. செக்கர்ப் பனிவிசும்பைத் தெய்வத் தனிச்சுடரை
முக்கட் கனியை முடிவணங்கி—மிக்குயர்ந்த

---

39. தோளும், கண்ணும், முலையும் பெரிய என்றது இவை பெருத்திருத்தல் உத்தம இலக்கணம் என்பதுபற்றி. "அகலல்குல் தோள் கண்ணென மூவழிப்பெருகி" (கலி. 108 : 2.) களியன்னம் என்றது அன்பின் மிகுதிக்குக் கூறியது; "ஆதரம் பெருகு கின்ற வன்பினு லன்ன மொத்தும்" (சீவக. 189.) உலகங்களேழுடைய பெண்ணணங்கு : உலக முழுதுடையாள்.

40. ஓதி - கூந்தலையுடைய. பெண் சக்ரவர்த்தி : குலோத். உலா, 31; உரை; "பெண்சக்ரவர்த்தி முகத்திரண்டு, விழியும் புருவமு மாகியிப் போதுன்னை வெல்கின்றவே" (தமிழ் நாவலர் சரிதை, 142.) பள்ளி - இங்கே துயில்.

(பி - ம்.) 'உடனெழுந்து'

41. பொய்யாத (40) பொன்னி - பருவம் பொய்த்தலில்லாத காவிரியாற்றின்; "வான்பொய்ப்பினுந் தான்பொய்யா, மலைத்தலைய கடற் காவிரி" (பட்டின. 5-6.) பூசுரர் - அந்தணர். கன்னித் தளிர் அறுகு - இளைய அறுகின் தளிராகிய. அறுகுமங்கலப் பொருள்; "அறுகெடுப் பாரயனுமரியும்" (திருவா. திருப்பொற் சுண்ணம். 5); "அறுகு வெண்மல ரளாய வாசநீர்" (சீவக. 2428.)

(பி - ம்.) 'பொன்னித்துறை மஞ்சனம்', 'புதுமஞ்சனம்'. 'முன்னர்'

42. மோலி - தலையில். கறை - நஞ்சு. (பி - ம்.) 'மௌலிப், பிறைக்'

43. செக்கர்ப்பனிவிசும்பு என்றது சிவந்த நிறமுடைமை பற்றி; "செவ்வா னன்ன மேனி" (அகநா. கடவுள். 8); "செக்க ரீசனை யொத்தது" (கந்த. குமாரபுரி. 3.) 42-3 ஆம் கண்ணிகளிற் சிவபெருமானை வணங்கியமை கூறப்பட்டது.

(பி - ம்.) 'செக்கர்த் தனிவிசும்பைத்'

209. பந்தாடி வென்று பருதி யகளங்கன்
சந்தாடு தோண்மாலை தாவென்று - பைந்துகிற்

210. றுகிலை பிடித்தலைக்கும் போதிற் றனிக்குடைக்கீழ்
யானைமேல் வெண்சா மரையிரட்டச் - சேனை

211. மிடையப் பவளமு நித்திலமு மின்ன
அடையப் பணிலங்க ளார்ப்ப - புடைபெயர

212. வார்ந்து மகர வயமீன் குலமுழுதும்
போந்து மறுகு புடைபிறழச் - சேர்ந்து

213. பதலை முழங்கப் பகட்டேற்றி விட்ட
மதலைகண் முன்னர் மலிய - விதலையராய்த்

---

209. பருதி அகளங்கன் - சூரியனைப் போன்ற ஒளியையுடைய விக்கிரம சோழன்; "செஞ்ஞா யிற்றுக் கவினை மாதோ" (புறநா. 4 : 16.) சந்தாடு தோள் மாலை - சந்தனத்தை அளைந்த தோளில் அணிந்த மாலையை. தா என்று - வாங்கித் தா என்று ; 200.

210. பைந்துகிற்றுகிலை - பசிய துகிலாகிய ஆடையை. அலைக்கும் போது - துன்புறுத்தும் சமயத்தில். தனிக் குடைக்கீழ் - ஒப்பற்ற குடையின் கீழ் ; என்றது மற்ற அரசர் குடைக்கு முன்னே சோழன் குடை விளங்குதல்பற்றி ; "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும், அறத்துவழிப் படூஉந் தோற்றம் போல, இருகுடை பின்பட வோங்கிய வொருகுடை, உருகெழு மதியி னிவந்துசேண் விளங்க" (புறநா. 31 : 1-4.) இரட்ட - மாறி அசைய.

(பி - ம்.) 'போதிற் சயதுங்கன்'

211. பவளம் - மகளிருடைய உதடு. நித்திலம் - அவருடைய பற்கள். அடைய - முழுவதும். பணிலங்கள் - சங்குகள். புடைபெயர - பக்கத்தில் பெயரும்படி.

212. வார்ந்து - நீண்டு. மகரவயமீன் - சுறுவாகிய வன்மையையுடைய மீன் ; என்றது மகளிருடைய கண்களை ; "இகல்விழி மகரமு மம்மகரம் பொரு விருமகரமு மாட" (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், 17.)

(பி - ம்.) 'மறுகும் வயமீன்', 'மகளிர் வயமின்' 'மறுகும்படி பிறழ' 'மறுகின்புடை புரளச் சேர்ந்த'

213. பதலை - ஒருவகை வாத்தியம் ; "பதலை யொருகண் பையென வியக்குமின்" (புறநா. 152 : 17) ; "பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்" (குறுந். 59 : 1.) பகட்டு ஏற்றிவிட்ட - யானையின்மேல் ஏற்றப்பட்ட. மதலை - ஒருவகை வாத்தியம் ; 294. விதலை - நடுக்கம்.

(பி - ம்.) 'மதலையர்'

214. தாழுந் தொழிலிற் கிளைபுரக்கத் தன்னடைந்து
வாழும் பரதர் மருங்கிண்ட - வீழுந்திக்

215. கன்னியு நன்மதையுங் கங்கையுஞ் சிந்துவும்
பொன்னியுந் தோயும் புகார்விளங்க - மன்னிய

216. செங்கோற் றியாக சமுத்திர நண்ணுதலும்
தங்கோ மறுகிற் றலைப்பட்டுத் - தங்களில்

217. ஒட்டிய வொட்ட முணராதே தோள்வளையும்
கட்டிய மேகலையுங் காவாதே - கிட்டித்

218. தொழுதா ளயர்ந்தா டுளங்கினாள் சோர்ந்தாள்
அழுதா ளொருதமிய ளானாள் - பழுதிலாக்

219. காக்குந் துகிலு மிலங்கு பொலன்கலையும்
போக்கு நிதம்பம் புனைகென்று - வீக்கும்

---

214. கிளை - சுற்றத்தாரை. பரதர் - கூத்தர்; பரதவர் என்னும் வேறு பொருளும் தோற்றியது. வீழ் உந்தி - விரும்பப்படும் சுழிகளையுடைய.
(பி - ம்.) 'தண்டடைந்து.'

215. கன்னி - கன்னியாகுமரி. புகார் - ஆற்றுமுகம்; "புகார்ப் புகுந்த பெருங்கலம்" (புறநா. 30 : 12); காவிரிப்பூம் பட்டினம்.
(பி - ம்.) 'தோயப்புகார்'

216. தியாக சமுத்திரம் : விக்கிரம சோழன் பட்டங்களுள் ஒன்று; இப்பெயருடைய ஊரொன்று கும்பகோணத்தின் பக்கத்திலுள்ளது. 'இவ்வூர் விக்கிரம சோழன் பட்டப்பெயரைக் கொண்டது : திருக்கோடி காவல் கோயில் தியாக சமுத்திரம் என்று பெயரிடப்பட்டது' (**சோழர்கள்**, Vol. 2. பக். 631); 331.

210-16. இக்கண்ணிகளில் விக்கிரமசோழனைத் தியாகசமுத்திரம் என்னும் அவனுடைய பட்டப் பெயருக் கேற்பக் கடலாக உருவகம் செய் திருப்பது பாராட்டற்குரியது. தம்கோ மறுகு - இராசவீதி. தலைப்பட்டு - கண்டு.

217. தங்களில் ஒட்டிய ஒட்டம் - மடந்தையும் அவளுடைய சேடியரும் தம்முள் செய்த பந்தயம்; 199-200. தோள்வளையும் மேகலையும் உடல் மெலிந்தமையால் நழுவின என்பது கருத்து. கிட்டி - விக்கிரம சோழனை நெருங்கி.

218. துளங்கினாள் - நடுங்கினாள். ஒரு தமியளானாள் - நாண்முதலான குணங்கள் நீங்க மிகத் தனித்தவளானாள்; 160.

219. கலை-மேகலை. போக்கும் நிதம்பம் - இழந்த அல்குல். புனை கென்று - அணிந்துகொள்ளுகவென்று. வீக்கும் - கட்டிய.

220. மணிக்கச்சுந் தம்முடைய வான்றூசுங் கொங்கை
பணிக்கக் கடைக்கண்கள் பாரா - அணிக்கமைந்த

221. குன்றாத நித்திலக் கோவையும் பொன்னிறத்த
பொன்றாத பட்டும் புனைகென்று - நின்று

222. கொடுத்தன கொங்கைகளுங் கொண்டன தானும்
அடுத்தனர் தோண்மே லயர்ந்தாள் - கடுத்துக்

223. கவரு மனங்களுடன் கைகலந்த தன்றித்
தவரு முதுகிளவித் தாய - ரவரெங்கும்

224. கூசினார் சந்தம் பனிநீர் குழைத்திழைத்து
பூசினா ராலி பொழிந்தொழிந்தார் - வீசினார்

---

220. மணிக்கச்சு - முத்தாலாகிய கச்சு; வான்றூசு-சிறந்த ஆடை; கச்சும் தூசும் கொங்கைக்கு; 'கச்சிட்டுக் கட்டுவது கொங்கைகள் தாம் காணாமல்; துகிலிட்டு மறைப்பது அவற்றைப் பிறர் காணாமல் (தக்க. 83, உரை.) கொங்கை பணிக்க - நகில்கள் நிதம்பத்துக்கு அளிக்க. பாரா - பார்த்து. அணிக்கு அமைந்த - ஆபரண மாதற்குப் பொருந்திய.

(பி - ம்.) 'தன்னுடைய வான்றூசும்' 'படைக் கண்கள் பாரி லணிக் கமைந்து'

221. நித்திலக் கோவை - முத்துமாலை; என்றது கண்ணீர்ப் பெருக்கை; " பண்பட்ட மென்மொழிப் பைந்தொடி கொங்கை பரக்கவை வேற், கண்பட்ட முத்த வடங்கண்டுங் காக்கிலன் காடவர்கோன் " (பெருந். 902.) பொன்னிறத்த பட்டு என்றது பசலையை.

(பி - ம்.) 'நித்திலத்த கோவையும்'

222. கண்கள் நித்திலக்கோவையையும் பட்டையும் கொடுத்தன. கொங்கைகளும் கோவையையும் பட்டையும் கொண்டன. தானும்-மடந்தையும். அடுத்தனர் - பக்கத்திலுள்ளாரது. கடுத்து - சினங்கொண்டு.

(பி - ம்.) 'அடுத்தன தோன்றாமல்', 'அடுத்தன தோண்மேல்', 'தடுத்துக், எடுத்துக்'

223. கவரும் - உயிரைக் கவரும். தவரும் = தவறும்.

(பி - ம்.) 'கைகலந்த போரில்'

224. கூசினார் - மனம் நடுங்கினார். சந்தனத்தைப் பனி நீரிலே குழைத்து. ஆலி - நீர்த்துளியை; " ஆலிவெந்து ", " ஆலியுங் கடிதிற் புலர்ந்து " (தக்க. 176, 184.) வீசினார் - ஆடையினால் வீசினார்.

(பி - ம்.) 'சாந்து பனிநீர்' 'பொழிந்தெழுந்தார்'

225. இட்டார் நிலவி லிளந்தென் றலுங்கொணர்ந்து
சுட்டார் குளிரி தொகுத்தெடுத்தார் - விட்டாரோ

226. பள்ள மதனிற் படரும் பெரும்புனல்போல்
உள்ள முயிரை யுடன்கொண்டு - வள்ளல்பின்

227. ஓதை மறுகி லுடன்போன போக்காலிப்
பேதை நடுவே பிழைத்தொழிந்தாள் - மாதரில்

அரிவை

228. வாரி படுமமுத மொப்பாண் மதுகரஞ்சூழ்
வேரி கமழ்கோதை வேறொருத்தி - மூரித்தேர்த்

229. தட்டுஞ் சிறுகப் பெருகி மரகதத்தாற்
கட்டுங் கனபொற் கலாபாரம் - பட்டும்

230. துகிலுங் கரப்பச் சுடர்பரப்பக் கைபோய்
அகல்கின்ற வல்கு லரிவை - இகலி

---

225. நிலவில் இட்டார், இளந் தென்றலும் கொணர்ந்து சுட்டாரென்றது மடந்தைக்குத் தென்றல் துன்பம் செய்தல் பற்றி; "இளந்தென்றலை வட வானல மென்னும்" (சங்கர நயினர் கோயிலந்தாதி, 9.) குளிரி - கல்லாரம்; 'கல்லகாரம் - குளிரி' (பரி. 11: 103, உரை); ஒருவகை நீர்ப் பூடுமாம். விட்டாரோ என்றது அவற்றின் மேலும் துன்பஞ் செய்தார் என்பது குறிப்பெச்சம்.

(பி - ம்.) 'குளிரி தொடுத்தணிந்தார்', 'குளிரத் தொடுத்தணிந்தார்'

226. பள்ளத்திற் படரும் புனல்: "தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும், பள்ளமெனுந் தகையானை" (கம்ப. குலமுறை. 21.) உள்ளத்தையும் உயிரையு முடன்கொண்டு. வள்ளல் - சோழன்.

(பி - ம்.) 'பரியும் பெரும் புனல்' 'உள்ளவுயிரை' 'வள்ளல் பிரான்'

227. பேதை என்றது மடந்தையை; பருவப்பெயரன்று.

(பி - ம்.) 'போதுமறுகில்'

228. வாரி - பாற்கடல். மதுகரம் - வண்டுகள். வேரி - தேன்; இருவேரி யெனலுமாம். கோதை - மாலையை யணிந்த. மூரி - வன்மை.

(பி - ம்.) 'அமுதை யொப்பாள்'

229. கலாபாரம் - மேகலை.

(பி - ம்.) 'மரகதத்திற்' 'பெருகு மரகதத்தால்' 'கலாபமும்' 'கலாபாரப்'

230. பட்டும் துகிலும் - தானணிந்த பட்டாடையும் துகிலாடையும். கரப்ப - தம் ஒளி மறையும்படி. சுடர் பரப்ப - பச்சை யொளியைப் பரவச் செய்ய; கலாபாரம் சுடர் பரப்ப என்க. கைபோய் - கைகடந்து, இகலி - மாறுபட்டு.

231. ஒருக்கி மருங்குகடிந் தொன்றினவந் தொன்று
நெருக்கிய மாமை நிரம்பித் - தருக்கி

232. இடங்கொண்டு மின்னுக் கொடியொன் றிரண்டு
குடங்கொண்டு நின்றதெனக் கூறத் - தடங்கொண்

233. டிணைத்துத் ததும்பி யிளையோர்க ணெஞ்சம்
பிணைத்துத் தடமுகட்டிற் பெய்து - பணைத்துப்

234. பெருமை யுவமை பிறங்கொலிநீர் ஞாலத்
தருமை படைத்ததனத் தன்னம் - கருமை

235. எறித்துக் கடைபோ யிருபுடையு மெல்லை
குறித்துக் குழையளவுங் கொண்டு - மறித்து

236. மதர்த்து வரிபரந்து மைந்தர் மனங்கள்
பதைத்து விழநிறத்திற் பட்டுத் - ததைத்த

237. கழுநீர் மலரின் கவினழித்து மானின்
விழிநீர்மை வாய்த்த விழியாள் - முழுதும்

---

231. ஒருக்கி - நுணுகச் செய்து. கடிந்து - விலக்கி. மாமை பேரழகு. (பி - ம்.) 'நெருக்கியமைய'

232. இரண்டு குடமென்றது நகில்களை. தடங்கொண்டு - மார்பினிடத்தைக்கொண்டு.

233. இணைத்து - ஒன்றுக்கொன்று ஒப்பாகி. நெஞ்சம் பிணைத்து - மனத்தைக் கட்டி. முகடு - உச்சி. பணைத்து - பெருத்து.

234. உவமை - மற்றவற்றிற்குத்தான் உவமையாதல். அன்னம் - நடையால் அன்னம்போல்வாள்.

(பி - ம்.) 'பிறங்குநீர் ஞாலத்து'

234-5. கருமை எறித்து - கரிய நிறத்தை வீசி. இருபுடையும் - இரண்டு பக்கங்களிலும். குழையளவும் கொண்டு - காதணியினளவும் தனக்குரிய இடமாகக்கொண்டு; "குழைபொருது நீண்டு குமிழ்மேன் மறியா, உழைபொருதென் னுள்ளங் கவரா - மழைபோல், தருநெடுங்கைச் சென்னி தமிழ்நா டனையார், தருநெடுங்கண் போலுங் கயல்" (தண்டி. 33, மேற்.) மறித்து - மூக்கின்மேல் தாவி.

236. மதர்த்து - வன்மைகொண்டு. வரி - இரேகைகள். விழ - விழும்படி. நிறத்திற் பட்டு - உயிர் நிலையிலே தைத்து; "நல்லார் கொழுங்கயற் றடங்கண் போலும், அம்புகொண்டு" (சீவக. 439.) ததைத்த - கையால் வலிய அலர்த்திய. (பி - ம்.) 'ததைத்துக்'

237. கழுநீர்மலர் கண்ணுக்கு உவமை: "கழுநீர் மலர்க்கண்ணுய்" (திணைமொழி ஐம்பது, 11); "கழுநீ ருண்கட் கடையி னேக்கி" (பெருங். 1. 40: 43.) நீர்மை - தன்மை; என்றது மருட்சியை.

(பி - ம்.) 'கழுநீ ரிதழின்'

238. நெறிந்து கடைகுழன்று நெய்த்திருண்டு நீண்டு
செறிந்து பெருமுருகு தேக்கி - நறுந்துணர்

239. வார்ந்து கொழுந்தெழுந்த வல்லியாய்,மாந்தளிர்
சோர்ந்து மிசையசைந்த சோலையாய்ச் - சேர்ந்து

240. திருவிருந்து தாமரையாய்ச் சென்றடைந்த வண்டின்
பெருவிருந்து பேணுங் குழலாள் - பொருகளிற்றின்

241. வந்து மறுகி லொருநாண் மனுகுலத்தோன்
தந்த பெரிய தனிமைக்கண் - செந்தமிழ்க்

242. கோனே கவர்ந்தெம்மைக் கொண்டனன் வந்தெமக்குத்
தானே தரிற்றருக வென்பனபோல் - பூநேர்

---

238. நெறிந்து - நெளிப்புடையதாகி. கடை குழன்று - இறுதிப் பக்கம் சுருண்டு. நெய்த்து - எண்ணெய் பூசப்பெற்று. பெருமுருகு - பெரிய வாசனையை. தேக்கி - நிரம்பவுண்டு. 238 : 'எண்ணெயு நானமு மிவை மூழ்கி...கண்ணிருண்டு நெறிமல்கிக் கடைகுழன்ற கருங்குழல்கள்'' (சீவக. 164.) நறுந்துணர் - மணமுடைய பூங்கொத்துக்கள்.

(பி - ம்.) 'நெறித்துக்' 'நிறத்துணர்'

239 வார்ந்து - நீண்டு, வல்லி - கொடி. மாந்தளிரைத் தலையிற் சூடுதல் : தக்க. 625. கூந்தலுக்குச் சோலை : '' ஏலத் திமிரக் குழற்காவில்'' (திருவிளை. 3 : 2.); ''சொற்செறிந்த வம்புலாஞ் சோலையன்ன கூந்தலாள்'' (**தஞ்சைப் பெருவுடையாருலா**, 151.)

(பி - ம்.) 'வாய்ந்து' 'கொழுந்தெழுந்து' 'மாந்தளிரைச்' 'அசைந்து'

240. திரு இருந்து - சீதேவி என்னும் ஆபரணம் இருக்கப்பெற்று ; ''செந்திருவுந் திங்களும் பூவுந் தலைசிறப்ப'' (தண்டி. 33, மேற்.) மலர்களை அணிந்தமையால் 'வண்டுகளுக்கு விருந்தளிக்குங் குழலாள்' என்றார்.

(பி - ம்.) 'திருவிருந்த' 'சென்றிருந்த பொருகளிற்று'

241. ஒருநாளென்றது முன் பருவத்தில் வந்த நாளை. செந்தமிழ்க் கோன் : 'தமிழப் பல்லவதரையர்' (நன். 224, மயிலை. மேற்.) என்பதைப் போன்றது.

(பி - ம்.) 'மனு குலக்கோன்' 'செந்தனிக்கோற் கோனே' 'கவர்ந்த தெம்மைக்'

242. எம்மை யென்றது பின்னே வரும் தொடிகள் முதலியவற்றை. தானே என்றது விக்கிரம சோழனை. பூநேர் இணைக்கை - தாமரைப் பூவை யொத்த இரண்டு கைகள்.

(பி - ம்.) 'கொண்டன வெங்களுக்கு'

243. இணைக்கையுந் தோளு மிடுதொடிக ளேந்தா
துணைக்கண் டுயிற்றத் துயிலா - மணிக்கூந்தல்

244. போது மறந்தும் புனையா பொலங்கச்சு
மீது படத்தரியா வெம்முலைகள் - சோதி

245. அடுக்குங் கனபொற் றுகில்பேணு தல்குல்
கொடுக்குந் தெருணெஞ்சு கொள்ளா - தெடுக்கும்

246. கருப்புச் சிலையனங்கன் கையம்பால் வீழும்
நெருப்புக் குருகி நிறைபோய் - இருப்புழிப்

247. பாடிய பூவைக்கும் யாதும் பரிவின்றி
ஆடிய தோகைக்கு மன்பின்றிக் - கூடிய

248. கிள்ளைக்குந் தம்மிற் கிளரு மிளவன்னப்
பிள்ளைக்கு மாற்றுள் பெயர்ந்துபோய்க் - கொள்ளை

---

243. துணைக்கண் - இரண்டு கண்கள். மணிக் கூந்தல் - நீல மணியைப் போன்ற கூந்தல்; "மணியறைந் தன்ன மாவீ ழோதி", "நீல மா மணி நிமிர்ந்தியன் றன்ன, கோலங் கொண்ட குறுநெறிக் கூழை" (பெருங். 2. 7 : 17, 15 : 90 - 91.)

(பி - ம்.) 'இடுதொடியுமேந்தாள்' 'துயிலாள்' 'மணக்கூந்தல்', 'பிணிக்கூந்தல்'

244. மறந்தும் புனையா என்றது மங்கலமாகச் சில மலர்கள் அணிதலையும் செய்யா என்றபடி; நெடுநல். 54, ந. தரியா - பொறுக்க மாட்டா.

(பி - ம்.) 'போதை' 'புனையாப் பொலங்கச்சு' 'படத்திரியா'

245. சோதி அடுக்கும் - ஒளி பொருந்திய. பேணுது - உடுத்தலை விரும்பாது. தெருள் - தெளிவு.

(பி - ம்.) 'கலை பேணுது' 'துகில் பெறு' 'ஒடுக்குங் கருப்புச்'

246. அனங்கன் - மன்மதன். நெருப்பு என்றது காமத்தை; "கண்டர வந்த காம வொள்ளெரி" (குறுந். 305 : 1.) நிறை - மனத்தை ஒரு வழியில் நிறுத்துதல். இருப்புழி - இருக்கும் சமயத்தில்.

(பி - ம்.) 'நெருப்புக் கருகி'

247. பூவைக்கும் - பூவையினிடத்தும். யாதும் பரிவின்றி - சிறிதும் அன்பில்லாமல். தோகைக்கும் - மயிலினிடத்தும். கூடிய - ஆணும் பெண்ணுமாகக் கூடிய.

248. கிள்ளைக்கும் - கிளிப் பிள்ளையையும். இளவன்னப் பிள்ளைக்கும் - இளைய அன்னப் பார்ப்பையும். ஆற்றுள் - சமாதானம் செய்யாளாய். கொள்ளை - மிகுதியாக. பயக்கும் - கொடுக்கின்ற.

(பி - ம்.) 'மடவன்னப்', 'களியன்னப்'

249. பயக்கு மலர்க்குரவப் பந்தர்ப் பட்ப்பை
நயக்கு மிளமரக்கா நண்ணி - வயக்களிற்று

250. மன்னன் குலப்பொன்னி வைகலு மாடுதிரால்
அன்னங்கா ணீரென் றழிவுற்றும் - சென்னி

251. பெருகும் புகாரடையப் பெற்றீரான் மற்றைக்
குருகுகா ளென்று குழைந்தும் - கருகிய

252. நீலக் குயிலினங்கா ணீர்போலுஞ் சோணாட்டுச்
சோலைப் பயில்வீ ரெனத்துவண்டும் - பீலிய

253. பேரியன் மஞ்ஞை பெறுதிராற் கொல்லியும்
நேரியுஞ் சேர வெனநெகிழ்ந்தும் - நேரியன்

254. தண்டுணர்ப்பே ராரம் பலகாலுந் தைவந்து
வண்டுகாள் வாழ்வீ ரெனமருண்டும் - தொண்டிக்கோன்

---

249. பந்தர்ப் படப்பை - பந்தராகிய தோட்டத்தையுடைய. படப்பை : "இடுமுட் படப்பை" (புறநா. 197 : 10.) ; "முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப், பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழல்" (புறநா. 320 : 1-2.) நயக்கும் - விரும்பத்தக்க.

(பி - ம்.) 'பைந்தாட் படப்பை', 'பந்தர்ப் படாகை'

249-50. வயக்களிற்று மன்னன் - வலிய யானையையுடைய விக்கிரம சோழன். வைகலும் - நாள்தோறும். சென்னி - சோழன்.

251. புகார் - காவிரிப் பூம்பட்டினம். குருகு - நாரை.

(பி - ம்.) 'மற்றும், மாற்றிக்' 'கருதரிய நீலக்'

252. சோணாட்டுச் சோலை - சோழ நாட்டிலுள்ள சோலைகளில்.

(பி - ம்.) 'ஞாலத்துப்'

253. பேரியல் - பெரிய மென்மையை யுடைய. மஞ்ஞை : விளி. கொல்லியும் நேரியும் சேரப் பெறுதிர் ; நேரி - உறையூருக்குத் தெற்கே யுள்ள ஒரு மலை; 271.

(பி - ம்.) 'சேர்வீரென'

254. தண் துணர்ப் பேராரம் - குளிர்ந்த கொத்தாகிய பெரிய ஆத்தி மாலையை ; ஆரம் : 273. தைவந்து - தடவி. தொண்டிக்கோன் - தொண்டி யென்னும் ஊருக்கு அரசன் ; தொண்டி : கீழ் கடற்கரையிலுள்ள ஓரூர் ; இது சோழர்க்குரியது (சிலப். 14 : 106-12, அடியார்.)

(பி - ம்.) 'தண்டுழாய் மாலை', 'தண்டுளவாம்பல்' 'வாழ்ந்தீரென', 'தெண்டிரைக்கோன்'

255. மன்றன் மலயத்து வாளருவி தோய்ந்தன்றே
தென்றல் வருவ தெனத்திகைத்தும் - நின்றயர்கால்

256 மன்னர்க்கு மன்னன் வள்வ னகளங்கன்
முன்னர்ப் பணில முழங்குதலும்—மின்னிற்போய்

257. பேணுந் திருமடனு மென்றும் பிரியாத
நாணும் பெருவிருப்பா னல்கூரக்—காணுங்கால்

258. ஏய்ப்ப வெதிர்வந்து விரவி யுருவவொளி
வாய்ப்ப முகபங் கயமலர்ந்தாள்—போய்ப்பெருகும்

259. மீதா ரகலல்குல் வீழ்கின்ற மேகலையும்
போதாத வண்ணம் புடைபெயர்ந்தாள்—சோதி

260. குழைய நடுவொடுக்குங் கொங்கையுந் தோளும்
பழைய படியே பணைத்தாள்—பிழையாத

---

255. மன்றல் - சந்தன மரத்தின் மணத்தையுடைய. மலயத்து - பொதியில் மலையிலுள்ள. வாளருவி - வாளைப் போன்ற வெள்ளிய அருவி; "வாள்வனப் புற்ற வருவி" (ஐங். 312); "வாணிறங்கொண்ட வருவித்தே" (கலி. 42 : 11.) நின்று அயர்கால் - நின்று சோரும் சமயத்தில்.

(பி - ம்.) 'வானருவி' 'நின்றயர்வாள்'

256. அகளங்கன் : 59. பணிலம் - சங்கு. மின்னிற்போய் - மின்னலைப் போல விரைந்து சென்று.

(பி - ம்.) 'தன்னிற் போய்ப்', 'மின்னர்ப் போய்ப்'

257. மடன் - கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை. என்றும் பிரியாத நாண் : " பெண்பா லவர்கட் கணியாய்ப்பிரி யாத நாணும்" (சீவக. 1967.) நல்கூர - குறைய.

258. ஏய்ப்ப - இவளுக்கொப்ப. இரவி - சோழன்; " சோதி யிரவி கரத்தா னிரவொழிக்கும் " (தண்டி. 78, மேற்.); சூரியனென்றும் வேறொரு பொருள் தோற்றியது.

(பி - ம்.) 'பொருவொளி' 'போய்ப்பெயர', 'போய்ப்பெயரும்'

259. அல்குல் புடைபெயர்ந்தாள் : சினைவினை முதலொடு முடிந்தது.

(பி - ம்.) 'மீதூர் கலையல்குல்'

260. நடு - இடை. பணைத்தாள் - பெருத்தாள் : அல்குல் கொங்கை தோள் இவை மூன்றும் பெருத்திருத்தல் உத்தம இலக்கணம் : 38 - 9. பிழையாத- பருவத்திற் பொய்யாமல் வெள்ளம் வருகின்ற. பிழையாத பொன்னி : 40-41; " வாழிய வற்றுத காவிரி " (தக்க. 812.)

(பி - ம்.) 'நடுவொதுங்குங்', 'நடுவொதுங்க'

261. பொன்னித் துறைவன் பொலந்தார் பெறத்தகுவார்
தன்னிற் பிறரின்மை சாதித்தாள்—சென்னிக்குப்

262. பாராண் முலையாலும் பங்கயத்தா டோளாலும்
வாரா விருப்பு வருவித்தாள்—ஓராங்கு

தெரிவை

263. கோது விரவாக் கொழும்பாகு கொய்தளிரீன்
போது புலரார்ப் பொலங்கொம்பு—மீது

264. முயலா லழுங்கா முழுத்திங்கள் வானிற்
புயலா லழுங்காப் புதுமின்—இயல்கொண்

265. டெழுதாத வோவிய மேழிசைய வண்டு
கொழுதாத கற்பகத்தின் கொம்பு—முழுதும்

266. இருளாக் கலாபத் திளந்தோகை யென்றும்
தெருளாக் களியளிக்குந் தேறல்—பொருளால்

267. வருந்தக் கிடையாத மாணிக்கம் யார்க்கும்
அருந்தத் தெவிட்டா வமுதம்—திருந்திய

---

261. தன்னிற் பிறரின்மை - தன்னையன்றி வேறு சிலர் இல்லாமையை. சென்னிக்கு - சோழனுக்கு.

262. பாராள் - பூமிதேவி. பங்கயத்தாள் - திருமகள்; "தூய நில மடந்தை தோள்களிலும்" (33.) ஓராங்கு - ஒருபெற்றிப்பட; "ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே" (புறநா. 16 : 19.)

(பி - ம்.) 'வாராத வின்பம்' 'வருவித்தாள் - ஓரணங்கு'

263. கொழும்பாகு - கொழுவிய கரும்பின் பாகு. தளிரீன் - தளிரை ஈனுகின்ற. போது புலரா - மலர்கள் வாடாத. பொலங்கொம்பு - பொன்னாலாகிய கொம்புபோல்வாள்.

(பி - ம்.) 'கொய்தளிரின்'

264. மீதுமுயலால் - தன் மீதுள்ள முயல்போன்ற கறையால். அழுங்கா - ஒளி கெடாத. புயலால் - மேகத்தால்.

265. எழுதாத - ஓவியர்களால் எழுதப்படாத. கற்பகத்தின் கொம்பு : "கற்பகத்தின் பூங்கொம்போ" (பெரிய. தடுத்தாட்கொண்ட. 140.)

(பி - ம்.) 'கற்பகத்தின் கொந்து'

266. கலாபத்து - தோகையையுடைய. இளந்தோகை - இளைய மயில் போல்வாள். தெருளாக்களி - தெளிய முடியாத மயக்கம். தேறல் - தெளிவு.

(பி - ம்.) 'எழு சிறைய வண்டு' 'இளந்தோகை யார்க்கும்'

267. (பி - ம்.) 'அமுதம் பொருந்திய'

268. சோலைப் பசுந்தென்ற றூதுவர வந்தி
மாலைப் பொழுதுமணி மண்டபத்து—வேலை

269. விரிந்த நிலாமுன்றில் வீழ்மகரப் பேழ்வாய்
சொரிந்த பனிக்கற்றை தூங்கப்—பரிந்துழையோர்

270. பூசிய சாந்தங் கமழப் பொறிவண்டு
மூசிய மௌவன் முருகுயிர்ப்பத்—தேசிகப்

271. பேரிசை யாழ்ப்பாணன் பேதை விறலியொடும்
சேர வினிதிருந்த செவ்விக்கண்—நேரியும்

## தசாங்கம்

272. கோழியும் வேங்கையு முப்பணையுங் கோரமும்
பாழி யயிரா பதப்பகடும்—ஆழியான்

---

268. மணிமண்டபத்து - மணிகளாலாகிய மண்டபத்தில். வேலை - கடலைப் போல.

(பி - ம்.) 'தூதுவர வந்த, மாலைப்பொழுதின் கண்'

269. விரிந்த - பரப்பையுடைய. நிலாமுன்றில் - நிலாமுற்றத்தில். மகரப்பேழ்வாய் - மகரத்தின் வாயைப் போலப் பெரிய வாயையுடைய பந்தம்; "நிலவுப் பயன்கொள்ளு நெடுவெண் முற்றத்துக், கிம்புரிப் பகுவா யம்பண நிறையக், கலிந்துவீ ழருவிப் பாடு விறந்து" (நெடுநல். 95-7); "திருந்து வாய்ச்சுறவ நீர்கான் றொய்யென, பெருந்தெரு வுதிர்தரு பெயலுறு தண்வளி" (நற். 132 : 2-3); "காதுதாழ், வான்மகர வார்குழையாய் மாதவர்க் கூணீந்தான், தான்மகர வாய்மாடத் தான்" (ஏலாதி, 43.) உழை யோர் - பக்கத்திலுள்ள மகளிர்.

(பி - ம்.) 'நிலா முன்றிலின் கண்' 'மணிக்கற்றை' 'பரிந்திளையோர்', 'பரிந்திணையோர்'

270. மௌவல் - மல்லிகை. முருகு - வாசனை. தேசிகம் - ஒளி ; சீவக. 1480. 'தேசியம்' என்ற பாடத்திற்குத் தேசியம் என்னும் இசை என்று கொள்க. (பி - ம்.) 'தேசியம்'

271. நேரி - சோழனுக்குரிய மலை ; 253.

272. கோழி - உறையூர்.வேங்கை : கொடி. ; இராசராச. 91. முப்பணை- மூன்று முரசுகள் : 28, 121. கோரம்: சோழன் குதிரையின் பெயர்; "ஆரந் தழுவுந் தடந்தோ ளகளங்கன், கோரந் தொழுத கொடிக்கு" (தண்டி. 40, மேற்.) பாழி - வன்மை. அயிரா பதப்பகடு : விக்கிரம சோழன் யானை. அரசர் ஏறும் யானையை ஐராவதம் என்றல் மரபு : சீவக. 3046. ஆழியான் : சோழனைத் திருமாலாகக் கூறியது.

273. சூடிய வாரமு மாலையுஞ் சோறுடும்
காடு திரைத்தெறியுங் காவிரியும்—பாடுகென

274. கூன வியாழெடுத்தான் பாணன் கொதித்தெழுந்து
வேன லரசனுந்தன் வில்லெடுத்தான்—தேனிமிர்

275. தந்திரி யாழ்ப்பாணன் றைவந்தான் றைவந்தான்
வெந்திறன் மாரனுந்தன் வில்லினாண்—முந்த

276. நிறைநரம்பு பண்ணி நிலைதெரிந்தான் பாணன்
திறன்மதனு மம்பு தெரிந்தான்—விறலியொடும்

277. பாண னொருபாணி கோத்தான் பலகோத்தான்
தூணி தொலையச் சுளிந்துவேள்—மாண

---

273. ஆரம் - ஆத்திமாலை. காடு திரைத்து எறியும் - காடுகளைச் சீருட்டி எறிகின்ற. பாடுகென - பாடுக என்று தெரிவை பணிக்க.

(பி - ம்.) 'சூடிய மாலையும்' 'திரைதிருக்கும்', 'திரைத்திருக்கும்'

274. கூனல் யாழ் - வளைந்த கோட்டையுடைய யாழை. வேன லரசன் - வேனிற் பருவத்துக் கரசனாகிய மன்மதன்; வேனில் வேன லெனவும் வழங்கும்; "இளவேனல் வந்ததா லென்னுங்கொ லின்று, வள வேனற் கண்ணி மனம்" (சிலப். 8: இறுதிவெண்பா); "தளவேனன் மீதலருந் தாழ்வரைசூழ் நாடற், கிளவேனல் வந்த தெதிர்" (நளவெண்பா, 21.) தேன் நிமிர் - தேனைப்போல நிமிர்ந்த; தேன் இமிர் - வண்டைப்போல ஒலிக்கும் எனினுமாம்.

275. யாழ்நரம்புக்குத் தேனொழுக்கு உவமை: "தீந்தேன், துளக்கற வொழுகி யன்ன துய்யறத் திரண்ட திண்கோல்", "தீந்தேன், அணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்" (சீவக. 559, 722.) தந்திரி - நரம்பை. தைவந்தான்; தைவரல்: 'இசையை எழுப்பும் எண்வகைச் செயல்களுள் ஒன்று' (சிலப். 7 : 5, அரும்பத.) மாரன் தன் வில்லின் நாணைத் தைவந்தான்; தைவந்தான் - தடவினான்.

(பி - ம்.) 'தந்திரியும் பாணன் றடவந்தான்' 'வில்லினா ணுந்து'

276. நிறை நரம்பு - நிறைந்த நரம்புகளை அமைத்து. நிலைதெரிந்தான் - ஸ்வர ஸ்தானங்களை ஆராய்ந்தான். அம்பு தெரிந்தான் - தெரிவையின்மேல் எய்வதற் கேற்ற அம்புகளை ஆராய்ந்தான்; "புணைமாண் மரீஇய வம்பு தெரிதியே" (கலி. 39 : 22.)

(பி - ம்.) 'பண்ணி யிசைதெரிந்தான்'

277. ஒரு பாணி - ஒரு பாட்டை. தூணி தொலைய - அம்பறாத்தூணி யிலுள்ள அம்புகள் முற்றும் தொலையும்படி. வேள் சுளிந்து பலகோத்தான் என்க; சுளிந்து - கோபங்கொண்டு; பல - பல அம்புகளை. யாழ்ப்பாணி இசைத்தன்; பாணி - பாட்டு.

(பி - ம்.) 'தூணிகுலையச் சுளித்துவேள்'

278. இசைத்தன பாண னியாழ்ப்பாணி யெய்து
விசைத்தன வேனிலான் பாணி—விசைத்தெழுந்த

279. வீணை யிசையாலோ வேனிலா னம்பாலோ
வாணுதல் வீழா மதிமயங்காச்—சேணுலாம்

280. வாடை யனைய மலயா நிலந்தனையும்
கோடை யிதுவென்றே கூறினாள்—நீடிய

281. வாரை முனிந்த வனமுலைமேல் விட்டபனி
நீரை யிதுவோ நெருப்பென்றாள்—ஊரெலாம்

282. காக்குந் துடியை யழிக்குங் கணைமாரன்
தாக்கும் பறையென்றே சாற்றினாள்—சேக்கைதொறும்

283. வாழு முலகத் தெவரு மனங்களிப்ப
வீழு நிலவை வெயிலென்றாள்—கோழிக்கோன்

284. எங்கோ னகளங்க னேழுலகுங் காக்கின்ற
செங்கோல் கொடுங்கோல் சிலர்க்கென்றாள்—கங்குல்

---

278. வேனிலான்பாணி விசைத்தன ; வேனிலான் பாணி - மன்மதனுடைய கைகள். விசைத்தன - வேகங்கொண்டன.

279. வாணுதல் - தெரிவை. வீழா - விழுந்து. மயங்கா - மயங்கி. சேண் உலாம் - நெடுந்தூரத்திலிருந்து உலாவுகின்ற.

(பி - ம்.) 'மனமயங்காச்'

280. வாடை அனைய - வடகாற்றைப் போன்ற குளிர்ச்சியையுடைய. மலயாநிலம் - தென்றற் காற்று. கோடை - மேல் காற்று.

(பி - ம்.) 'மலையா நிலத்தையும்' 'இதுவென்று'

281. வாரை - கச்சினை. வனம் - அழகு. பனிநீரை நெருப்பு என்றல் : "செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சீதச், சந்தனமென் றரோ தடவினார் - பைந்தமிழை, ஆய்கின்ற கோனந்தி யாகந் தழுவாமல், வேகின்ற பாவியேன் மெய்" (நந்திக்கலம்பகம், மிகைப்பாட்டு, 15.) துடி - உடுக்கை. துடியை வெறுத்தல் : "கூடலன்னாள், வடிக்கண் ணிரண்டும் வளநகர் காக்கும்வை வேலினார், துடிக்கண் ணிரண்டுங்கங் குற்றலை யொன்றுந் துயின்றிலவே" (இறை. 30, மேற்.)

282. மாரன் - மன்மதன். தாக்கும் பறை - அடிக்கின்ற பறை. சேக்கை தொறும் - தங்குமிடங்களிலெல்லாம்.

(பி - ம்.) 'முரசென்றே'

283. வீழும் நிலவை - விரும்புகின்ற நிலாவை. கோழி - உறையூர் ; மு. "நறைகமழ்தார் வேட்டார் நலனணியு நாணும், நிறையு நிலைதளரா நீர்மை-அறநெறிசூழ், செங்கோல னல்லன் கொடுங்கோலன் றெவ்வடுபோர், வெங்கோப மால்யானை வேந்து" (தண்டி. 75, மேற்.) கங்குல் - இரவு.

285. புலருந் தனையும் புலம்பினு ளாங்குப்
பலரும் பணிந்து பரவக்—குலகிரிசூழ்

286. ஆழிப் புவன மடைய வுடையபிரான்
சூழிக் கடாயானை தோன்றுதலும்—யாழின்

### யானையை நோக்கிக் கூறுதல்

287. இழைக்கு மிசைமுதலா மெப்பகைக்கு மாற்று
துழைக்கு முயிர்தழைப்ப வோடிப்—பிழைத்தனளாய்

288. முட்டுந் திகிரி கிரியின் முதுமுதுகிற்
கட்டுங் கடவுட் கடாயானை—யெட்டும்

289. தரிக்கு முலகந் தனிதரித்த கோனைப்
பரிக்கு மயிரா பதமே—செருக்கிப்

290. பொருந்த நினையாத போர்க்கலிங்க ரோடி
இருந்த வடவரைக ளெல்லாம்—திருந்தா

---

285. புலருந்தனையும் - விடியுமளவும். பரவ - புகழ. குலகிரி சூழ்தல் புவனத்திற்கு அடை.

(பி - ம்.) 'புலருந்துணையும்'

286. ஆழிப்புவனம் - கடலால் சூழப்பட்ட உலகத்தை. அடைய உடைய - பிறவரசர்க்கும் பொது என்பதின்றி முழுதும் தனக்கே உடைய. சூழி - முகபடாம். கடா - மதம்.

287. இசை முதலான பகைகள்: 279-84-ஆம் கண்ணிகளிற் கூறப்பட்டவை. ஆற்றுது - பொறுக்க முடியாமல். உழைக்கும் உயிர் - வருந்துகின்ற உயிர்; "உழைத்தவல் விருவினைக் கூறு காண்கிலா, தழைத்தயருலகினுக்கு" (கம்ப. வாலிவதை. 33.)

(பி - ம்.) 'முதலாவெப்பகைக்கும்' 'உயிர் தளிர்ப்ப,' 'உயிர் களிப்ப'

288. திகிரிகிரி - சக்கரவாளகிரி. சக்கரவாளத்தில் கட்டப்பட்ட யானைகள்: "தறையடித் தருபோற் றீராத் தகையவித் திசைக டாங்கும், கறையடிக் கழிவு செய்த கண்டகன்" (கம்ப. வாலிவதை. 132.) கண்ணி, 289: 58-9. (பி - ம்.) 'திகிரி வரையின்'

289. பரிக்கும் - தாங்கும். அயிராபதம்: 304. செருக்கி - தம் பலத்தையே பெரிதாக எண்ணி இறுமாந்து.

(பி - ம்.) 'உலகைத் தனிதரித்த' 'அயிரா பதமே தரிக்கப்'

290. பொருந்த நினையாத - சோழனோடு நட்பாகப் பொருந்த எண்ணாத. இருந்த - ஒளித்திருந்த. தோற்ற அரசர் மலை, கடல் முதலியவற்றில் ஒளித்தல் மரபு; தக்க. 62, உரை.

(பி - ம்.) 'தடவரைகள்'

291. விதையம் பொருதழிந்த விந்தமே போலப்
புதைய நடந்த பொருப்பே—சிதையாத

292. திங்கட் குலத்திற்குந் தெய்வப் பொதியிற்கும்
அங்கட் பழங்குமரி யாற்றிற்கும்—தங்கள்

293. படிக்கும் பொருநிருப பன்னகங்கள் வீழ
இடிக்குந் தனியசனி யேறே—கடிப்பமைந்த

294. யாம முரசா லிழந்த நிறைநினது
தாம முரசு தரப்பெற்றேன்—நாம

---

291. விதையம் - மேரு மலை. பொருது - பகைத்து. அழிந்த - அகத்திய முனிவரால் அழுத்தப் பெற்று அழிவை யடைந்த. விந்தம் - விந்திய மலை; இவ்வரலாறு கந்த. விந்தம் பிலம்புகு படலத்தால் அறியப்படும். புதைய - தரைக்குள் அழுந்தும்படி. வடவரைகளெல்லாம் புதைய நடந்த என இயைக்க. சிதையா - கெடாத.

(பி - ம்.) 'பொருதழித்த', 'பொருதிழந்த', 'பொருதிகழ்ந்த'

292. திங்கட் குலத்திற்கும் - சந்திர குலத்தின் பெருமையை நாட்டுதற்கும். தெய்வப் பொதியில்: "செய்ய தமிழ்முழங்கத் தெய்வப் பொதியிலாய்" (இராசராச. 67.) அங்கண் - அழகிய இடங்களையுடைய. குமரி யாறு: தமிழ்நாட்டின் தெற்கெல்லையாகிய ஓர்யாறு; இது நெடுங்காலத்துக்கு முன்னே கடல் கொள்ளப்பட்டதென்பது சிலப். 8 : 1-2-ஆம் அடிகளுக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய விரிவுரையால் அறியப்படும்.

(பி - ம்.) 'அங்கப்பழங்குமரி'

293. தங்கள் படிக்கும் - தங்கள் நாட்டைப் பெறுதற்கும். நிருப பன்னகங்கள் - பாண்டிய அரசராகிய பாம்புகள். அசனி என்பதற்கேற்பப் பன்னகங்கள் என்றார். பன்னகங்கள் என்று பன்மையாற் கூறியது பாண்டியர் ஐவரையும் கருதி; "விட்ட தண்டினின் மீனவ ரைவரும், கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலுநீ" (கலிங்கத். 380.) இடி பாம்புகளை வீழ்த்தல்: "இளைய தாயினுங் கிளையரா வெறியும், அருநரை யுருமிற் பொருநரைப் பொறாஅ" (புறநா. 58: 7-8.) கடிப்பு - குறுந்தடி.

(பி - ம்.) 'நிருபர் பன்னங்கள்'

294. யாமமுரசால் - யாமந்தோறும் அடிக்கப்படும் முரசால்; 282; "ஏட கம்பொதி தார்பொ ருந்திய யாம பேரி யிசைத்தலால்" (கம்ப. கைகேசி சூழ் வினை. 57.) தாமமுரசு - மாலையை யணிந்த முரசு; என்றது யானைக்கு முன்னே அடிக்கப்படும் முரசு; "தெண்கிணை முன்னர்க் களிற்றினியலி" (புறநா. 79: 3); 'கிணை முன்னர் வருதல் யானைக்கும் இவனுக்கும் ஒக்கும்' (ஷை உரை); "முரசதிர்ந்தானை முன்னோட" (தே. திருநா.) நாம - அச்சத்தைத் தரும்.

(பி - ம்.) 'பெற்றே நாம', 'பெற்றே யேம'

295. விடைமணி யோசை விளைத்தசெவிப் புண்ணின்
புடைமணி யோசைப் புலர்ந்தேன்—தடைமுலைமேல்

296. ஆரு மலயக்கா லட்டசூ டுன்செவியில்
மாருப் பெருங்காற்றுன் மாற்றினேன்—வேருகக்

297. கூசும் பனித்திவலை கொண்டுபோ மென்னுயிர்நீ
வீசு மதத்திவலை யான்மீட்டேன்—மூசிய

298. காருலா மோதக் கடல்முழங்க வந்ததுயர்
நேரிலா நீமுழங்க நீங்கினேன்—பேரிரவில்

299. என்மே லனங்கன் பொரவந்த வின்னலெல்லாம்
நின்மே லனகன்வர நீங்கினேன்—இன்னும்

---

295. விடைமணியோசை - காளையின் கழுத்திற் கட்டிய மணியின் ஓசை. செவிப்புண் - காதிலுண்டான புண். விடை மணியோசை வருத்துதல்: "தென்றற்கும் வீணைக்குஞ் சேமணிக்கும்......அயர்ந்தாள்" (இரத்தினச் சுருக்கம், 6); "நரையுரு முரறு மரையிரு ணடுநாள், நல்லே றியங்குதோ றியம்பும், பல்லான் றொழுவத் தொருமணிக் குரலே" (குறுந். 190 : 5-7.) நின்புடைமணியோசை - நின்னுடைய இரு பக்கங்களிலுமுள்ள மணிகளின் ஓசையால். புலர்ந்தேன் - தீரப்பெற்றேன். தடை முலை - பெருத்த முலை; "அம்பணைத் தடைஇய மென்றோள்" (நெடுநல். 149); "தடைஇத் திரண்ட நின்றோள்" (அகநா. 218 : 8.)

(பி - ம்.) 'ஓசை புலர்ந்தேன்' 'தடமுலைமேல்' 'ஊருமலயக்கால்' 'மாரு மலயத்தால் மாறினேன்'

296. ஆரு மலயக்கால் - வெப்பத்தையுடைய தென்றற்காற்று. சூட்டை மாற்றினேன்.

297. கூசும் - நடுங்கும். பனித்திவலை - பனித் துளிகள். வேருகக் கொண்டுபோம் என்க. மதத்திவலை - மதத்துளிகள். மூசிய - நெருங்கிய.

(பி - ம்.) 'வீசுங்கரத்திவலையான்'

298. காருலாம் - மேகங்கள் உலாவுகின்ற. ஓதக்கடல் முழங்க - நீரையுடைய கடலொலித்தலால்; கடலொலி வருத்தல்: "அறைகடலி னிசையுடனே......நேரிழை நின்றுற்றுவளோ" (சாஸனப் பாட்டு.) நேரிலா - தனக்கு ஒப்பு இல்லாத. பேரிரவில் - பிரிவினுல் பெரிதாகத் தோற்றுமிரவில்; "ஊழியிற் பெரிதா னழிகை யென்னும்" (பெரிய திருமொழி, 2. 7 : 4.)

299. அனங்கன் - மன்மதன். அனகன் வர - பாபமில்லாதவனுகிய சோழன் வருதலால்.

(பி - ம்.) 'வரவந்த'

300. கடைபோக வென்னுயிரைக் காத்தியேல் வண்டு
புடைபோகப் போதும் பொருப்பே—விடைபோய்நீ

301. ராட்டுந் தடங்கலக்கின் மாரற் கயில்வாளி
காட்டுந் தடமே கலக்குவாய்—கேட்டருளாய்

302. கார்நாணு நின்கடத்து வண்டொழியக் காமனூர்
போர்நாணின் வண்டே புடைத்துதிர்ப்பாய்—பார்நாதன்

303. செங்கைக் கரும்பொழியத் தின்கைக் கனங்கனூர்
வெங்கைக் கரும்பே விரும்புவாய்—எங்கட்

304. குயிரா யுடலா யுணர்வாகி யுள்ளாய்
அயிரா பதமேநீ யன்றே—பெயராது

---

300. கடைபோக - முடிவுவரையிலும். காத்தியேல் - காக்க விரும்பு வாயானால். வண்டு புடைபோதல் மதத்தை யுண்ணும் பொருட்டு; "வரி ஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்" (அகநா. 78 ; 3-4.)

301. தடம் - பகைவர் தடாகம். பகைவர் தடாகங்களைத் தம்முடைய யானைகளைக் கொண்டு கலக்குதல் புறத்திணை மரபு : "ஒளிறு மருப்பிற் களிறவர, காப்புடைய கயம்படியினை", "கடிதுறைநீர்க் களிறுபடீஇ" (புறநா. 15 : 9-10, 16:6.) அயில வாளி - கூர்மையான அம்புகளை; என்றது தாமரைப் பூவையும், குவளைப் பூவையும்.

302. கார்நாணும் - மேகம் நாணுகின்ற. நின்கடத்து வண்டு - உன்னுடைய மதத்தில் மொய்க்கின்ற வண்டுகள். போர்நாணின் வண்டு - போரைச் செய்யும் நாணாகிய வண்டுகளை; "நாரியடுத்த வளிமாலை குலையத் துரந்து" (பிரபு. துதிகதி. 3.) பார்நாதன் - சோழனுடைய; இது ஜனநாதன் என்பதைப் போன்றது.

(பி - ம்.) 'வண்டு புடைத்துகுப்பாய்'

303. செங்கைக் கரும்பு ஒழிய-சிவந்த கையிலுள்ள கரும்பைத் தவிர; என்றது சோழன் மருதநிலத்து விளைபொருளாகிய கரும்பைக் கையில் ஏந்தியுள்ளான் என்பது கருத்து; "பொன்னி வளநாடு பூஞ்சிலையும்" (337); "சோழ னுறந்தைக் கரும்பினிது" (ஔவையார் பாடல்.) அனங்கனூர் கரும்பென்றது மன்மதன் வில்லாகிய கரும்பை.

304-5. பெயராது நில் - இவ்விடத்தைவிட்டு நீங்காமல் நிற்பாயாக. கண்டாய் : அசை. "கொய்தளிர்த்தண்படலைக் கூத்தப் பெருஞ்சேந்தன், வைகலு மேறும் வயக்களிறே - கைதொழுவல், காலேக வண்ணனைக் கண்ணாரக் காணவெம், சாலேகஞ் சார நட" (நன். 396, மயிலை. மேற்.)

(பி - ம்.) 'உறவாகியுள்ளாய்'

305. நிற்கண்டா யென்றிரந்து நின்றா ளுதலாக
விற்கொண்ட பேரிளம்பெண் வேறொருத்தி—கொற்கையர்கோன்

## பேரிளம் பெண்

306. மல்லற் புயத்தனகன் மால்யானைக் கைபோலக்
கொல்லத் திரண்ட குறங்கினாள்—எல்லையில்
307. கோடுங் கொலைகுயின்ற சேடன் குருமணிவெய்ந்
தாடும் படமனைய வல்குலாள்—சேடியாய்த்
308. தம்மை யெடுக்கு மிடைகடிந்த தம்பழிக்குக்
கொம்மை முகஞ்சாய்த்த கொங்கையாள்—செம்மை
309. நிறையு மழகா னிகரழித்துச் செய்யாள்
உறையு மலர்பறிப்பா ளொப்பாள்—நறைகமழும்
310. மாலை பலபுனைந்து மான்மதச் சாந்தெழுதி
வேலை தருமுத்த மீதணிந்து—சோலையில்
311. மானு மயிலு மனைய மடந்தையரும்
தானு மழகு தரவிருப்பத்—தேனிமிர்

---

305. நுதல் - நெற்றி. விற்கொண்ட - வில்லைக் கொண்ட. கொற்கையர் கோன் - சோழன். (பி - ம்.) 'இறைஞ்சி நின்றாள்'

306. அனகன்-விக்கிரம சோழன் ; 178. யானையின் கை கொல்லுதற் குரியது ; " அரும்பனைத் தடக்கை யபரகாத் திரம்வாய் வாலெயி றைந்தி னுங் கொல்வ " (சீவக. 2154.) குறங்கு - துடை. எல்லையில் கொலை, கோடும் கொலை என்க.

(பி - ம்.) 'புயத்தான்றன்' 'எல்லையிற் கோடும்'

307. கோடும் - நடுவுநிலைமையில் தப்பிய. குருமணி - நிறத்தையுடைய மணியை. சேடனுடைய படம் என்க.

308. தம்மை யென்றது கொங்கைகளை. கொம்மை முகம் - வட்டமான முகம். அறிவுடையோர் பழிக்கு நாணுதல் இயல்பு : " சான்றோர், புகழு முன்னர் நாணுப, பழியாங் கொல்பவோ காணுங் காலே " (குறுந். 252: 6-8.) செம்மை - சிவந்த நிறம்.

309. நிகர் அழித்து - தனக்கு ஒப்பாதலை அழித்து. பறிப்பாளொப்பா ளென்றது தாமரைமலரைக் கொய்தமை பற்றிக் கூறியது. தனக்குத் தோற்ற திருமகளுடைய இடத்தைத்தான் கைக்கொள்வது போன்றது பேரிளம்பெண் தாமரைப் பூவைக் கொய்தது. நறை - தேன்.

310. மான்மதச் சாந்து - கஸ்தூரிக்குழம்பை. வேலை - கடல்.

(பி - ம்.) ' மான்மதச்செஞ் சாந்தெழுதி '

311. மானும் மயிலும் அனைய - மருண்ட பார்வையால் மானையும் சாயலால் மயிலையும் போன்ற. மடந்தையர் - சேடியர். தேன்இமிர் - வண்டுகள் ஒலிக்கின்ற. (பி - ம்.) 'தரையிருப்பாள்'. 'தேனிமிர'

312. ஊற விளம்பாளை யுச்சிப் படுகடுந்
தேறல் வழிந்திழிந்த செவ்விக்கண்—வேருக

313. வாக்கி மடனிறைத்து வண்டு மதுநுரையும்
போக்கி யொருத்தி புகழ்ந்துதர—நோக்கி

314. வருந்திச் சிறுதுள்ளி வள்ளுகிரா லெற்றி
அருந்தித் தமர்மே லயர்ந்தாள்—பொருந்தும்

315. மயக்கத்து வந்து மனுதுங்க துங்கன்
நயக்கத் தருங்கனவு நல்கும்—முயக்கத்து

316. மிக்க விழைவு மிகுகளிப்பு மத்துயி லும்
ஒக்க விகல வுடனெழுந்து—பக்கத்து

317. வந்து சுடரு மொருபளிக்கு வார்சுவரில்
தந்த தனதுநிழ ருேக்கிப்—பைந்துகிர்க்

---

312. ஊறல் இளம்பாளை - ஊறுதலையுடைய இளையபாளையினது. உச்சிப்படு - உச்சியில் உண்டான. கடுந்தேறல் - கடுப்பையுடைய கள்.

313. வாக்கி - வார்த்து. மடல் - கள்ளுண்ணும் கருவி. வண்டு மது வில்வந்து மொய்த்தல் : "கள்ளைச் சூழ் காளை வண்டு செருச்செயல் காண்ப வொத்த" (திருவிளை. தருமிக்கு. 167.)

(பி - ம்.) 'வண்டு மதினுரையும்'

314. துள்ளி - துளியை. வள்ளுகிரால் எற்றி - கூரிய நகத்தால் தெறித்து. அயர்ந்தாள் - சோர்ந்து விழுந்தாள்.

315. மயக்கத்து - கள்ளுண்ட மயக்கத்தில். நயக்கத்தகும் - விரும்பத் தக்க. கனவு : 321, 324. நல்கும் - கொடுக்கும். முயக்கத்து - தழுவுதலின்கண்.

(பி - ம்.) 'மனதுங்க', 'திருக்கனவு', 'தருங்கனவு நல்க'

316. விழைவு - ஆசை. களிப்பு - கள்ளுண்ட மகிழ்ச்சி. இகல - தம்முள் பகைக்க.

(பி - ம்.) 'ஒக்க வரிதின்', 'ஒக்க வெழமுன்'

317. சுடரும் - ஒளிவிடும். பளிக்கு வார்சுவரில் - நீண்ட பளிக்குச் சுவரில். தனது நிழல் - தனது வடிவத்தை. பைந்துகிர் - செவ்வியோடு கூடிய பவளத்தையுடைய ; "பவழஞ் சேர்ந்த பல்கா ழல்குலர்" (பெருங். 1. 43: 146); "நுண்டுகில் நுழைந்த வல்குல் பவழமொத் தினிய தொன்றே" (சீவக. 1184.)

(பி - ம்.) 'ஒளிர்பளிக்கு', 'ஒளிப்பளிக்கு', 'பைந்துகிற்'

318. காசுகு முல்குற் கலையே கலையாகத்
தூசு புடைபெயர்ந்து தோணெகிழ்ந்து—வாசஞ்சேர்

319. சூடிய மாலை பரிந்து துணைமுலைமேல்
ஆடிய சாந்தி னணிசிதைந்து—கூடிய

320. செவ்வாய் விளர்ப்பக் கருங்கண் சிவப்பூர
வெவ்வா ணுதலும் வெயரரும்ப—இவ்வாறு

321. கண்டு மகிழ்ந்த கனவை நனவாகக்
கொண்டு பலர்க்குங் குலாவுதலும்—வண்டுசூழ்

322. வேரிக் கமழ்கோதை வேருகத் தன்மனத்திற்
பூரித்த மெய்யுவகை பொய்யாகப்—பாரித்த

323. தாமக் கவிகை நிழற்றச் சயதுங்கன்
நாமக் கடாக்களிற்று நண்ணுதலும்—தேமொழியும்

---

318. கலையே கலையாக - மேகலையே ஆடையாக. தூசுபுடை பெயர்ந்து - உடுத்த ஆடை பக்கத்தே நீங்கப்பெற்று.

319. பரிந்து - அற்று; "கோதை பரிந்து" (கலி. 51 : 3); "மாலை பரிந்திட் டழுதாள்" (நாலடி. 397.) துணை - இரண்டு. சாந்தின் அணி - சந்தனத்தாற் செய்த அலங்காரம்.

320. விளர்ப்ப - வெண்மை நிறமடைய. சிவப்பூர - சிவப்பு நிறம் பரவ. செவ்வாய் விளர்த்தல் முதலிய மூன்றும் கூடலின்கண்ணும் நிகழ்வன: "வாயிற் சிவப்பை விழிவாங்க மலர்க்கண் வெளுப்பை வாய் வாங்கத், தோயக்கலவி யமுதளிப்பீர்" (கலிங்கத். 61); "குவளை சிவத்துக் குமுதம் வெளுத்த குறையல்லவே" (தஞ்சை. 67)

(பி - ம்.) 'வெளுப்பக் கருங்கண் சிவப்பேற', 'கருங்கண்ணிணை சிவப்ப'. 'வியரரும்ப', 'வியர்வரும்ப', 'வெயர்வரும்ப'

321. குலாவுதலும் - பெருமையோடு பேசுதலும்.

(பி - ம்.) 'மகிழ்ந்து' 'நனவென்று' 'வண்டுவீழ்'

322. வேரி - தேறல். பூரித்த - நிறைத்த. மெய்யுவகை - உண்மையான மகிழ்ச்சி. பாரித்த - விரிந்த.

(பி - ம்.) 'தன் மனத்துள்'

323. தாமக் கவிகை நிழற்ற - மாலைகளையணிந்த வெண்கொற்றக் குடை நிழலைச் செய்ய. நாமம் - அச்சம்; மெய்யீற்று உரிச்சொல் ஈறு திரிந்தது. தேமொழி - தேன் போன்ற மொழியையுடைய பேரிளம் பெண்.

324. கண்டதுங் கெட்டேன் கனவை நனவாகக்
கொண்டது மம்மதுச்செய் கோலமே—பண்டுலகிற்

325. செய்த தவஞ்சிறிது மில்லாத தீவினையேற்
கெய்த வருமோ விவையென்று—கைதொழுது

326. தேறி யொருகாலுந் தேருப் பெருமையல்
ஏறி யிரண்டா வதுமயங்கி—மாறிலாத்

327. தோழியர் தோண்மே லயர்ந்தாளத் தோழியரும்
ஏழுயர் யானை யெதிரோடி—ஆழியாய்

328. மாடப் புகாருக்கும் வஞ்சிக்குங் காஞ்சிக்கும்
கூடற்குங் கோழிக்குங் கோமானே—பாடலர்

329. சாருந் திகிரி தனையுருட்டி யோரேழு
பாரும் புரக்கும் பகலவனே—சோர்வின்றிக்

---

324. கண்டதும் - யானையின்மேல் விக்கிரம சோழனைக் கண்டவுடன். கெட்டேன் : இரக்கக் குறிப்பில் வரும் ஒரு சொல்.

325. செய்த தவம் என்றது மலையிற் சென்று நோற்றும், கடலாடியும், பூமியை வலம்வந்தும் செய்த தவம் ; குலோத். உலா, 363-4 ; "மலையி னலைகடலின் வாளரவின் வெய்ய, தலையிற் பயின்ற தவத்தால் - தலைமை சேர், அம்மாதர் புல்லு மபயன் புயம்புணர, எம்மா தவம்புரிந்தோ மியாம்" (தண்டி. 59, மேற்.) தேறி - தெளிந்து.

(பி - ம்.) 'வருமேயிவனென்று' 'கைதொடுத் தேறி'

326. தேருப் பெருமையலேறி - தெளியப்பெறாத பெரிய மயக்கத்தை அடைந்து. இரண்டாவதும் : உம்மை இறந்தது தழுவியது ; 315. மாறிலாத் தோழியர் - தன் கருத்துக்கு மாறுதலில்லாத தோழியர்.

(பி - ம்.) 'பெருமயல்கொண் டேறி'

327. ஏழுயர் யானை - ஏழு முழம் உயர்ந்த யானை ; அல்லது ஏழு உறுப்புக்கள் நீண்ட யானை : "ஏழுயர் போதகம்" (சீவக. 775) ; "ஏழுறுப் புறத் தாழ்ந்த...மூரி வெங்களியானை" (வி. பா. சூதுபோர். 79.) ஆழி - ஆக்ஞாசக்கரம்.

328. புகார் - காவிரிப்பூம்பட்டினம். கூடல் - மதுரை. கோழி - உறையூர். பாடு அலர் சாரும் - பெருமை பரவுதல் பொருந்திய.

(பி - ம்.) 'பாடலார்', 'கூடலர்'

329. திகிரிதனை - ஆக்ஞா சக்கரத்தை. ஓரேழுபார் - ஏழு தீவுகளை. பகலவன் - சூரியன் ; என்றது இவன் சூரிய வமிசத்தான் ஆதல்பற்றி. சோர்வின்றி - மறதியில்லாமல்.

(பி - ம்.) 'ஈரேழு'

330. காத்துக் குடையொன்று லெட்டுத் திசைகவித்த
வேத்துக் குலகிரியின் மேருவே - போர்த்தொழிலால்

331. ஏனைக் கலிங்கங்க ளேழனையும் போய்க்கொண்ட
தானைத் தியாக சமுத்திரமே—மானப்போர்

332. இம்ப ரெழுபொழில் வட்டத் திகல்வேந்தர்
செம்பொன் மவுலிச் சிகாமணியே—நம்பநின்

333. பாரிற் படுவன பன்மணியு நின்கடல்
நீரிற் படுவன நித்திலமும் - நேரியநின்

334. வெற்பில் வயிரமும் வேந்தநின் சோணாட்டுப்
பொற்பின் மலிவன பூந்துகிலும்—நிற்பணியக்

---

330. எட்டுத்திசை கவித்தது : 30. வேத்துக்குலகிரியில் - அரசர்களாகிய சிறந்த மலைகளுக்குள். மேரு - மேருவைப் போன்றவன்.

331. கலிங்கங்கள் ஏழு; கலிங்கம் ஏழு பிரிவுடையது என்பது நூல் வழக்கு; "பாவகன் வளைத்தெழு கலிங்கமும் விழுங்கப் பகட்டணி துணித்தொரு பெரும்பரணி கொள்ளும், சேவகன பங்கனக எங்கன் மதலாய்" (குலோத். பிள்ளைத். 88); "கால முற்றி யெழு காலெனும்படி கலக்கினெழு கலிங்கமும்" (வி. பா. இராசசூய. 58.) "கலிங்க மேழுங் கனவெரி பரப்ப" (பெருந். 799.) தானை - சேனை. தியாக சமுத்திரம் : விக்கிரம சோழனுடைய பட்டப் பெயர்களுள் ஒன்று; 216. கலிங்கம் தானை என்பன ஆடை யென்றும் வேறு பொருள் தந்தன. மானப்போரைச் செய்யும் வேந்தர் என்க.

(பி - ம்.) 'மான்போரில்' 'மாநேமி'

332. இம்பர் எழுபொழில் வட்டத்து - இவ்வுலகில் ஏழு தீவுகளிலுள்ள. மவுலிச்சிகாமணி - கிரீடத்திலுள்ள முடி மணி போல்வான். நம்ப-நம்பத்தக்கவனே.

(பி - ம்.) 'சிகாமணியே பைம்பொன்னின்'

333. படுவன - உண்டாவன. நின் கடல் என்றது தென்கடலை. நித்திலம் - முத்து. நின்வெற்பு என்றது இங்கே வயிராகரம் என்ற மலையை; "வஞ்சனை கடந்து வயிரா கரத்துக், குஞ்சரக் குழாம்பல வாரி", "மதவரை யீட்டம் வயிராகரத்து வாரி" (பெருந். 798-9.)

334. பொற்பு - பொலிவு. பூந்துகில் - பூத்தொழிலை யுடைய ஆடை. சோழ நாட்டில் 'துகிலி' என்னும் ஊருர் உள்ளது. நிற்பணிய - உன்னை வணங்க.

335. கொண்டா யிவடனது கொங்கைக் கொழுஞ்சுணங்கும்
தண்டா நிறையுந் தளிர்நிறமும்—பண்டைத்

336. துயிலுங் கவர்ந்ததுநின் தொல்குலத்து வேந்தர்
பயிலுந் திருநூற் படியோ—புயல்வளவ

337. மன்னிய தொண்டை வளநாடு வாளியும்
பொன்னி வளநாடு பூஞ்சிலையும்—கன்னித்

338. திருநாடு தேருங் குறையறுப்பச் செய்தால்
திருநாண் மடமகளிர் தம்மை—ஒருநாளவ்

---

335. கொண்டாய் - பேரிளம்பெண்ணிடமிருந்து கொண்டாய், தண்டா - நீங்காத. தளிர்நிறமும் - மாந்தளிர் போன்ற நிறத்தையும். பண்டைத் துயில் - நின்னைக் காணுவதற்கு முன் இருந்த உறக்கம்.

(பி - ம்.) 'தண்டாமரையும்', 'தண்டாமரையின்' 'பண்டத்'

336. தொல்குலம் என்றது படைப்புக்காலம் தொடங்கி மேம்பட்டு வருதல் பற்றி; குறள், 955, பரிமேல். திருநூல் - நீதிநூல். அரசர் ஆறிலொன்று கொள்ள வேண்டியிருப்ப, பேரிளம் பெண்ணிடமிருந்து மணி முதல் துயிலிறுதியாகவுள்ள பல பொருள்களைக் கவர்ந்தமைபற்றி இவ்வாறு கூறினர். "என்னெஞ்சு நாணு நலனு மிவையெல்லாம், மன்னன் புனறுடன் வெளவினன் - என்னே, அரவக லல்குலா யாறிலொன் றன்றோ, புரவலர் கொள்ளும் பொருள்" (முத்.) படியோ என்ற ஓகாரம் வினா. பயிலும் திருநூற்படியோ : "அரக்கரோ ரழிவுசெய்து கழிவரே லதற்கு வேறோர், குரக்கினத் தரசைக் 'கொல்ல மனுநெறி கூறிற் றுண்டோ" (கம்ப. வாலிவதைப். 79.) புயல் வளவ - மேகத்தைப்போற் கொடுக்கும் சோழ. (பி - ம்) 'தொல்குலத்து நீங்கள்' 'படியே'.

337. வாளி - அம்பு; என்றது காஞ்சியிலுள்ள மா, திருமுல்லைவாயிலிலுள்ள முல்லை, திருத்தணிகையிலுள்ள கழுநீர் என்பவற்றை. பொன்னிவளநாடு - சோழநாடு. பூஞ்சிலை - கரும்பு.

(பி - ம்.) 'வளநாட்டு வாளியும்', 'வளநாட்டுப் பூஞ்சிலையும்'

338. கன்னித்திருநாடு - பாண்டிய நாடு. தேர் - மன்மதன் தேராகிய தென்றல். குறையறுப்பச் செய்தால் - தலைவியைத் துன்புறுத்தும் குறையில்லாதபடி செய்தால். நாணையும் மடத்தையுமுடைய மகளிர்.

(பி - ம்.) 'குறைவறுப்பச்'

339. வேனற் கரசன் விடுமே யவன்சினமிப்
பானற்கண் ணல்லா ளுயிர்ப்பரமே—ஆனக்கால்

340. குன்றே யெனத்தகுசின் கோபுரத்திற் றூங்குமணி
ஒன்றே யுலகுக் கொழியுமே—என்றினைய

341. கூறி வணங்கிடு மிவ்வளவுங் கோதையர்மேற்
சீறி யனங்கன் சிலைவளைப்ப—மாறழியக்

342. குத்துங் கடாக்களிற்றுப் போந்தான் கொடைச்சென்னி
உத்துங்க துங்க னுலா.

---

339. வேனற்கரசன் : மன்மதன் ; 274. விடுமே - விடுவானு. பானற் கண் நல்லாள் - கருங்குவளை மலரைப் போன்ற கண்ணையுடைய பேரிளம் பெண்ணினது. உயிர்ப்பரமே - உயிரால் தாங்கப்படும் அளவுடையதா. கோபுரத்திற்குக் குன்று உவமை. மணி என்றது ஆராய்ச்சி மணியை ; "வாயிற் கடைமணி நடுநா நடுங்க" (சிலப். 20 : 53); "மன்னுயிர் காக்குஞ் செங்கோன் மனுவின்பொற் கோயில் வாயிற், பொன்னணி மணியைச் சென்று கோட்டினுற் புடைத்த தன்றே" (பெரிய. திருவாரூர்ச் சிறப்பு. 27.)

340. உலகுக்கு ஒன்றே ஒழியுமே - உலகத்துக்கு ஒருமணியே போதுமோ.

(பி - ம்.) 'உலகுக் கொழிக்குமே', 'உலகிற்கொழியுமே'

341. கோதையர் மேல் - மகளிர்மேல். மாறு - பகைவர்.

(பி - ம்.) 'வணங்குறு மிவ்வளவிற்', 'வணங்கு மிவளளவும்' 'சிலை வருத்த', 'அனங்கன் செருப்பெய்ய'

342. குத்தும் - கொம்பால் குத்துகின்ற; "கொங்க ருடல்கிழியக் குத்தி யிரு கோட்டெடுத்து, வெங்க ணழலின் வெதுப்புமே - மங்கையர்கண், சூழத் தாமம்புனையுஞ் சுந்தரத்தோண் மீனவனுக், கீழத்தா னிட்ட விறை" (சாஸனப் பாடல்) கொடைச் சென்னி - கொடையால் சிறந்த சோழன் ; "செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம், பெருமான் முகம் பார்த்த பின்னர் - ஒருநாளும், பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாம், காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்" (தண்டி. 21, மேற்.) உத்துங்க துங்கன் - உயர்ந்தோருள் உயர்ந்தவன். உத்துங்க துங்கன் கடாக்களிற்று உலாப்போந்தான்.

(பி - ம்.) 'குலச்சென்னி'

### வெண்பா

கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயும்
செய்ய கரிய திருமாலே—வையம்
அளந்தா யகளங்கா வாலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளிம் மான்.

---

(கு - ரை.) கையும்......திருமாலே : 158, குறிப்பு ; "கையும் பதமுந் திருவாயுங் கண்ணுஞ் செய்ய கருமுகிலே" (பகவற்கீதை, 11 : 26.) அகளங்கன் - விக்கிரம சோழன் பெயர். இம்மான் தளர்ந்தாள் ; இம்மான்-இத்தலைவி.

(பி - ம்.) 'ஆலிலை மேற் பாயல்'

உ

அத்தி முகத், துத்தமனே
நித்த நினே, சித்தமே.

# குலோத்துங்க சோழனுலா

## முன்னோர் பெருமை

1. நேர்மேவு பாய்புரவிப் பாசடைச் செங்கமலம்
போர்மேவு பாற்கடற் பூத்தனையோன்-பார்மேல்

**(பழையவுரை)** தேர்மேவிய பாய்புரவியில் பசுத்த நிறத்தொளியும் விரித்த வெயிலின் சிவந்த நிறனும் என்போலும் எனின், ஆரவாரத்தை யுடைய திருப்பாற்கடலின்கண் பாசடைக்கு நடுவே ஒரு கமலமலர் பூத்ததை ஒக்கும். பூத்தனையோன் - இவன் **ஆதித்தன்.**

**(குறிப்புரை)** புரவியாகிய பாசடையில். புரவிகளுக்குத் தாமரை யிலைகளும் சூரியனுக்குத் தாமரைமலரும் உவமை. சூரியன் தேரிற் பூட்டிய குதிரைகள் பச்சை நிறம்; "தனியாழித் தனிநெடுந்தேர்த் தனிப் பச்சை நிறப்பரியை......விடாய்தணிப்பான் பனிப்பகைவன் பனிசெய் வோன் பக்கஞ் சேர்ந்தான்" (**வி. பா.** வசந்த. 1.)

**(பிரதி பேதம்)** 'சோழ தேவருலா' 1. 'பாற்கடல் பூத்தனபோல்'

2. மருளப் பசுவொன்றின் மம்மர்நோய் தீர
உருளுந் திருத்தே ருரவோன்—அருளினுற்

**(ப - ரை)** பார்மேல் (1) சிறந்த பல்லுயிரும் மருளும்படியாக ஒரு பசுவினது மனேதுக்கமானது தீரும்படி உருளும் திருத்தேரையுடைய உர வோன்; இவன் ஆதி **மனுச்சக்கரவர்த்தி.**

**(கு - ரை)** திருத்தேருரவோன் ஆதிமனுவென்பது: **இராசராச.** 3; "அவ்வருக் கன்மக னுகிமனு மேதினிபுரந் தரிய காதலனே யாவினது கன்று நிகரென், றெவ்வ ருக்கமும் வியப்பமுறை செய்தகதை" (**கலிங்கத்.** இராச. 10); "வெய்யோனும், செம்மலேப் பண்டூர்ந்த தேரோனும்" (**சங்கர.** 3.) இவனே ஆதிமனு வழி வந்த வேறொருவன் என்பர் **சேக்கிழார்;** **பெரிய.** திருவாரூர்ச். 37.

**(பி - ம்)** 'மருளும் பசு' 'திருத் தேரை யூர்வோன்'

3. பேராப் பெரும்பகை தீரப் பிறவேந்தர்
ஊராக் குலிச விடையூர்ந்தோன்—சோராத்

(ப - ரை) தன் அருளினாலே (2), தேவராற் பேர்க்க அரிதான பெரிய பகை தீர்வதாகத் தன்னையொழிந்த அரசர் ஊராத வச்சிராயுதத்தை யுடைய விடையை ஊர்ந்தோன்.

குலிச விடை - இந்திரனாகிய இடபம் ; ஊர்ந்தோன் - இவன் **ககுத்த சக்கரவர்த்தி.**

(கு - ரை) இந்திரனாகிய காளையை ஊர்ந்தமை: **இராசராச.** 10; "இக்கு வாகுவுதவும் புதல்வனை வுரவோ னிகலுரஞ்செய புரஞ்சயன் புரந்தர னெனுஞ்,சக்கு வாயிரமுடைக்களிறு வாகனமெனத்தானிருந்து பொருதான வரை வென்றசயமும்" (**கலிங்கத்.** இராச. 11); "இவர் குலத்தோர், தோன்றலைப்பண் டிந்திரன்காண் விடையேறுய்ச் சுமந்தானும்" (**கம்ப.** குலமுறை. 3.)

(பி - ம்) 'பேரப் பிறவேந்தர்'

4. துயில்காத் தரமகளிர் சோர்குழைகாத் தும்பர்
எயில்காத்த நேமி யிறையோன் - வெயில்காட்டும்

(ப - ரை) தனது ஆற்றலால் சோர்ச்சி பிறவாமல் (3) துயிலைக்காத்து அரமகளிர் குழைச்சோர்பு காத்து அமராபதி எயில் காத்த நேமிப் படையை யுடைய இறையோன்; இவன் **முசுகுந்த சக்கரவர்த்தி.**

(கு - ரை) முசுகுந்தன் : கும்ரக்கடவுள் வருமளவும் இவன் இந்திரன் வேண்டுகோளால் தேவலோகத்தைக் காத்திருந்து சோர்வு வாராமல் நீண்டகாலம் தூங்கும் வரத்தைத் தேவர்பால் பெற்றனன் ; **பாகவதம்,** 10, முசுகுந்தற் கருள்புரி. 20. குழை - கர்தணி : இது மங்கலநாண் போன்ற சிறப்புடையது ; இதனைக் காத்தலாவது அரமகளிர் மங்கலம் கெடாமல் நிலவும்படி நிறுத்துதல் ; **விக்கிரம.** 71 ; "நாந்தேவ ரென்பார் தம்பாவை யர்க்கன் றுகாதோலை பாலித்த தயவாளர்" (**மதுரைக்கலம்.** 29.) நேமி - ஆஞ்ஞா சக்கரம்.

5. அவ்வா னவர்கோ னொருமணி யாசனத்தில்
ஒவ்வாம லேத்த வுடனிருந்தோன்—கவ்வை

(ப - ரை) வெயிலைக் காட்டும் (4) கடவுள் மணியாசனத்திலே அவ் வானவர் கோனும் முகந்தாழ்க்கத் தேவவுலகம் பரவ உடனிருந்தவன் ; இவன் **திலீபன்.**

(பி - ம்) 'ஒருமடங்க லாசனத்தில்' 'ஒவ்வாமலொக்க'

6. எழக்குரைக்கும் பேழ்வா யிருங்கூற்றுக் கேற்ப
வழக்குரைக்குஞ் செங்கோல் வளவன்—பழக்கத்தாற்

(ப - ரை) பெரிய வாயினாலே குரைக்கும் ஆரவாரம் (5) மாறக்கூற் றுக்கேற்ப வழக்குரைத்தவன் ; இவன் **பெருநற்கிள்ளி.**

(கு - ரை) கூற்றுக்கு வழக்குரைத்தமை : **விக்கிரம.** 7 ; **சங்கர.** 5 ; **கலிங்கத்.** இராச. 15. கவ்வை - ஆரவாரம். எழ - கெட ; **தக்க.** 720. பேழ்வாய் - பெரிய வாய் ; முருகு. 47.

(பி - ம்) 'கூற்றுக்கேற' 'வழக்குரைக்குங் கிள்ளி', 'வழக் குரைத்த கிள்ளிவளவன்'

7. போந்த புலியுடனே புல்வா யொருதுறைநீர்
மாந்த வுலகாண்ட மன்னர்பிரான்—காந்தெரியில்

(ப - ரை) கொலையின் பழக்கத்தாற் (6) போந்த புலியுடனே உறவின் பழக்கத்தாற் போந்த தன்மை போலப் புல்வாய் ஒருதுறையிலே நீருண்ண உலகத்தை யாண்டவன் ; இவன் **மாந்தாதா.**

(கு - ரை) புலியும் மானும் ஒரு துறையில் நீருண்ண ஆண்டமை : **விக்கிரம.** 5 ; **இராசராச.** 5 ; "ஒரு துறைப் புனல் சினப்புலியு மானுமுடனே, உண்ணவைத்த வுரவோன்" (**கலிங்கத்.** இராச. 12) ; "புலிப்போத்தும் புல்வாயு மொருதுறையினீருண்ண வுலகாண்டோன்" (**கம்ப.** குலமுறை. 5); "எம்மறிக்கும் இம்ப ரடுபுலிக்கு மொக்கநீ ரீந்தோனும்" (**சங்கர.** 3-4) ; ஏதேனும் ஒரு நிகழ்ச்சியைச் சிறப்பித்துக் கூற விரும்பும்போது மக்கள், 'மனு மாந்தாதா காலங்களில் இப்படி இது நடந்தது' என்று கூறுவது வழக்கு.

(பி - ம்) 'வுலகாண்ட மாந்தாதா'

8. வெந்தா ருயிர்பெற் றுடல்பெற்று விண்ணுள
மந்தா கினிகொணர்ந்த மன்னர்கோன்—முந்திப்

(ப - ரை) மஹாவிருடி கோபத்தாலே வெந்த சகரர் தேவவுலகத் துப் பயனையாள மந்தாகினியைக் கொண்டு வந்த இராசராசன் ; இவன் **பகீரதன்.**

(கு - ரை) பகீரதன் கங்கை கொணர்ந்தது : **இராசராச.** 8 ; **கம்ப.** குலமுறை. 9. விண் - தேவ உலகத்து இன்பம் ; ஆகுபெயர்.

(பி - ம்) 'விண்ணுலகின்' 'முந்து', 'முந்தப்'

9. பொருதேர்க ளீரைந்தி னீரைவர் போர்பண்
டொருதேரால் வென்ற வுரவோன்—கருதி

(ப - ரை) எத்தேர்க்கும் முற்பட்டுப் (8) பொரத்தக்க தேர்கள் ஈரைந் தின் ஈரைவர் போரை முன்பு ஒரு தேரால் வென்ற உரவோன் ; இவன் **தசரத சக்கரவர்த்தி.**

(கு - ரை) பத்துத்தேர்களை ஒரு தேரால் வென்றமை : **இராசராச.** 11 ; **கம்ப.** 2. மந்திரப். 19. சம்பராசுரனே பத்து வீரர்களாகிப் பத்துத்தேர் களில் வந்தனனென்பது **ஆனந்த ராமாயணத்திற்** காணப்படுமென்பர்.

(பி - ம்) 'பொருதேர் களிறைந்தின்'

10. மலைபத்தும் வெட்டு முருமின் மறவோன்
தலைபத்தும் வெட்டுஞ் சரத்தோன்—நிலைதப்பா

(ப - ரை) மறவோன் - இராவணன். வெட்டுஞ் சரத்தோன் : இராமன்.

(கு - ரை) மலையை வெட்டும் இடி : "மரந்தின்னூஉ வரையுதிர்க்கு, நரையுருமி னேறனையை" (மதுரைக். 62-3.)

(பி - ம்) 'மலைபத்து மெட்டுமுருமின்'

11. மீளி தலைகொண்ட தண்டத்தான் மீளிக்குக்
கூளி தலைபண்டு கொண்டகோன்—நாளும்

(ப - ரை) நிலைதப்பா (10) மீளி - பேய்த்தலைப் பெருமங்கலமுடையார். பண்டு கொண்டகோன் - கரிகாற் சோழ சக்கரவர்த்தி.

(கு - ரை) பேய்த்தலைப் பெருமங்கலமுடையார் : "கோட்டை வாசலிற் கூளிதன் பலத்தால், வாட்டமில் வளவனை மலைவறப் பொருதிடும், வடவரசரைப்பெரு மங்கல முடையீர், படைபொரு தவசயப் படுத்துமென் றேவலும், காத்தெழு பத்திர காளியா லந்தப், பேய்த்தலை கொண்டு பெரும்படை செயித்தோம்" (சோழமண்டல. 95, மேற்.) ; "களத்திற் பொலிகா டவன்பணியக் கண்டான் கொண்டான் களவகுப்புத், தளத்திற் பெரிய வடவரசர் தாமே விடும்பேய்த் தலைகொண்டான், உளத்திற் பரவு காளியரு ளுடையான் சோழ னுவப்புடையான், வளத்திற் பெருமங் கலமுடையான் வளஞ்சேர் சோழ மண்டலமே" (சோழமண்டல. 94.) கூளி - பேயினது.

(பி - ம்) 'மீளிக்கே'

12. பதுமக் கடவுள் படைப்படையக் காத்த
முதுமக்கட் சாடி முதலோன்—பொதுமட்க

(ப - ரை) நாளும் (11) - பல அரசர் காலத்தும். முதுமக்கட் சாடி உளவாதற்கு முதலோன் ; இவன் நாபாகன்.

(கு - ரை) பதுமக் கடவுள் - பிரமதேவன். படைப்பு அடைய - ஆக்கப்பட்ட உயிர்கள் முழுவதையும். முதுமக்கட் சாடி : பண்டைக் காலத்திற் பிராயத்தால் முதிர்ந்தவர்கள் துன்பமின்றி இருத்தற்கும், ஆசீவகர் தவஞ் செய்தற்கும், பிணங்களை யிட்டுக் கவித்தற்கும் உபயோகப்பட்டு வந்த தாழிகள் இப்பெயரால் வழங்கிவந்தன ; விக்கிரம. 8 ; சங்கர. 6 ; "தாழி கவிப்பத் தவஞ்செய்வார் மண்ணுக, வாழிய நோற்றனை மால்வரை", (தொல். புறத். 5, ந. மேற்.) ; புறநா. 228, 238, 256, 364; மணி. 6 : 67; தக்க. 376. பொதுமட்க - பூமி மற்ற அரசருக்கும் பொது என்பது இல்லையாகும்படி ; "சினப்போர் வழுதி, தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன்" (புறநா : 51 : 4-5.) மட்க - கெடும்படி : "பருதிகண் மட்கவருமொரு கட்கமே" (தக்க. 162.) நாபாகன் : இவன் அஜனுடைய பிதா ; விஷ்ணுபுராணம்.

(பி - ம்) 'கடவுட் படைப்பு' 'பொதுமக்கள்'

13. வாங்கெயி னேமி வரையாக மண்ணுண்டு
தூங்கெயில் கொண்ட சுடர்வாளோன்—ஓங்கிய

(ப - ரை) இருட்டவாகு (இக்ஷ்வாகு)

(கு - ரை) வாங்கு எயில் நேமி - வளைந்த சக்கரவாளகிரி; தக்க. 2. தூங்கெயில் எறிந்தது ; விக்கிரம. 9; இராசராச. 13 ; புறநா. 39 : 6 ; சிலப். 29 : " வீங்குநீர் "; மணி. 1 : 4; பழமொழி. 49 ; கலிங்கத். இராச. 17 ; " திறல் விளங் கவுணர் தூங்கெயி லெறிந்த, விறன்மிகு முரசின் வெல்போர்ச் சோழன் " (தொல். களவு. 11, ந. மேற்.)

14. மால்கடற் பள்ளி வறிதாக மண்காத்து
மேல்கடல் கீழ்கடற்கு விட்டகோன்—கோல்கொன்

(ப - ரை) மால் கடற்பள்ளி வறிதாக விட்ட கோன்; சங்கரண (சம்ஹர்ஷண) சக்கரவர்த்தி. மேலைக் கடற்குள்ளே பூமண்டலத் தெல்லை கொள்ளக்கிடத்தலின் அவ்வெல்லை திருத்தவேண்டிப் பத்துநாள் ஆதித்தனைத் தேகத்திலே தரித்துக் கிரணங்களாலே மேற்கடற்சலத்தை வாங்கிக் கீழ் கடலிலே விட்ட கோன்.

(கு - ரை) சூரியன் கடலை வற்றச் செய்தல் : 80. கோல்கொன்று - ஓட்க்கோலை வருத்தி ; " கழைநிலை பெறுஅக் காவிரி நீத்தம் " (அகநா. 6 : 6) ; கலிங்கத். இராச. 16 ; நற். 7 - 4. (உரை) விட்டகோன் : விக்கிரம. 9; இராசராச. 17.

(பி - ம்) 'மண்ணுண்டு' 'கோல்கொண்டலை'

15. றலையெறியுங் காவேரி யாற்றுப் படைக்கு
மலையெறியு மன்னர்க்கு மன்னன்—நிலையறியாத்

(ப - ரை) இவன் சிவுகன்.

(கு - ரை) காவேரியாற்றுப் படைக்கு - காவிரி நதியை வழிப்படுத்துதற் பொருட்டு; ஆற்றுப்படை - வழிப்படுத்துதல் ; முருகு. 24, உரை.

சோழன் தன் கைவாளால் மலைகளை யெறிந்தது : விக்கிரம. 12 : இராசராச. 85; " மலைகொன்று பொன்னிக்கு வழிகண்ட கண்டன், வரராச ராசன்கை வாளென்ன வந்தே " (தக்க. 549) ; ' பண்டு காவேரியைக் கிழக்கு நோக்கிப் போகவொட்டாது தடுத்த சைய பருவதத்தை நடுவற வெட்டிய சோழன் ராசராசனுடைய திருக்கையிற் பிடித்தருளின வாள் ' (தக்க. 549, உரை) ; " சைய, மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணி நாள் வாழ்த்திக், கொலைச்சிறைதீர் வேந்துக் குழாம் " (தொல். புறத். 36, ந. மேற்.) " காவிரிப்புனல் கொணர்ந்தவவனும்" (கலிங்கத். இராச. 15) ; "தொக்க கலியின்மூ வாயிரத்துத் தொண்ணூற்றில், மிக்க கரிகால வேந்த

னுந்தான் - பக்கம், அலைக்கும் புகழ்ப்பொன்னி யாறுகரை கண்டான், மலைக்கும் புயத்தானும் வந்து" (பெருந்தொகை, 778.)

16. தொல்லார் கலிவலையந் தோள்வலைய முன்றிருந்த
வில்லா னடுவுள்ள வெற்பெடுத்தோன்—ஒல்லைக்

(ப - ரை) தோற்றமும் முதலும் தெரியாத கடல்வட்டம் தோளுக்கு வலையமாக முதலில் திருந்த விற்படையாலே இடித்து நடுவுண்டான மலைகளை மாற்றினோன்; இவன் பிருது சக்கரவர்த்தி.

(கு - ரை) பிருது; குமாரசம்பவம், 1 : 2-ஆம் சுலோகம். பூமி தோள் வலையமாதல்; "பண்டளந்த, மண்ணேழும் வாகு வலயமோ" (151.)

(பி - ம்) 'வலயத்தோள் வலையமுந்திருந்த'

17. கொலையே றுடம்படையக் கொய்தாலு மெய்தாத்
துலையேறி வீற்றிருந்த தோன்றல்—தலையேறு

(ப - ரை) உடம்படையக் கொலையேறக் கொய்தாலும் நடுவெய்தாத துலையிலே யேறி அரியாசனத்திருந்த தன்மைபோல வீற்றிருந்தவன்; இவன் சிபி சக்கரவர்த்தி.

(கு - ரை) அடைய - முழுதும். வீற்றிருந்த - கவலையின்றி இருந்த. சிபி : விக்கிரம. 11; இராசராச. 6; புறநா. 37 : 5-6, 39 : 1-3, 43 : 5-8, 46 : 1-2; சிலப். 20 : 51-2, 23 : 57-8, 29 : 'அம்மானை வரி'; கலிங்கத். இராச. 13; கம்ப. திருவவதார. 65; குலமுறை. 7; விபீடணன் அடைக்கல. 110; கும்பகருணன் வதை. 355; குறள், 72, பரிமேல்; சங்கர. 11.

(பி - ம்) 'வீற்றிருந்த சோழன்'

18. மண்கொண்ட பொன்னிக் கரைகட்ட வாராதாள்
கண்கொண்ட சென்னிக் கரிகாலன்—எண்கொள்

(ப - ரை) கரைகட்ட வாராதாள் ஈழத்துப்பிடாரி.

(கு - ரை) வாராதாளது கண்ணை; கலிங்கத். இராச. 20.

(பி - ம்) 'வாராதான்' 'சென்னிக் கனைகாலன்'

19. பணம்புணர்ந்த மோலியான் கோமகளைப் பண்டு
மணம்புணர்ந்த கிள்ளி வளவுன்—அணங்கு

(ப - ரை) சேடனுடனே எண்கொள்ளும் (18) ஆயிரம் பணம் புணர்ந்த மோலியினோன்; அவன் உவச்சேனன் என்னும் நாகராசன். அவன் மகளைத் திருமணம் புணர்ந்தவன் கிள்ளியாகிய வளவன்.

(கு - ரை) ஒப்பு : விக்கிரம. 10; இராசராச. 16; "தளவழிக் குகையினிற் பொதி யிலத்தின் வழியே தனிநடந்துரகர் தங்கண்மணி கொண்டவனும்" (கலிங்கத். இராச. 18); பெரும்பாண். 29-31 : மணி. 24 : 54-9, 25 : 178-9; 29: 3-5; சங்கர. 8.

(பி - ம்) 'மௌலியான்'

20. படுத்துப் பொறையனைப் பொய்கைக்குப் பண்டு
கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன்-அடுத்தடுத்துச்

(ப - ரை) அணங்கு (19) - நோவு. பொறையன் - சேரன். கொண்டோன் - **தஞ்சை விஜயாலயன்.**

(கு - ரை) பொறையன்- சேரமான் கணைக்காலிரும் பொறை. களவழி நாற்பதைக்கொண்டவன் சோழன் செங்கணான் என்பது **புறநா.** 74-ஆம் செய்யுளாலும், 'சோழன் செங்கணானும் சேரமான் கணைக்காலிரும் பொறையுந் திருப்போர்ப்புறத்துப் பொருதுடைந்துழிச் சேரமான் கணைக் காலிரும் பொறையைப் பற்றிக்கொண்டு சோழன் செங்கணான் சிறைவைத் துழிப் பொய்கையார் களம்பாடி வீடுகொண்ட களவழி நாற்பது' என்னும் தொடராலும் அறியப்படும்; **விக்கிரம.** 14; **இராசராச.** 18; **சங்கர.** 14; "செய்கை யரிய களவழிப்பா முன்செய்த, பொய்கை யொருவனாற் போந் தரசோ,........கொலைச்சிறைதீர் வேந்துக் குழாம்" (**தொல்.** புறத். 36, **ந.** மேற்.); **கலிங்கத்.** இராச. 19.

(பி - ம்) 'பொய்கைக்கவிக்குக்'

21. சீறுஞ் செருவிற் றிருமார்பிற் றொண்ணூறும்
ஆறும் படுதழும்பி னாகத்தோன்—ஏறப்

(ப - ரை) இவன் **இராச ராச தேவன்.**

(கு - ரை) இவன் முதலாம் இராசராச சோழன்; **விக்கிரம.** 15; **இராசராச.** 19; **சங்கர.** 15.

(பி - ம்) 'திருமார்பு தொண்ணூறு' 'ஏறும்', 'ஏறு', 'வேறு'

22. பிரம வரக்க னகலம் பிளந்து
பரமர் திருத்தில்லை பார்த்தோன்—நரபதியர்

(ப - ரை) எல்லாருங்கண்டு ஈடேறும்படி (21) பரமானந்த தாண்டவமாடும் திருத்தில்லைக் கூத்தனது ஸந்நிதியாலே காவலான பிரமராக்ஷஸனது மார்பைப் பிளந்து திருத்தில்லை நடம்பார்த்தோன்; இவன் திரிமுடிச்சோழன்.

(கு - ரை) திரிமுடிச்சோழன் - மும்முடிச்சோழன். ஏறப்பார்த்தோ னெனக் கூட்டுக. (உரை) (பி - ம்) இருமுடிச்சோழன்: "சிறிய தாதை யாகிய எறும்வலிக், கங்கை கொண்ட சோழனைப் பொங்கிகல், இருமுடிச் சோழ னென்றும்" (**மெய்க்கீர்த்தி.**)

23. தாழமுன் சென்று மதுரைத் தமிழ்ப்பதியும்
ஈழமுங் கொண்ட விகலாளி—சூழவும்

(ப - ரை) இவன் **கரிகாற் பெருவளத்தான்.**

(கு - ரை) மதுரைத் தமிழ்ப்பதி: "தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மறுகின் மதுரை" (**சிறுபாண்.** 66-7.) கரிகாற் பெருவளத்தான்:

இவன் முதலாம் பராந்தகன்; "வெங்கோல் வேந்தன் தென்னன் நாடும் ஈழமும் கொண்டதிறற், செங்கோற் சோழன் கோழிவேந்தன் செம்பியன்" (**கண்டராதித்தர்** திருவிசைப்பா, 8); **கலிங்கத்.** இராச. 23.

(**பி - ம்**) 'மதுரைத் திருப்பதியும்'

24. ஏறிப் பகலொன்றி லெச்சுரமும் போயுதகை
நூறித்தன் றூதனை நோக்கினோன்—வேறாகக்

(**ப - ரை**) இவன் முடிகொண்ட சோழன். தூதனை நோக்குதல் அவன் சேரன்முன் களைந்த தூசினை இடுகவென்ற குறிப்பு நோக்கு.

(**கு - ரை**) சுரம் - பாலைநிலம்; இது சேரநாட்டு உள்ளது. "வான வரம்ப னன்றூட் டும்பர், வேன னீடிய வெங்கடறு" (**அகநா.** 389 : 16-7); "வடக்குப்பெரும்பாலை" (**பெருந்தொகை,** 2105.) பாலைநிலம் பதினெட்டு என்பர்; **விக்கிரம,** 17 ; **இராசராச.** 21 ; **சங்கர.** 17 ; உதகை: குடமலை நாட்டிலுள்ள ஒரு கோட்டை அரசரும் அவருடைய தூதர் முதலியோரும் தம்மேலாடையைக் களையாமை மரபு; "தருகதுகி லெனவெழுந்து தங்களேவன் பொடுதுச்சா தனன்சொ லாமுன், வருகவென வரைமார்பின் வாங்காத வுத்தரியம் வாங்கியீந்தான்" (**வி. பா.** சூதுபோர். 246) ; 'சீவரம் போர்த்தல் மத்திம தேசத்தாராசார மன்றோ? மூத்தோர் முன் இளையார் போர்வை வாங்குவது போல' (**நீலகேசி.** 3: 13, உரை.) வேறாக - மற்ற அரசர்களை வெல்லும் முறையினின்றும் வேறாகும்படி.

(**பி - ம்**) 'வேறெக்க' உரை. 'தூவினை'

25. கங்கா நதியுங் கடாரமுங் கைவரச்
சிங்கா தனத்திருந்த செம்பியர்கோன்—எங்கோன்

(**ப - ரை**) கங்காநதியுங் கடாரமுங் கைவரத் தண்டேவிக் கொள்ளாமல் அவரிருந்த ஆதனம் பேராத ஆதனமென்ற குறிப்பால் அஞ்சனம் போலத் தோன்ற அத்திசை முகமாக விடும் அரியாசனத்திருத்தலால், சிங்காதனத்திருந்த செம்பியர் என்றார்; கங்கை கொண்ட சோழன்.

(**கு - ரை**) கடாரம்; மலேயா தீபகற்பத்திலுள்ளதும் இக்காலத்தில் 'கெடா' (kedah) என்று வழங்கப்படுவதுமாகிய தேசம். **கங்கை கொண்ட சோழன்**; இவன் பரகேசரி வர்மன் இராஜேந்திர சோழதேவன். **விக்கிரம.** 18 ; **கலிங்கத்.** 25.

(**உ ரை**) அவர் என்றது கங்கைக்கும் கடாரத்திற்கும் உரிய அரசர்களை ; அஞ்சனம் - புதையல் முதலியவற்றைக் காணுதற்குரிய ஒருவகை யான மை.

(**பி - ம்**) 'கங்காபதி புரந்தகற்பகம்' 'கைவாரிச்' ; 'கைக்கொண்டு'

26. புவிராச ராசர் மனுமுதலோர் நாளில்
தவிராத சுங்கந் தவிர்த்தோன்—கவிராசர்

(**ப - ரை**) சுங்கந்தவிர்த்த பெருமாள் **குலோத்துங்கசோழதேவர்**

(கு - ரை) மனுமுதலோர் நாளிலும் தவிராத சுங்கம்; 'மன்னர் வழி வந்த சுங்கந்தவிர்த்த - ஸ்ரீ பரதாழ்வான் முதலாக வந்த சுங்கந்தவிர்த்த' (தக்க 775, உரை); விக்கிரம. 26; இராசராச. 26. 'சுங்கந்தவிர்த்து இருள் நீக்கி உலகாண்ட' (சிலாசாசனம்.) இவன் முதற் குலோத்துங்கன். கவிராசர் - கவிச்சக்கரவர்த்தியாகிய சயங்கொண்டார்; "பாடற் பெரும்பரணி தேடற் கருங்கவி கவிச்சக்ரவர்த்தி பரவச் செஞ்சேவகஞ் செய்த சோழன்றிருப் பெயர" (குலோத். பிள்ளைத். 14.)

(பி - ம்) 'புவிராச ராசன்' 'மனுகுலத்தோர் போனர்' 'போற்றத்'

27. போற்றும் பெரியோ னிவன்பின்பு பூதலங்கள்
ஆற்றுந் திருத்தோ ளகளங்கன்—வேற்றார்

28. விரும்பரணில் வெங்களத்தீ வேட்டுக் கலிங்கப்
பெரும்பரணி கொண்ட பெருமான்—தரும்புதல்வன்

(ப - ரை) 27-8. விக்கிரம சோழ தேவர்.

(கு - ரை) 27. பெரியோன் - முதற்குலோத்துங்கன். அகளங்கன் - விக்கிரம சோழன்; திருவரங்கத்தில் ஒரு வீதிக்கு 'அகளங்கன் திருவீதி' என்பது பெயர்; பூவாளூருக்கு அருகில் அகளங்க நல்லூர் என்ற ஓர் ஊரும் சிதம்பரம் ஆயிரக்கால் மண்டபத்துக்குக் கிழக்கே 'ஸ்வஸ்திஸ்ரீ அகளங்கன் மண்டபம்' என்ற கல் வெட்டுள்ள தூண் ஒன்றும் உள்ளன; குலோத். உலா, 11; விக்கிரம, 59, 152, 182, 209, 256; "வையம் அளந்தா யகளங்கா" (விக்கிரம. இறுதிவெண்பா.) வேற்றார் - பகைவர். 28. விரும்பு கின்ற அரணில். வெங்களத்தில் தீயை வேட்டு; என்றது களவேள்விசெய் ததைக் கூறியபடி; புறநா. 372: 12. கலிங்கப் பெரும்பரணி: இஃது ஒட்டக்கூத்தரால் விக்கிரம சோழன்மீது பாடப்பெற்றது. "செருத்தந்தரித்துக் கலிங்கரோடத் தென்றமிழ்த் தெய்வப் பரணி கொண்டு, வருத்தந் தவிர்த்துல காண்டபிரான் மைந்தற்கு மைந்தனை வாழ்த்தினவே" (தக்க. 776) 'இப்பரணி பாடினார் ஒட்டக்கூத்தரான கவிச்சக்கரவர்த்திகள். பாட்டுண்டார் விக்கிரம சோழ தேவர்' (தக்க. 776, உரை); இராசராச. 27-8.

(பி - ம்) 27. 'பெரியோரிவர் பின்பு' 28. 'வெங்களந்தீ' 'பெருமாள், தரும் புதல்வன்'

## இரண்டாங் குலோத்துங்கன்

29. கொற்றக் குலோத்துங்க சோழன் குவலயங்கள்
முற்றப் புரக்கு முகில்வண்ணன்—பொற்றுவரை

30. இந்துமரபி லிருக்குந் திருக்குலத்தில்
வந்து மனுகுலத்தை வாழ்வித்த—பைந்தளிர்க்கை

31. மாதர்ப் பிடிபெற்ற வாரணமவ் வாரணத்தின்
காதற் பெயரன் களகளபன்—யாதினும்

32. தீட்டற் கரிய திருவே திருமாலை
சூட்டத் திருமகுடஞ் சூடியபின்—நாட்டு

(ப - ரை) 29-32. மாதர்ப்பிடி - பெண் சக்கரவர்த்தி. வாரணம் - பெண் சக்கரவர்த்தியின் பிதா [வான பாண்டியன் முதலியாரைக் கும்பிட]; அவர் யோகீசரான காலையிற் பேர், வாரணவாசித் தேவர். திருவின் செல்வி மாலை சூட்ட அபிஷேகஞ் சூடிய பின்னராக.

(கு - ரை) 29. கொற்றம் - அரசுரிமை ; "ஒருவன் மேற் கொற்றம் வைப்பின்" (சீவக. 204) ; 'கொற்றங் கொண்டது' (பெருங். 4 : 11.) முகில் வண்ணன் : இதனால் குலோத்துங்க சோழன் கரிய நிறமுடையவன் என்று தெரிகின்றது ; "தடமுகில், அஞ்சன சைலத் தபிடேகஞ் செய்வதென, மஞ்சனமாடி" (61-2), "மைம் முகில் வண்ணத்து வானவன்" (193.) துவரை - துவார சமுத்திரம் ; "உவரா வீகைத் துவரை யாண்டு" (புறநா. 201-10.) மனுகுலம் - சோழர் குலம். 30. இந்து மரபில்......பிடி : "விந்துகுல நாயகி சேயென்பார்" (112.) பெண் சக்கரவர்த்தி : விக்கிரம. 40 ; "பெண் சக்கவர்த்தி முகத்திரண்டு, விழியும் புருவமுமாகியிப் போதுனை வெல்கின்றவே" (தனிப்பாடல்.) (உரை - பி - ம்) பெண் சக்கரவர்த்திகள் பிதா கூன களபன்: "கண்ணன் கனகளபன் கண்டன்" (இராசராச. 38.) திரு - திருவின் செல்வி ; குலோத்துங்கன் மனைவி (61.) (உரை) வாரணவாசி: இப் பெயருள்ள ஊரொன்று அரியிலூருக்குத் தென்பாலுள்ளது.

(பி - ம்) 30. 'மரபிலிருந்து' 'மனுமரபை' 31. 'பெயரான்' ; 'கனகள்வன்' 'கனகளவன்' 'யாதானும்'

33. முறைவிட்ட வேற்று முடிமன்னர் தத்தம்
சிறைவிட் டரசருளிச் செய்து—கறைவிட்டு

(கு - ரை) நாட்டு (32) முறை விட்ட - தாம் ஆளும் நாட்டின் முறைமையை இழந்த. சிறைவிட்டு - சிறையிலிருந்து விடுவித்து. கறை - கப்பம். சிறைவிடுதலும், கறைவிடுதலும் : சீவக. 306, 2372, அடிக்.

(பி - ம்) 'முறைவிட்டு' 'கறைவிட்ட'

34. மைஞ்ஞாக மெட்டு மதநாக மோரெட்டும்
பைஞ்ஞாக மெட்டும் பரந்தீர—இஞ்ஞாலம்

(கு - ரை) மைஞ்ஞாகம் - மேகங்களையுடைய மலை. மதநாகம் - திக்கயங்கள். பைஞ்ஞாகம் - படத்தையுடைய பாம்புகள். இம்மூவகை நாகங்களும் உலகைத் தாங்குவன ; இராசராச. 237.

(பி - ம்) 'மைங்நாக', 'பைங்நாக,' 'பரந்தீர்த்து', 'பரங்கெடுத்து' 'பரந்தீர்ப்பித்'

35. தாதைக்குப் பின்பு தபனற்குந் தோலாத
போதத் திமிரப் பொறைநீக்கி—மாதரில்

(ப - ரை) போத......நீக்கி - ஞானவுபதேசம் பெற்று,

(கு - ரை) தபனற்கும் - சூரியனுக்கும். தோலாத - தோல்வியடையாத. போதத்திமிரம் - ஞானத்தை யழிக்கின்ற அஞ்ஞானம்; "மங்குல் ஞாயிறு" (பரி. 13 : 1, உரை.) சூரியனுக்குந் தோலாத அஞ்ஞானம் : "வெங்கதிர்க்குஞ் செந்தீ விரிசுடர்க்கு நீங்காது, பொங்கு மதியொளிக்கும் போகாது - தங்கும், வளமையான் வந்த மதிமருட்சி மாந்தர்க், கிளமையான் வந்த விருள்" (தண்டி. 48. மேற்.)

(பி - ம்) 'தாதைக்குந் தங்கள்', 'தபனர்க்குங் கேளாத', 'பொறை தீர்த்து'

36. ஒக்க வபிடேகஞ் சூடு முரிமைக்கண்
தக்க தலைமைத் தனித்தேவி—மிக்க

(கு - ரை) ஒக்க அபிடேகம் சூடுதல்; அபிடேகம் - கிரீடம்; இராசராச. 89; "மடமயிலொக்க மகுடங் கவித்தாள்" (61) "திருமகள்போல வொரு மயிலெனட்டி, உடன்முடி கவித்த கடனறி கற்பின், இயற்பெருந் தேவி" (பெருங். 2. 4 : 22-4.)

(பி - ம்) 'செய்யு முரிமைக்கண்', 'நிலைமைத் தனித்', 'தனிமைத் தனித்'

37. புவனி முழுதுடைய பொற்றொடியுந் தானும்
அவனி சுரர்சுருதி யார்ப்ப—நவநிதிதூய்

(ப - ரை) நவநிதிதூய் - புதுமையான தானம்; கற்பகதரு தானம், சுவேமாப்பிர தானம், விசுவசக்கர தானம், மகாதானம், சுரபிதானம்.

(கு - ரை) புவனி முழுதுடைய பொற்றொடி : இவள் தியாகவல்லி என்றும் வழங்கப்படுவாள். அவனிசுரர் - பிராமணர். சுருதியார்ப்ப - வேதங்களை யோத.

(பி - ம்) 'புவன முழுதுடைய', 'பொற்கொடியுந் தானும்'

## தில்லையிற் செய்த திருப்பணிகள்

38. ஏத்துத் தருங்கடவு ளெல்லையி லானந்தக்
கூத்துக் களிகூரக் கும்பிட்டுப்—போத்தின்மேற்

39. றில்லைத் திருமன்ற முன்றிற் சிறுதெய்வத்
தொல்லைக் குறும்பு தொலைத்தெடுத்து—மல்லற்

40. றகும்பு வளர்கனித் தண்பெரு நாவல்
அசும்பு பசும்பொ னடுக்கிப்—பசும்பொன்

(ப - ரை) 38-40. அடியாருக்கு ஏத்துதலைத் தரும் கடவுளது இறுதியில்லாத ஆனந்தக் கூத்தைக் கண்ணும் மனமும் களிகூரக் கும்பிட்டு, ஆங்கதும்

காட்டிடென்று தில்லையம்பல முன்றிலின் வரங்கிடந்த போத்தின் மேலான்றனது மமதையாகிய குறும்பைக் கீழ்ப்படுத்தி அருளாலே யெடுத்த மன்றத்துச் சிவனேவலிலே வளப்பாடுண்டாகச் சம்புத்தீவிற் பெருநாவற்றண்கனி ஒழுகு பசும்பொன்னாற்செய்த பூரணகும்பம் நிறைத்து ; தசும்பு - குடம்.

(கு - ரை) இது முதல் 58-ம் கண்ணிமுடியத் தலைவன் சிதம்பரத்திற் செய்த திருப்பணிகள் கூறப்படும் ; இராசராச. 30-33. 38. ஏத்துதலைத் தருங் கடவுள்: "ஆரத் தழையராப் பூண்டம் பலத்தன லாடியன்பர்க் காரத் தழையன்பருளி நின்றோன்" (சிற். 91.) ஆனந்தக் கூத்து - பரமானந்த தாண்டவம். கண்ணும் மனமுங் களிகூரக் கும்பிட்டு : "ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள வளப்பருங் கரணங்க ளான்கும், சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிகமே யாக, இந்துவாழ் சடையா னாடுமா னந்த வெல்லையி றனிப்பெருங் கூத்தின், வந்தபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்" (பெரிய. தடுத்தாட். 106.) போத்து - கருடன் ; 'மயிற்போத்து' என்றாற்போல. 39. குறும்பு தொலைத்தெடுத்தது ; இராசராச. 33 ; "முன்றிற் கிடந்த தடங்கடல்போய் முன்னைக் கடல்புகப் பின்னைத் தில்லை, மன்றிற் கிடங்கண்ட கொண்டல்" (தக்க. 777) என்னுந் தாழிசையாலும், அதன் உரையாலும், "அம்பொற் கொடைச்சக்ர ளாயிரத்தின் மேனூற்பத், தொன்பதாம் வர்ஷத் துயர்தில்லைத் - தென்பாலிற், சென்னி குலோத்துங்கன் சித்திரகூ டத்திருமால், தன்னை யலையெறி நாடான்" (இராமானுஜ திவ்ய சரிதை) என்னுஞ் செய்யுளாலும் இச்செய்தி யறியப்படும். உரை. ஆங்கது.........வரங்கிடந்த : "ஆங்கதுங் காட்டிடென்று, வரங்கிடந் தான்றில்லை யம்பல முன்றிலம் மாயவனே" (சிற். 86.) நாவற் பசும்பொன் : "நாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழை" (முருகு. 18.)

(பி - ம்) 38. 'ஏத்தல்தருங்,' 'ஏத்தற்கருங்,' 'ஏத்தைத்தருங்' 'கூத்தைக்' 'போற்றினமேல்,' 'போத்துமேல்,' 'போற்றிமேல்,' 'சோத்தின்மேல்' 39. 'மன்றின்முன்னிற்,' 'தொகுத்தெடுத்த', 'தொகுத்தெடுத்து'. 40. 'விசும்போர்'

41. அலகை யிகந்த அசலகுல வச்ரப்
பலகை த்தும்பப் பதித்து—மலர்கவிகைக்

42. காக்குங் கடலேழின் முத்தும் வரகங்கை
தூக்கு மருவியிற் சூழ்போக்கி—நோக்கம்

(ப - ரை) 41-2. எண்ணிறந்த பசும்பொன்னால் நிலஞ்செய்து மலையிடத்துள்ள குலவச்சிரப் பலகை ஆதனமாக நிறையப்பதித்து மலர்ந்த கவிகையாற் காக்கும் கடலேழின் உளதாகிய முத்தைச் சிரேட்டமான கங்கையினின்றுந் தூக்கப்பட்ட அருவியினுங் காட்டிற் சிறப்பச் சூழத்தூக்கி.

(பி - ம்) 41. 'மலர் கவிகை காக்கும்' 42. 'நோக்கும்'

43. தொடுக்குஞ் சிரச்சேடன் சூடா மணிகொண்
டெடுக்குந் திருத்தீப மேற்றி—அடுக்கிய

44. தூய வயிரத்தால் வாவியாய்ச் சூழ்கடந்த
பாய மரகதத்தாற் பாசடையாய்த்—தூய

45. பருமுத்தா லாலியாய்ப் பற்பரா கத்தால்
திருமிக்க செந்தா மரையாய்ப்—பெருவர்க்க

46. நீலத்தால் வண்டி னிரையா யுரையிகந்த
கோலத்தாற் கோயிற் பணிகுயிற்றிச்—சூலத்தான்

(ப - ரை) 43-6. அடுக்கிய வயிரவொளியால் வாவியாய்ச் (காவிற்) சூழக்கிடந்த மரகதத்தாலே பாசடையாய்த் தூய்தான பருமுத்தாலே இலை நடுவு சரற்காலத்து ஆலியாய்ப் பதுமராக மணியாலே அழகுமிக்க செந்தாமரையாய்ப் பெருவர்க்கமான நீலத்தாலே மலர்ந்த தாமரையை மொய்த்த வண்டு நிரையாய் உரையிகந்த கோலத்துடனே கோயிற்பணியான பதும பீடம் சமைத்து.

(கு - ரை) 43. நோக்கம் தொடுக்கும் - பார்ப்பவருடைய பார்வையைக் கவரும். சூடாமணி - தலையிலுள்ள மணி. 44. பாய - பரவிய. பாசடை - பசிய இலை. 45. பற்பராகம் - பதுமராகம்; "பற்ப நாப னுயர்வுற வுயரும் பெருந்திறலோன்" (திருவாய். 2. 7 : 11.) 46. கோலத்தால் : ஆல், ஒடு உருபின் பொருளில் வந்தது.

(உரை) பதுமபீடம் சமைத்து : ஸ்ரீ பீடங்கண்டதைக் கூறியது; தக்க. 773.

(பி - ம்) 42. 'சிரச்சேடன்' 'சூளாமணி' 44. 'போய்' 45. 'பத்மராகத்தால்' 'பெருவற்க' 46. 'உரையிறந்த'

47. ஆடுந் திருப்பெரும்பே ரம்பலமுங் கோபுர
மாடம் பரந்தோங்கு மாளிகையும்—கூடிப்

48. பொலங்கோட்டு மாமேருப் பூதரமும் போய
வலங்கோட் டிகிரியு மானத்—தலங்கொள்

(ப - ரை) 47-8. சூலத்தானுடும் திருப்பெரும்பேரம்பலமும் கோபுரமாடம் பரந்தோங்கு மாளிகையும் என்போலு மென்னிற் பொற்கோட்டினையுடைய மகாமேருவும் இடவிதாய்ச் சூழ்ந்த சக்கரவாளகிரியுங் கூடியது மான; வினையில் பொருட்கண் வினைசெயலுவமம்.

(கு - ரை) 47. பெரும்பேரம்பலமென்றது சிற்றம்பலத்தை; ஐவகைச் சபைகளிலொன்றாகிய பேரம்பல மென்பதுமாம். கோபுரமாடம்: "கூட மெடுத்த குளத்தொடு கோபுர, மாட மெடுத்த பிரான்மகன் வாழியே" (தக்க. 808.) 48. கோடு - சிகரம். பூதரம் - மலை. போய - மிக்க. வலங்கோள் - வலங்கொள்ளுதலையுடைய.

(உரை.) வினையில்......உவமம் : " வந்த என்றதனால் இல்லாத வினை வருவித்தும் சொல்லப்படும் ; அவை 'விசும்புரிவது போல்', 'மணி வாழ்பாவை நடைகற்றன்ன', 'வான்றோய் வன்னகுடிமையும்', இவை உவமையும் பொருளுமாகிய வினை வந்தில வாகலின் அதன் வகை யெனப் பட்டன " (தொல். உவம. 1) என்னும் பேராசிரியர் உரையாலும் இது விளங்கும்.

(பி - ம்) 47. 'கோபுரமும்' 48. 'போன', 'போன போல்'

49. நிலையேழு கோபுரங்க ணேரே நெருங்க
மலையேழு மென்ன வகுத்துத் - தலையில்

(ப - ரை) தலமிடமாக நிற்கும் நிலைமையையுடைய ஏழு கோபுரங்கள் ஒன்றோடொன்று அடுக்க நின்றது என்போலுமென்னில், சத்தகுல பர்வதங் களும் தம்மிற் செறிந்த வென வகுத்து.

(கு - ரை) நிலை யேழு கோபுரங்கள் - ஏழு நிலையை யுடைய கோபு ரங்கள் ; " எண்ணிறைந்த தில்லை யெழுகோபு ரங்திகழக், கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே " (சிற். காப்பு.) இதனால் சிதம்பரத்தில் ஏழு கோபுரங் கள் இருந்தன வென்பதும் அவை பிற்காலத்து அரசரால் மாற்றப்பட்டிருக்க வேண்டுமென்பதும் அறியப்படுகின்றன; " கோயின்மு னேழ்நிலை கொண்ட தோர் கோபுர, வாயில் வகுத்த பிரான்மகன் வாழியே " (தக்க. 809.)

(பி - ம்) 'கோபுரமுங் கண்மே னெருங்கு', 'கோபுரங்கண் மேன்மே னெருங்க'

50. மகரங்கொள் கோபுரங்கண் மாக விமானச்
சிகரங்க ளாகித் திகழ - நிகரில்

(ப - ரை) தலையிலே மகரங் கொள்ளப்பட்ட கோபுரம் வானிடத்து உலாவும் விமான சிகரங்களாக விளங்க.

(பி - ம்) 'கோபுரம் வான விமானச்', 'கோபுரமும் வானச்'

51. எரிபொற் படர்பாறை யென்னலா யெங்கும்
விரிபொற் றிருமுற்ற மின்னச் - சொரிபொற்

(ப - ரை) சுடர் செம்பொன்னாற் செய்த படர்பாறை யென்று கூறும்படி விரிந்த பொலிவுடைத்தாய்த் திருமுற்றம் விளங்க.

(கு - ரை) திருமுற்றம் - அம்பிகை கோயிலிலுள்ள முற்றம்.

52. கடாரப் பனிநீர் கவினிக் கனபொற்
றடாகங்க ளாகித் ததும்ப - விடாதுநின்

(ப - ரை) பொற்கடாரங்களில் சொரியப்பட்ட பனிநீர் மேருவிற் பொற்றடாகங்களாகி நிறைவெய்த.

(கு - ரை) கடாரம் - ஒருவகைப் பெரிய பாத்திரம்; " காக்குங் கடலேழு மாடுங் கடாரமோ " (150.)

53. றற்பக லாக வனந்த சதகோடி
கற்பக சாதி கதிர்கதுவப் - பொற்பூண்

(ப - ரை) இரவு பகலாம்படியாக எண்ணிறந்த கற்பக வருக்கத்தின் கிரணம் முறுக.

(கு - ரை) "செம்பொற் கற்பகத் தொடுபரிச் சின்னமும், அளவிலாதன வொளிபெற வமைத்து" (விக்கிரம சோழன் மெய்க்கீர்த்தி.)

(பி - ம்) 'சாதிக் கதிர்', 'கதிர்த்து வரப்', 'கதிர் தோன்ற'

54. வரமகளிர் தத்தம் பணிமுறைக்கு வந்த
சுரமகளி ராகித் துறும - ஒருதான்

(ப - ரை) உத்தமமான மகளிர் பொற்பூணாலே சுரர்மகளிர் தத்தம் பணிமுறைக்கு வந்ததுபோல நெருங்க.

(பி - ம்) 'பரமகளிர்', 'மகளிராகத்' 'வந்து' 'துவள' 'துவன்ற'

55. பிறக்கு மிமயப் பெருங்கடவுட் குன்றம்
மறக்கும் படிசெல்வ மல்கச் - சிறக்கும்

(ப - ரை) ஒப்பில்லாத தான் பிறத்தற்கிடமான பெரிய இமவானென்னுங் கடவுட்குன்றந்தன்னை மறக்கும்படி பெருஞ்செல்வம் நிறைய.

(பி - ம்) 'கடவுள் வெற்பை'

56. இருக்காதி யெம்மறையு மெவ்வுலகு மீன்றாள்
திருக்காமக் கோட்டந் திகழ்வித்-தருக்கர்

(ப - ரை) திகிரியுமான (48) மலையேழுமென்னச் (49) சிகரங்களாகித் திகழத் (50) திருமுற்றம் மின்னத்(51) தடாகங்களாகித் ததும்பக் (52) கற்பக சாதி கதிர்கதுவச் (53) சுரமகளிராகித் துறும (54) மறக்கும்படி செல்வம் மல்கத் (55) திருக்காமக் கோட்டந் திகழ்வித்து (56) எனக் கூட்டுக.

கோயிற்பணி குயிற்றி (48) என்றும், திருக்காமக் கோட்டந் திகழ்வித்து (56) என்றும் தில்லைமன்றமும் திருக்காமக்கோட்டமும் வருணனை செய்தவாறு காண்க.

(கு - ரை) சிறக்கும் என்ற அடையால் சிறப்பில்லாத அதர்வமும் கொள்ளப்படும், தொல். புறத். 20, ந., மதுரைக். 468, ந, அடிக். எவ்வுலகு மீன்றாள் : "அகிலலோக மாதாவே" (தக்க. 103.)

(பி - ம்) 'திகழ்த்தி யருக்கன்', 'திகழ்த்திவருக்கப்'

57. புனையா மணியாலும் பொன்னாலு மின்ன
மனையாலோ ரோர்தேர் வகுத்து-முனைவன்

58. திருவீதி யிரிரண்டுந் தேவர்கோன் மூதூர்ப்
பெருவீதி நாணப் பிறக்கி - வருநாளிற்

(ப - ரை) 57-8. அருக்கர் புனையாம் மணி - துவாதசாதித்தரையும் ஒப்பாம் என்ன மணியாலும்.

வருநாளில் - திருமகுடஞ்சூட்டியபின் (32) பைந்நாக மெட்டும் பரந்தீர்த்துப் (34) போதத்திமிரப்பொறை நீக்கிப் (35) பொற்றொடியுந் தானும் நவநிதி தூய்க் (37) கூத்துக் களிகூரக் கும்பிட்டுக் (38) கோயிற்பணிகுயிற்றித் (46) திருக்காமக்கோட்டந் திகழ்வித்து (56) மனையாலோரார் தேர் வகுத்துப் (57) பெருவீதி நாணப்பிறக்கி (58) வருகிறநாளில்.

(கு - ரை) 57. மணிக்குச் சூரியனுவமை : "வாளிரவி - பொன்னகலம், தங்கு கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போல், அங்க ணுலகளந்தாற் காம்" (தண்டி. 40, மேற்.) மனையால் - வீடுதோறும்; ஆல் தோறும் என்னும் பொருளில் வந்தது ; 'ஊரானோர் தேவகுலம்' என்றாற்போல. தேர் - நிலைத்தேர் ; நாகூர்ப். திருவிழாப். 26. வீடுதோறும்நிலைத்தேர் வகுத்தது ; "பார்தரு வார்பெற மாறில் பசும்பொற், றேர்திரு மாபர கேசரி வாழியே" (தக்க. 807.)

(பி - ம்) 57. 'புனைவா மணியாலும்' 'பொன்னனுமென்ன' 'மனையா லொருதேர்' 58. 'வீதியோரிரண்டும்' 'பெருவீதி காணப்' 'நாணப்பெருக்கி'

59. பொங்கார் கலிசூழ் புவனம் பதினாலும்
கங்கா புரிபுகுந்து கண்டுவப்பத்—தங்கள்

60. புவனி பெறவந்த பூபாலர்க் கெல்லாம்
பவனி யெழுச்சி பணித்துக்—கவினும்

61. மடமயி லொக்க மகுடங் கவித்தாள்
உடனுறை பள்ளி யுணர்ந்து—தடமுகில்

(ப - ரை) 59-61. கங்கைகொண்ட சோழபுரம் படைவீடு செய்து புகுந்து பவனியெழுச்சி பணித்து உடனுறை பள்ளியுணர்ந்து. கவினு மடமயில் - திருவின் செல்வி.

(கு - ரை) 59. பொங்கு ஆர்கலி-அலைகள் பொங்குகின்ற கடல். புவனம் பதினாலும் புகுந்து என்றது இவனைத் திருமாலாக நினைந்து கூறியது ; 90. 60. புவனி - தாங்கள் இழந்த நாட்டை. பவனியெழுச்சி - உலாவிற்கு எழுதலை. பணித்து - கட்டளையிட்டு. 61. ஒக்க மகுடங்கவித்தாள்; 36. தடமுகில் - பெரியமேகம். உரை. படைவீடு - இராசதானி. திருவின்செல்வி. 32, 36, குறிப்பு.

62. அஞ்சன சைலத் தபிடேகஞ் செய்வதென
மஞ்சன மாடி வழிமுதற்—செஞ்சடை

63. வானவன் பொற்றாள் வணங்கி மறையவர்க்குத்
தான மனைத்துந் தகைபெறுத்தி—வானிற்

64. கிளைக்குஞ் சுடரிந்த்ர நீலக் கிரியை
வளைக்கு மிளநிலா மானத்—திளைக்கும்

65. உருவுடை யாடை தவிர்த்தொரு வெள்ளைத்
திருவுடை யாடை திகழ்த்தி—ஒருபுடைப்

66. பச்சை யுடைவாள் விசித்த தொருபசும்பொற்
கச்சை நவரத்னக் கட்டெறிப்ப—வச்ர

67. வெருவுதர வெல்லா விரவிகளும் வீழத்
திருவுதர பந்தனஞ் சேர்த்தித்—திருமார்பிற்

68. கார்க்கடன் மீதே கதிர்முத்தத் தாமங்கள்
பாற்கடல் போர்த்த தெனப்பரப்பிப்—பாற்கடல்

69. வந்த வனச மகளேபோன் மற்றது
தந்த கடவுண் மணிதயங்கப்—பந்தச்

(பு - ரை) 64. ஒளிபொருந்திக் கிளைக்குமிந்திர நீலக்கிரி. இல்பொருளுவமம்.

(கு - ரை) 62. அஞ்சன சைலத்து - கரிய மலையில். மஞ்சனமாடி-நீராடி. குலோத்துங்கன் கரியநிறமுடையவனாதலின் அஞ்சன சைலத்தை உவமை கூறினார்; 64,68,193; தக்க. 777, உரை. 62-3. வழிமுதற் செஞ்சடை வானவன்-தம் குலத்திற்கு வழிபடு கடவுளாகிய ஸ்ரீ அருணஜடேசர். திருப்பனந்தாள் கங்கைகொண்ட சோழபுரத்திற்கு அண்மையிலிருத்தலாலும், இரண்டாம் இராசராசன் திருப்பனந்தாளிலிருந்து ஸ்ரீ தாடகேச்சுரத்து நாயகர் தீர்த்தங்கொடுக்கக் கொள்ளிடத்திற்கு எழுந்தருளுவதற்காக ஒரு சாலை யமைத்து அதனைத் தன் பெயரால் 'ராஜகம்பீரன் திருவீதி என்று வழங்கியுள்ளமையாலும் இது துணியப்படுகின்றது. வானவன் பொற்றாள் வணங்கி : விக்கிரம. 42-3; இராசராச. 47. தானம் புரிதல் : "மிக்குயர்ந்த, தானத்துறை முடித்து" (விக்கிரம. 43-4.)

64. இந்திர நீலகிரி குலோத்துங்கனுக்கு உவமை; 62, குறிப்பு. இள நிலா ஆடைக்கு: "திங்கள் சொரிநிலவு......காந்தர் முயக்கொழிந்தார் கைவறிதே நீட்டுவரால், ஏந்திழையார் பூந்துகிலா மென்று" (தண்டி. 54, மேற்.) திளைக்கும் - இடைவிடாது சூழும்.

65. உரு - நிறம். உடையாகிய ஆடையை. தவிர்த்து - களைந்து, திகழ்த்தி - விளங்க உடுத்தி. மானத்திகழ்த்தியென இயைக்க. ஒரு புடை - ஒரு பக்கத்தில்.

66. பச்சை உடைவாள் - தோலுறையோடு கூடிய உடையிலணியும் வாளை. விசித்தது - கட்டியது. நவரத்னக்கட்டு - ஒன்பதுவகை மணிகளின் மிகுதி; இவை கச்சையில் பதிக்கப்பட்டுள்ளவை. எறிப்ப - ஒளியைவீச. வெருவுதர - அச்சந்தரும்படி. இரவிகளும் வீழ - சூரியர்களும் தோற்கும்படி. வச்சிரத் திருவுதரபந்தனமென இயைக்க.

67-8. மார்பிற்குக் கரியகடலும் அதன்மீது அணியப்பட்ட முத்துமாலைக்குப் பாற்கடலும் உவமை.

69. வனசமகள் - தாமரைப்பூவிலுள்ள திருமகள். அதி - அப்பாற் கடல். கடவுள் மணி - தெய்வமணியாகிய கௌஸ்துபம். கார்க்கடல் வந்த வனசமகள் என்ற பாடத்திற்குக் கரிய உப்புக்கடலிற்றோன்றிய திருமகள் எனப் பொருள் கொள்க; "அமிர்தம் வந்தது பாற்கடலிலல்ல; அமிர்து கடைந்தது லவண சமுத்திரத்தென வுணர்க" (தக்க. 284, உரை.) பந்தம்: "கொடிப் பவள பந்தத்தின் முத்துப் பொதியுச்சி முச்சியாள்" (விக்கிரம. 141.)

(பி - ம்) 62. 'அஞ்சனக்குன்றத்' 63. 'வானவர்ப்' 'மறையவர் கைத்' 64. 'வானத் திளைக்கும்' 65. 'தரித்தொரு' 'திகழ' 'திருத்தி' 66. 'வச்ச' 'அச்சம்' 67. 'இரவுதர', 'எல்லார் விழிகளும் வீழத்', 'எல்லா விழிகளும் வீழத்', 'எல்லா வாவிகளும் வீழத்', 'எல்லா விரவிகளும் போலத்', எல்லா விரவிகளும் போய்வீழ்', 'வெருவுதர வொல்லாரிரவிகளும்', 'திரு வுதரபந்தனமுஞ்' 68. 'சேர்த்ததெனப்', 'கோத்ததெனப்', 'போந்த தெனப்', 'பரப்பப் பாற்கடல்', 'பரப்பக்கார்க்கயல்', 'பரப்பக் கார்க் கடல்', 'பரப்பக் கார்க்கடலில்' 69. 'வனசபதிபோல', 'வனசமதிபோல'

70. சுரகனகத் தோள்வலயச் சூட்டுக் கவித்த
உரக பணமணி யொப்ப—விரவி

(ப - ரை) இது சினையோடு முதலை யுவமித்தது.

(கு - ரை) தோளுக்குப் பாம்பும் சூட்டுக்குப்பாம்பின் படத்திலுள்ள மணியும் உவமை.

(உ - ரை) சினை ... உவமித்தது: "முதலுஞ் சினையுமென் றுயிரு பொருட்கும், நுதலிய மரபி னுரியவை யுரிய" (தொல். உவம. 6.)

(பி - ம்) 'பணமணியுமொப்ப'

71. மகரக் குழைதோண்மேல் வந்தசைவ மேருச்
சிகரச் சுடர்போற் றிகழ—நிகரில்

(ப - ரை) இது சினை யிரண்டடுத்து முதலிரண்டோடு உவமித்தது.

(கு - ரை) மகரக்குழை - சுறாமீன் வடிவமாகச் செய்யப்பட்ட குழை. அசைவ - அசைதல்.

(பி - ம்) 'குழைதிருத்தோள் வந்தசைதல்' 'திருத்தோண் மேல் வந்த சையச்சிகர' 'மேல்வந்ததன்மேல்'

72. முடியின் மணிவெயிலும் முத்தக் குடையில்
வடியு நிலவு மலையப்—படியில்

(ப - ரை) வடிதல் - அதனிடத்து நின்றும் போதுதல். படியில் - ஒப்பில்லாத.

(கு - ரை) முடியின் மணி - கிரீடத்திலுள்ள ரத்தினங்களின். முத்தக் குடை - முத்து மாலையை யணிந்த வெண்கொற்றக்குடை. மலைய - தம்மிற் போர் செய்ய. படி: 'ப்ரதி' என்னும் வடமொழித்திரிவு; 'படிச்சந்த

மென்பது பிரதிச்சந்தமென்னும் வடமொழிச்சிதைவு" (சிற். 78, பேர்.) 'படியோரென்றது பிரதியோரென்னும் வடமொழித்திரிவு' (அகநா. 22 : 5, உரை.)

(பி - ம்) 'நிலவை மலைய', 'நிலவை மலைப்ப'

73. வயங்கு கடக மகுடாதி மின்னத்
தயங்கு பெரும் போதி சாத்தி—முயங்கிய

(ப - ரை) போதி - அரசந்தளிர்.

(கு - ரை) வயங்குதல் - விளங்குதல். கடகம் மகுடாதி - முன்கையி லணியும் கடகத்திலும் கிரீடம் முதலியவற்றிலும்.

(பி - ம்) 'போது சாத்திவயங்கிய'

74. செவ்வி நுதலிற் றிருநீற்றுப் புண்டரம்
வவ்வி மகளிர் மனங்கவற்ற—நொவ்விய

(ப - ரை) பொன்னுருவம் முயங்கிய செவ்வி நுதலிற் றிருநீற்றுத் திரிபுண்டரம் வவ்வி மகளிர் மனங்கவற்ற. நொவ்விய - நொய்ய.

(கு - ரை) செவ்வி - அழகு. வவ்வி - மகளிர் மனத்தைக் கவர்ந்து. கவற்ற - கவலையுறும்படி செய்ய. மயக்கத்தை நீக்குந்திருநீறு மகளிருக்கு மயக்கத்தை அளித்தது; "இனத்தியல் பாமறி வென்ப துண்மையே, மனத் துயர் செயுமயன் மாற்று நீறுதா, னனிச்சமெல் லடியினார் நுதல டுத்தலும், பனித்துடல் வெதும்புமால் படுத்த லாலென்பார்" (பிரபு. மாயை பூசை. 34.)

(பி - ம்) 'நுதற்றிருநீற்றுத்ரிபுண்ட்ரம்'

75. நாவியு மான்மதச் சாந்து நறையகில்
ஆவியு மாகண் டமுமளப்பத்—தீவிய

(ப - ரை) ஆகண்டமும் - அகண்டமளவும்.

(கு - ரை) நாவி - புழுகு; 'கண்டத்தி னவியார் - கண்டத்திலே புழுகையுடையார்' (சீவக. 1434. ந.) மான்மதச்சாந்து - கஸ்தூரிக் குழம்பு; "மான்மதச்சாந்தொடு" (சிலப். 2 ; 68.) நறை அகில் ஆவி - தேனைத்தன்னிடத்தேயுடைய அகிலின் புகை; "தேக்கணின்னகில்", "தேக்கணின்னகிலின்னவி" (சீவக. 534, 2495.) தீவிய - இனிய; கலி. 19 : 1.

(பி - ம்) 'மான்மதமுஞ்சாந்து' 'ஆகண்டமும் வளைப்ப'

76. தோண்மாலை வாசக் கழுநீர் சுழல்சோதிக்
கோண்மாலை கூசக் குளிர்கொடுப்ப—நாண்மாலை

(ப - ரை) கோண்மாலை கூசுதல் பெரும்போதியிற் பன்மணியும், கழுநீர் மாலையும் விளங்குமாறு பருதியுடன் நின்ற கோள்விளங்காமையின்.

(கு - ரை) தோண்மாலை - போதித்தளிர்மாலை. கழுநீர் - கழுநீர்மாலை; "கண்ணும் மனமுங் கழுநீர்க் குலமுழுது, நண்ணுந் தொடையன்மே

ளுட்செய்ய" (விக்கிரம. 129.) சுழல் சோதிக்கோண்மாலை - ஒளியை யுடைய சுழல்கின்ற கிரகங்களின் வரிசை. நாண்மாலை - அன்று அலர்ந்த பூவாலாகிய மாலையை அணிந்த.

(பி - ம்) 'குழல் சேர்த்தி'

77. வேந்தர் தொழுதிறைஞ்ச வேதியரேத்தெடுப்பப்
போந்து புறநின்ற போர்க்களிற்றை—வேந்தரில்

78. மாக்காதல் யாதவனும் மாறழிந்த மீனவனும்
வீக்காம லெங்குள்ள மெய்ம்முகிற்கும்—கோக்கடவுட்

(ப - ரை) 77-8. கோயிற்புறத்து நின்ற போர்க்களிற்றை (77), வேந்தரில்வைத்து இலக்குமி காதலிக்கப்பட்ட யாதவகுலத்திலுள்ளோனும், மாறுபாடழிந்த மீனவனுங் கட்டாமல் எத்தீபத்தினும் பொழியுந் தப்பாத முகிற்கும். மாக்காதல் யாதவன் - ஸ்ரீகிருஷ்ணன்.

(கு - ரை) 77. ஏத்தெடுத்தல் - புகழ்களை யெடுத்துக் கூறுதல். போந்து; இது குலோத்துங்கன் தொழில். புறம் நின்ற போர்க்களிறு - அரண்மனையின் வெளியே நின்ற போரைச்செய்யும் பட்டத்துயானை ; "கோயிற் புறநின்று, காலத் ததிருங் கடாக்களிறு" (விக்கிரம. 52) ; "அந்தப் புரத்தது பூனை புறங்கடைய, கந்துகொல் பூட்கைக் களிறு" (நீதிநெறி. 26.) 78. மீனவன் - பாண்டியன். வீக்குதல் - கட்டுதல். மெய்ம்முகில் - தான் பெய்யும் பருவம் பொய்யாமையை யுடைய மேகம்.

(உரை) கண்ணபிரான் மேகத்தைக்கட்டிய வரலாறு விளங்கவில்லை. பாண்டியன் மேகத்தை விலங்கிட்ட செய்தி, "இடியுடைப் பெருமழை யெய்தா தேகப், பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப,மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்கெனத், தீதுதீர் சிறப்பிற் றென்னனை வாழ்த்தி" (சிலப். 11: 27-30) என்னும் அடிகளாலும் திருவிளையாடற் புராணம் முதலியவற் றாலும் விளங்கும்.

(பி - ம்) 77. 'முடி வணங்க' 78. 'மாளுவரும்' 'யாதவரும்' 'மீனவரும்' உரை. 'குலத்திலுள்ளோரும்' 'மீனவரும்'

79. கெட்டாத வச்சிரமு மெல்லா வுருமேறும்
வெட்டாம லெங்குள்ள வெற்பினுக்கும்—முட்டா

(ப - ரை) (78) கோக்கடவுளான இந்திரனுக்கு எட்டுதற்கரிய (சக்கிரதனுவினுடைய வமைதியாற் செய்த) வச்சிராயுதமும் எல்லாமுகிலி னுடைய உருமேறும் வெட்டாதபடி எவ்விடத்தினுமுள்ள வெற்பினுக்கும்.

(கு - ரை) இந்திரன் வச்சிரத்தால் மலைகளின் சிறகை வெட்டிய செய்தி, "மலைச்சிற கரிந்த வச்சிர வேந்தற்கு" (சிலப். 14 : 94) என்பதனால் அறியப்படும். உருமேறு - சிறந்த இடி. இடி மலைகளை வெட்டுதல் ; "மறந்

தின்னூஉ வரையுதிர்க்கும், நரையுருமி னேறனையை" (மதுரைக். 62-3.) வெற்பு - மலை. முட்டா - நிறைவாக.

(பி - ம்) 78-9. 'கோக்கடவு, ளொட்டாத'

80. முதுவாய் வடவையு முந்நான்கு கோளும்
கதுவாம லெல்லாக் கடற்கும்—பொதுவாய்

(ப - ரை) முதிய வாயையுடைய வடவையும் முந்நான்கு கோளான துவாதசாதித்தரும் கொள்ளாமல் முட்டாம்படி எல்லாக் கடல்களுக்கும்.

(கு - ரை) வடவை - பெண் குதிரையின் வடிவமான நெருப்பு; "விரிமு கக்கட லேழ்பெரு வெள்ளமும், பரிமுகத் தொரு செந்தீப் பருகவே" (தக்க. 587); 'வடவாமுகாக்கினி யென்பது பெட்டைக் குதிரையின் முகம் போலும் ஓரக்னி குண்டத்திலிருத்தலாற் பெற்ற பெயர்' (தக்க. 475, உரை); 'உலகம் கடல் கொண்டு கிடந்த காலத்து அக்கடல் நீரெல்லாம் வற்ற எறித்தற்குத் தோன்றும் ஆதித்தர் பலவான மாயத்தோடே கூடி அந்நீர் வற்றும்படி திரிதரு வடவைத்தீ', 'ஞாயிறுபட்ட அகன்று வரு கூட்டத்து மடங்கற்றீ என மாறிக்கூட்டி அவ்வெள்ளத்தை மாய்த்தற்கு ஆதித்தர் பன்னிருவரும் தோற்றின பெரிய கூட்டத்தையுடைய வடவைத் தீயென வுரைக்க' (பதிற். 62, 72, உரை.) முந்நான்கு கோள் - பன்னிரண்டு சூரியர்.

(பி - ம்) 'கதுவாய வெல்லாக்'

81. அபயங் கொடுக்கு மயிரா பதத்தை
உபய வயக்கோட் டுருமை—விபவ

(ப - ரை) தான் பொதுவாய் நின்று அபயப்பிரதானம் பண்ணும் அயிராபதத்தை; அயிராபதமாயிருக்கச் செய்தே இரண்டு வெற்றிக் கோட்டையுடைய உருமேற்றை.

(கு - ரை) அயிராபதம் : ஐராவதமென்பது தமிழில் அயிராபதம் என்றும் வழங்கும்; 'வரகாத்திரமென்பதனைத் தலையென்றும், அவரகாத்திரமென்பதனைக் காலென்றும் வடநூலார் கூறுவராதலின் தேவர் அதனைச் சிதைத்து அபரகாத்திரமென்றார்; ஐராவதம் அயிராபதமென்றாற்போல' (சீவக. 806, ந.); 'பாழி யயிரா பதப்பகடு', 'பரிக்கு மயிரா பதமே" (விக்கிரம. 272, 289); "அயிரா, பதக்க மலங்கரித் தூர்வோன்" (திருவரங்கத். 47.) வயவன்மை; தொல். உரி. 68. ஐராவதத்திற்கு நான்கு கோடு உண்டாகலின் இதனை இரண்டு கோடுடையது என்றார்; "ஈரிரு மருப்புடைய வாரணமுகைத்தே யிந்திரனெதிர்ந்தவரை வென்று வருமே" (கலிங்கத். 245.) விபவம் - செல்வத்தை.

(உரை) இருக்கச் செய்தே : 'அசுரரும் பிரம புத்திரராயிருக்கச்செய்தே தேவர்களே மக்களாகியார் எனச்சொல்லியது வேதஞ்சொன்னபடி அசுரர்

செய்திலர் என்பதனால்' (தக்க. 260, உரை); 'செல்வத்துக்கு அவன் மகனாயிருக்கச் செய்தே, செல்வம் வேண்டி' (சிலப். 20: 58-9, அரும்பத.); இச்சொல் உலக வழக்கில் 'இருக்கச்சே' என வழங்கும்.

(பி - ம்) 'உரிமை' 'ப்ரபையின்'

82. நிருத்தந் தருமோர் நிதிப்பொருப்பைக் கண்ணுற்
றெருத்தந் திருக்கவின வேறித் — திருத்தக்க

(ப - ரை) பகைவர் விபவந்தருதற்குக் களித்தாடும் ஒப்பற்ற மேருவாகிய பொருப்பைக் கண்ணுற்று; இஃது இல்பொருள் உவமை. எருத்தத்திலே அழகு பெறப்போந்தேறி யெனக்கூட்டுக.

(கு - ரை) நிருத்தம் - கூத்து. எருத்தம் - புறக்கழுத்து; "யானை யெருத்தம் பொலிய" (நாலடி. 3.) (உரை) மலைக்கு ஆடும் தொழில் கூறப்பட்டமையின் இல்பொருளுவமை.

(பி - ம்) 'விருத்தந் தருமொரு மேருப் பொருப்பை', 'பொருத்தந் தருமொரு மேருப் பொருப்பை'. 'திருத்தகு'

83. பள்ளித் திருத்தொங்கற் சோலை பகல்விலக்க
வெள்ளிக் கவிகை மிசையோங்க—ஒள்ளிய

(ப - ரை) பள்ளித்திருத்தொங்கற்சோலை - சேருடி வகை.

(கு - ரை) பள்ளித்திருத்தொங்கற்சோலை: "கோவைத் திருப்பள்ளித் தொங்கற் குழாங்கிளிக்கும், பூவைக்கும் நல்ல பொழிலென்னும்" (132); "கொடியும் பதாகையுங் கொற்றக் குடையும், வடிவுடைய தொங்கலுஞ் சூழ" (ஆதியுலா, 57); "தழைகளுந் தொங்கலுந் ததும்பி யெங்கும்" (பெரியபு. 3. 4 : 1.) வெள்ளிக் கவிகை - வெண்கொற்றக்குடை. மிசை ஓங்க - யானையின் மேலே விளங்க; "மலைமிசைத் தோன்றும் மதியம் போல் யானைத், தலைமிசைக் கொண்ட குடையர் (நாலடி. 21.) சேருடி: "பொன்னெழுத் தெழுதுசே ருடி பொற்புற" (திருக்காளத்திப். 7 : 66.).

(பி - ம்) 'பள்ளிப்பல தொங்கற்'

84. ஒற்றை வலம்புரி யூத வதன்பின்பு
மற்றை யலகில் வளைகலிப்பக்—கற்றைக்

(ப - ரை) கற்றை - திரள்.

(கு - ரை) ஒற்றை வலம்புரி - சோழனுக்குரிய ஒன்றாகிய வலம்புரிச் சங்கம். வலம்புரி முன்னூதப்படுதலும் மற்றச் சங்கங்கள் அதன்பின்னே ஊதப்படுதலும் மரபு; "ஒற்றை, வலம்புரி யூத வளைக்குல மார்ப்ப" (விக்கிரம. 65-6); "ஒற்றையோ டிரட்டை வலம்புரி மிழற்ற", "முன்னொற்றை யிருசங்க முடனூத", "மீதூது வளைக்குலமும் வலம்புரியும் மிகமுழங்க" (வி. பா. இந்திரப் பிரத்தச். 6, நிரை மீட்சிச். 5, கிருட்டினன் தூது. 10.) அலகில் - கணக்கில்லாத.

(பி - ம்.) 'வதன் பின்னர்' 'மற்றையுலகில்'

85. கவரி யிரட்டக் கடவுண் முரசார்த்
துவரி யுவாவாடி யொப்ப—அவிர்வாளும்

(ப - ரை) உவரி உவாவாடி : உவாவில் உவரி ஆர்ப்பது திங்கட்கு அடை.

(கு - ரை) இரட்ட - மாறி யசைய. கடவுள் முரசு - தெய்வம் உறையும் முரசு; பதிற். 30, 34, உரை. உவரி - கடல். உவா ஆடியொப்ப - பௌர்ணமியில் ஆடினுலொப்ப.

(பி - ம்) 'கவின் முரசார்ப்ப', 'உவரியுவாவாடலொப்ப'

86. சங்குந் திகிரியுஞ் சார்ங்கமுந் தண்டமும்
எங்குஞ் சுடர்விட் டிருள்களையக்—கொங்கத்து

(கு - ரை) வாள் முதலியன பாட்டுடைத் தலைவனுக்கு உரிய ஐம்படைகள் ; இங்ஙனங் கூறியது இவனைத் திருமாலாக நினைந்து ; 'திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" (திருவாய். 4. 4:8.) சார்ங்கம் : வில்லுக்குப் பெயர். இருள் களைய - இருளைப் போக்க. கொங்கத்து - மலைநாட்டிலுள்ள.

(பி - ம்) 'விட்டிடர்'

87. விற்கொடியு மீனக் கொடியுங் கொடுவரிப்
பொற்கொடி யொன்றின் புடைபோதத்—தெற்கின்

(ப - ரை) விற்கொடியும் மீனக்கொடியுந் தனது கொடியாகிய புலிக் கொடியுடன் நிலைபெற.

(கு - ரை) விற்கொடி - சேரர்க்குரியது. மீனக்கொடி - பாண்டியர்க் குரியது. கொடுவரிப் பொற்கொடி - அழகிய புலிக்கொடி ; சோழனுக் குரியது. புடை - பக்கத்தே ; என்றதனால் புலிக்கொடியினுயர்வு கூறப் பட்டது ; "கயலெழுதிய விமையநெற்றியின், அயலெழுதிய புலியும் வில் லும்" (சிலப். 17 : 1–2) ; "கேழன் மேழிகலை யாளி வீணை சிலை கெண்டை யென்றினைய பல்கொடி, தாழ மேருவிலுயர்த்த செம்பியர் தனிப்புலிக்கொடி தழைக்கவே" (கலிங்கத். 18); "நககோடி பலகோடி புலியேறு தனியேற" (தக்க. 4); 'புலியேறு தனியேற என்றதனால் பாராட்டிரத்து இராசாக் களுடைய அனேக கொடிகள் சேவிக்கும் முறையில் அயற்கண்ணே தாழ வரையப்பட்டிருப்பச் சோழ சக்கரவர்த்தியின் புலிக்கொடி மேலே தனியே வரையப்பட்டிருக்கு மெனவுணர்க' (தக்க. 4, உரை.)

88. மலையா னிலம்வரவே வார்பூங் கருப்புச்
சிலையான் வரவு தெரியத்—தொலையாது

(கு - ரை) மலையானிலம் - தென்றற் காற்று. வார்தல் - நீளுதல். கருப்புச்சிலையான் - மன்மதன். தொலையாது - அழியாமல்.

89. வீசுந் திவலை விசும்புகூர் மங்குலால்
வாசவன் வந்த வரவறியக்—கூசாதே

(ப - ரை) கூசாதே யாவரொழிவாரென்றார் இவன் நாராயண னாதலின்.

(கு - ரை) திவலையையுடைய மங்குல், விசும்பிலே கூர்ந்த மங்குல் என வியைக்க. விசும்பு - ஆகாயம். கூர்தல் - மிகுதல். மங்குல் - மேகம். வாசவன் - இந்திரன். மேகம் இந்திரனுக்கு வாகனமென்பது இங்கே அறியற்பாலது.

(பி - ம்) 'வீசுங்கடவுள்' 'விசும்புதோய்'

90. யாவ ரொழிவா ரிவன்வரவே மற்றுள்ள
தேவர் வருவ ரெனத்தெளிய—யாவர்க்கும்

(கு - ரை) தெளிய - யாவருமறிந்து கொள்ள.

(பி - ம்) 'யார்வர் வருவாரினம்', 'தெரிய'

91. பின்னர் வழங்கு முழங்கு பெருங்களிற்றுத்
தென்னர் முதலானோர் சேவிப்ப—முன்னர்ப்

(ப - ரை) யாவர்க்கும் பின்னர்க் கொடுத்த களிற்றில் தென்னன் சேரன் முதலானோர் சேவிப்ப.

(கு - ரை) வழங்குதல் சோழன் தொழில். தன்னோடு ஒத்த குடியின ராதலின் தென்னர் முதலானோர் தன்னை யொப்பக்களிற்றிலேறிச் சேவிப்ப என்றார்.

(பி - ம்) 'பெருங்களிற்றில்'

92. பரவி யுலகிற் பலமண்ட லீகர்
புரவி மிசைகொண்டு போத—அருவிபோல்

(கு - ரை) பரவி - சோழன் புகழைச் சொல்லி. மண்டலீகர் - மண்ட லங்களையாளும் அரசர். புரவி - குதிரை.

(பி - ம்) 'பரமண்டலீகர்', 'போக' 'அருவிபோய்'

93. விட்டு மதம்பொழியும் வேழந் திசைவேழம்
எட்டு மொழியப் புகுந்தீண்டக்—கட்டி

(கு - ரை) அருவி மதத்திற்கு உவமை. திக்கு யானைகள் எட்டும் அல் லாத மற்ற யானைகளெல்லாம் வந்து நெருங்க; "போரி யைந்தன தோற்ற வென் றிகழ்தலிற் புறம்போய், நேரி யன்றவன் றிசைதொறு நின்றமா நிற்க, ஆரி யன்றனி யைங்கரக் களிறுமோ ராழிச், சூரி யன்றனித் தேருமே யிந்நகர் தொகாத" (கம்ப. ஊர்தேடு. 11.) கட்டி - தேரிலே கட்டப்பட்டு.

(பி - ம்) 'விட்டு மதம் பொழிய' 'புகுந்தீண்டிக்'

94. இரவிக்கு நிற்பன வேழு மொழியப்
புரவிக் குலமுழுதும் போத—விரவி

(கு - ரை) இரவி - சூரியன். ஏழும் - ஏழு குதிரைகளும். புரவிக் குலம் முழுதும் - குதிரையின் தொகுதி முழுவதும்; "ஆழி யண்டத்தி னருக்கன்ற னலங்குதேர்ப் புரவி, ஏழு மல்லன வீண்டுள குதிரையு மெல்லாம்" (கம்ப. ஊர்தேடு. 9.) விரவி - கலந்து.

95. உடைய நிதிக்கடவு ளூர்தி யொழிய
அடைய நரவெள்ள மார்ப்ப—விடையே

(கு - ரை) நிதிக்கடவுள் - குபேரன்; நிதி - பத்ம நிதியும், சங்க நிதியும். ஊர்தி - நரன் என்னும் பெயருடைய யக்ஷன்; தக்க. 462, உரை. நர வெள்ளம் அடைய - மனிதருடைய கூட்டம் முழுவதும்.

96. எழுந்த துகளுருவ வேறியுஞ் சுண்ணம்
விழுந்த துகளுருவ வீழ்ந்தும்—தொழுந்தகைய

97. விண்ணுலகு மண்ணுலக காகி விளங்கவிம்
மண்ணுலகு பொன்னுலகாய் மாற—எண்ணரிய

(ப - ரை) 96-7. எழுந்த துகள் அண்ட கோள மளவும் உருவ ஏறி விண்ணுலகு மண்ணுலகாகி விளங்க, நாகதலமளவாக உருவப் பொற் சுண்ணம் வீழ்தலின் மண்ணுலகு பொன்னுலகாய்ப் பரிவர்த்தனையாகவென நகரி வருணனை கூறினார்.

(கு - ரை) எழுந்த துகள் - பூமியிலிருந்து எழுந்த தூசி. சுண்ணம் - உடன் வருவோர் சிதறிய பொற் சுண்ணம். தொழுந்தகைய - தொழத்தக்க பெருமையையுடைய. நிரல் நிறை.

(பி - ம்) 'எழுந்து' 'விழுந்து துகளுருவம்' 'விண்ணுலகு மண்ணுல காக விளங்கிய', 'விண்ணுலகாய்'

98. மாகதரும் மங்கலப் பாடகரும் விஞ்சையர்
பூகத ராயினோர் போற்பரவ—நாகர்

99. கொழுந்தெழு கற்பக சாதி குவித்துத்
தொழுந்தொறும் மன்னர் சொரிய—எழுந்துள

100. கைம்மழை யென்னக் கனகப் பெயறூர்த்து
மைம்மழை மாட மறுகணைந்தான்—தம்முடைய

(ப - ரை) 98-100. மாகதர் - இருந்தேத்துவார். மங்கலப் பாடகர் - பாணர். வித்தியாதர லோகத்தில் இருந்தேத்தும் மாகதரும் மங்கலப் பாடகரும் பூலோகத்தாராயினோர்போற் பரவ. நாகர்கொழுந்து: இது தலைவர்க்கு ஓர் ஆகுபெயர். எழுகற்பக சாதியைக் குவித்துக் கற்பகதரு தானங்கொள்ளக் கொடுத்து முனிவரைத் தொழுந்தொறும் மன்னர் சொரியத் திறையாகக்

குவித்தெழுந்த பொருளைக் கை புயலென்னும்படி தூளிதானமாகச் சிந்தி நிலத்தை மறைத்து மேகம் பொருந்திக் குளிர்ந்த மாடம் பொருந்திய மறுகு அணைந்தான்.

மண்ணுலகு பொன்னுலகாய் மாறுடப் (97) பூகதராயினர்போற் பரவக் (98) கற்பக சாதி குவித்துத் தொழுந்தொறும் மன்னர் சொரிதர எழுந்துள (99) கனகப் பெயல் போலத் தூர்த்து (100) நாகர் கொழுந்து (98-9) எருத்தந்திருக்கவினவேறிப் (82) பொற்றொடியார் (102) மைம்மழை மாடமறுகணைந்தான் (100) எனக் கூட்டுக.

(கு - ரை) 98. மாகதர்: "சூதர் வாழ்த்த மாகதர் நுவல" (மதுரைக். 670.) பூகதர் - பூமியை அடைந்தவர்; "பூகதனு கியவன்றே பகைவரெல்லாம் போற்ற வளர்ந்து" (வி. பா. திரௌபதி மாலையிட்ட. 52.) 99. நாகர் கொழுந்து: "ஆயர்தங் கொழுந்தே" (திருமாலை. 2.) நாகர் - தேவர்: இவனை நாராயணன் என்றுர் முன்னும். 100. மைம்மழை மாடம் - மேகத்தைப் போன்ற குளிர்ச்சியான மாடம்; "மழையென மாடமோங்கி" (மலைபடு. 484.) "மழைநிரைத் தன்னமாடந் தோறும்" (பெருங். 3. 16 : 27); "மழை மருண் மாடம்" (சீவக. 2116.)

(உரை) தூளிதானம் - 'தூளிபர்யந்ததானம். பஹுரவாகி ஜநங்களுக்கு வஸ்துக்களைக் கொடுக்கும்போது அதில் உதிர்ந்த ரேணுக்களையும் கூட உதறிக் கொடுக்கை' (திருப்பாவை, 24, அரும்பத.)

(பி - ம்) 98. 'விஞ்சையரும்' 99. 'தொழுதெழு', 'சொரிந்ததெழுந்து தன்' 'சொரிந்த தெழுந்தன' 100. 'கைம்மழை பெய்து', 'பெயல் தூற்று', 'பெயல்தூர்ந்த'

101. சாலை தொறுந்திரள்வார் சாளரங்கள் கைக்கொள்வார்
மேலை நிலாமுற்ற மேற்றெருகுவார்—மாலைதாழ்

102. தெற்றி யடைய மிடைவார் சிலர்பலர்
நெற்றி சுருங்க நெருங்குவார்—பொற்றொடியார்

103. மாளிகையி லேறுவார் மண்டபத்தின் மண்டுவார்
சூளிகை மாடந் தொறுந்துறுவார்—நீளும்

104. இரண்டு மருங்கினு மிப்படி மொய்ப்பத்
திரண்டு பலரெதிரே சென்று—புரண்ட

(ப - ரை) 101-4. சாலை - நெடுந்தளம். தெற்றி - புறவறை. நெற்றி - தெருத்தலை. மாளிகை - விடுதளம். மண்டுதல் - நெருங்க ஏறுதல். சூளிகை - விமானத்தலை. துறுதல் - செறிதல். மொய்ப்ப - செறிய.

பொற்றொடியார் (102) துறுவாராய் இரண்டு மருங்கினும் இவ்வாறு மொய்ப்ப (104) என வினையெச்சமுற்றுக்குக. இவர் இவ்வாறு நிற்க.

(கு - ரை) சாலை: இராசராச. 80. சாளரங்களில் மகளிர் தொகுதல்: "வாளரம் பொருத வேலு மன்மதன் சிலையும் வண்டின், கேளொடு கிடந்த

நீலச் சுருளுஞ்செங் கிடையுங் கொண்டு, நீளிருங் களங்க நீக்கி நிரைமணி மாட நெற்றிச், சாளரந் தோறும் தோன்றுஞ் சந்திர வுதயங் கண்டார்.'' (கம்ப. மிதிலைக் காட்சிப். 14); "நீளை மூத்தொடர் வாயினுங் குழையொடு நெகிழ்ந்த, ஆள கத்திலே டரமியத் தலத்தினு மலர்ந்த, வாள ரத்தவேல் வண்டொடு கெண்டைகண் மயங்கச், சாள ரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்'' (கம்ப. மந்திரப். 54.) நிலாமுற்றம்; சிலப். 2 : 27; "நிலவுப்பயன் கொள்ளும் நெடுவெண் முற்றத்து'' (நெடுநல் 95); "சுடர்வெண் ணிலவின் றெழிற் பயன்கொண்ட, மிசைநீண் முற்றத்து'' (பெருங். 1. 33 : 61-2.) 102. தெற்றி : "கூடசாலைகள் கோபுரந் தெற்றிகள்'' (பெரிய 102. திருவாரூர்ச் 4.) மாலை தாழ்தெற்றி : "கள்ளருமலர் நாற்றிய சுருங்கை'' (நைடதம்.) நெற்றி - உச்சியில் உள்ள அறை. 103. மாளிகை. இதனை வேயா மாடமென்பர்; சிலப். 5 : 7. (உரை.) வினையெச்சமுற்று என்றது திரள்வார், கைக்கொள்வார், தொகுவார், மிடைவார், நெருங்குவார், ஏறுவார், துறுவார் என்பனவற்றை.

(பி - ம்) 101. 'தொறுந் தொகுவார்', 'நிலாமுன்றின் மேற் செறிவார்' 102. 'சில் மாதர்' 'பொற்கொடியார்' 103. 'ஆடரங்கின் மண்டுவார்', 'சூளிகை சூழ், மாடந்தொறுந்', 'தொகுவார்' 104. மருங்கிலுமிப்படி யொப்ப'

105. கரும்புருவ வல்வில்லுங் கண்மல ரம்பும்
பெரும்புவன வெல்லை பிடிப்பச்—சுரும்பு

106. நிரைக்கு நிரைமுரல நீலக் குழாங்கள்
இரைப்பின் மொகுமொகு வென்ன—விரைச்சுருள்

107. மேகா ளகங்கள் மிஞிறுவாய் வைத்தூதக்
காகாள மென்னும் படிகலிப்பப்—போகத்

108. தகரங் கமழ்கதுப்பிற் றாழ்குழை தோடாழ்
மகரம் பிறழ்கொடியின் வாய்ப்ப—இகலனங்கன்

109. சேனை சமுகந் தெரிப்ப வதனெதிர்
சேனை பராக மெனத்திகழப்—பூநாறும்

(ப - ரை) 105-9. நெற்றி சுருங்க வருவார் (102) பலராகத் திரண்டுசென்று (104) கரிய புருவமாகிய வலிய வில்லும் கண்ணாகிய மலரம்பும் பெரிய புவனத்தவர் உணர்ச்சியைச் சிறைபிடிப்பச் சுரும்பினங்கள் நிரைக்கு நிரை முரல அது நீலக்குழாங்கள் ஆரவாரிக்குமதுபோல மொகுமொகுவென்ன; நீலக்குழாங்கள் யானைக்கும் குழலுக்கும் பொதுப்பட்டுப் பிரிபொருட் டொடராய் நின்றது. மணம் பொருந்திச் சுருட்டப்பட்ட மேகவளங்களில். மிஞிறு ஊத அது வாய்வைத்தூதும் காகளமென்னும்படி ஆரவாரிப்ப; காகாளமென்பது விகாரம். இது மெய்யுவமமும் ஓசையுவமமும் ஆயிற்று. போகச்சாந்தமான தகரமணங்கமழும் கபோலப் புறத்துத்

தாழ்ந்த மகரக்குழை தோள்மிசையே தாழ, அப்போது அசையும் மகரக் கொடியும், அக்கொடித்தண்டமும் ஒப்புவாய்ப்ப (107-8); இது மெய்யுவமம். இவையிற்றாலே அனங்கன் விணைக்குவந்த சேனசமுகந் தெரிப்பச் சேனை யாகிய அதற்கு எதிரெழும் சேனபராகமென விளங்க.

(கு - ரை) 105. வல்வில் - பல இலக்குக்களை ஊடுருவிச் செல்ல எய்யும் வில்லின் தன்மை. "வேழம் வீழ்த்த" (புறநா. 152) என்னும் பாட்டாலும் அதனடிக் குறிப்பாலும் இது விளங்கும். புருவவில், கண்ணம்பு: "புருவச் சிலைகுனித்துக் கண்ணம்பெ னுள்ளம், உருவத் துரந்தா ரொருவர்" (தண்டி. 36, மேற்.) 106. மொகுமொகுவென்ன என்பது இரட்டைக்கிளவி; "மொகுமெகென்றகில லோகமும் முழங்குவனவே" (தக்க. 90); "நிரைத்த தெண்டிரை மொகு மொகுவென" (திருப்புகழ்); "அடர்ந்தளிகள் மொகுமொகெனு மாமோத வலம்புரித்தா ரண்ணல்" (வி. பா. பதினெட்டாம் போர். 236.) சுருள் - கூந்தலின் ஐவகைப் பிரிவுகளுள் ஒன்று; பு. வெ. 223, உரை. 107. மேகாளகங்கள் - மேகத்தைப் போன்ற முன்னுச்சிமயிர்; "அளக நன்னுதல்" (கம்ப.) காகாளம் - காகளம்; நீட்டல் விகாரம். 108. கதுப்பின் தாழ்குழை - கூந்தலினின்றும் தாழ்கின்ற காதணி. குழைக்கு மகரக்கொடி உவமை; "இளமயி லனைய சாய லேந்திழை குழைகொள் காது, வளமிகு வனப்பி னாலும் வடிந்ததா ளுடைமை யாலும், கிளரொளி மகர வேறு கெழுமிய தன்மை யாலும், அளவில்சீ ரனங்கன் வென்றிக் கொடியிரண் டனைய வாக" (பெரிய. திருஞான. 1100); "ஓது, மகரக்கொடியின் மணிக்குழைகள் வாய்ப்ப" (சொக்கநாதருலா, 444-5.) 109. சேன சமுகம் - சேனையின் கூட்டம். சேனபராகம் - சேனை செல்லும்போது உண்டாகும் தூளி. திகழ - விளங்கும்படி. இவ்வாறு திகழ்ந்தது மகளிர் தூவிய சுண்ணம். மகளிர் சுண்ணத்தைத் தூவுதல்: "தோதக மாக வெங்குஞ் சுண்ணமேற் சொரிந்து" (சீவக. 463.) உரை. பிரிபொருட்டொடர்; தொல். எச்ச. 64, ந. நீலக்குழாங்களென்றது நீலமணியைப் போன்ற கூந்தலுக்கும், கரிய நிறத்தையுடைய யானைகளுக்கும் பொதுவாக நின்றது. மெய்யுவமம் - வடிவுபற்றிய உவமம். ஓசையுவமம் - ஓசைபற்றி வந்தவுவமம். 123-7 உரை. 'எனவே, கட்புலனல்லாதனவும் உள என்றவாறும். அவை செவியினானும், நாவினானும், மூக்கினானும், மெய்யினானும், மனத்தினானும் அறியப்படுவன. இவ்விரு வகையும் பாகுபடவந்த உவமையாம்......; இனிச் செவிப்புலனாவது ஓசை, நாவினானறியப்படுவது கைப்பு, காழ்ப்பு முதலிய சுவை. மெய்யினானறியப்படுவன வெம்மை, தண்மை முதலாயின. மூக்காலறியப்படுவன நன்னாற்றம், தீநாற்றம். மனத்தானறியப்படுவன இன்ப துன்பம் முதலியன' (தொல். உவம. 1, இளம்.) என்னும் உரையும், 'குயில்போன்ற மொழி' என்ற உதாரணமும் இங்கே அறிதற்பாலன.

(பி - ம்) 106. 'முரலும்' 'நீலக்குழல்கள்' 'இரைக்குமிரை மொகு மொகென்ன', 'இரைக்குமிசை மொகுமொகென்ன', 'இரைத்துமொகு',

'இரைக்குமொகு' 'மொகுமொகென்ன' 107. 'ஞிமிறு வைத்தூதும்' 107-8. 'மோகத், தகரம்' 108. 'தோடோய்', 'தோடொய்ய' 109. 'சேனுபராகந்தெறிப்ப'

110. சுண்ண மெதிர்தூ யுடனே தொடியுந்தூஉய்
வண்ண மிழப்பார் மனமிழப்பார்—மண்ணுலகில்

(பி - ரை) பொற் சுண்ணத்தைத் தலைவர்க்கெதிரே தூய்க், காமன் சேனை மூவரையும் வென்ற சேனை. அந்தச் சேனையையும் இத் தலைவன் வென்றான் என்னும்படி அவதியற, உடனே கைவளையுஞ்சிந்தி, தம் நிற மிழப்பார், மனமிழப்பாராக இரண்டு மருங்கினும் நின்றாரிற் சிலர்.

(கு - ரை) சுண்ணத்தையும் தொடியையும் இடையீடில்லா திழத்தல்; "கண்ண கண்ண வெம்மிதழ், உண்ண வாவென் றேதியே, வண்ண மேவு கைவளை, சுண்ண மோடு தூவுவார்" (பாகவதம். 1. 4 : 20.) வண்ணம் - மாமைநிறம். உரை. காமன் சேனை - மகளிர்; "செல்வப்போர்க் காமன் சேனை" (சீவக. 458.) மூவர் - திரிமூர்த்திகள். அவதியற - இடையீடில் லாமல்.

111. இன்னற் பகைவ னிவன்கா ணகளங்கன்
மன்னர்க்கு மன்னன் மகனென்பார்—முன்னர்

112. முதுகுல மன்னர் முடிவணங்க வந்த
விதுகுல நாயகிசே யென்பார்—குதுகலத்தாற்

113. கண்மருஞ் செவ்விக் கடவுட் டிசாதேவர்
எண்மருங் காணு மிவனென்பார்—மண்ணவர்க்கும்

114. தேவர்க்கு நாகர்க்குந் தெய்வ முனிவர்க்கும்
யாவர்க்குங் காவ லிவனென்பார்—தீவிய

115. மாதவியுஞ் செங்கழு நீரும் வலம்புரியும்
தாதகியுங் கொள்ளத் தரினென்பார்—மாதை

116. ஒறுக்கும் மிதிலை யொருவில்லைத் தொல்லை
இறுக்கு மவனிவ னென்பார்—மறுக்காமற்

(ப - ரை) 111-6. குதுகலம் - ஆசை. மீதே கிடந்து தம்மை ஒறுக்கும் மாதவியும், செங்கழுநீரும், நந்தியாவர்த்தமும், தாதகியும் கொள்ளை கொள்ளத் தரின் நன்றென்பார்; இவ்வாறுகூற, ஒருபுறத்து நின்றார் கூறுவார்.

(கு - ரை) 111. இன்னற் பகைவன் : இது "பசிப்பிணி மருத்துவன்" (புறநா. 173 : 11) என்பது போன்றது. அகளங்கன் - விக்கிரம சோழன். அகளங்கனுகிய மன்னர்க்கு மன்னன்; மன்னர்க்கு மன்னன் - சக்கரவர்த்தி. 112. விதுகுலநாயகி-சந்திரகுலத்தில் தோன்றிய பெண்சக்கரவர்த்தி; விக்கிரம. 40. 113. கண்மருஞ் செவ்வி - கண்ணிற்குப் பொருந்திய அழகையுடைய

திசாதேவரெண்மரும் காணும் இவன் : அரசன் திக்குப்பாலகர் வடிவாக நின்று உலகத்தைக் காக்கின்றானென்பது நூற்கொள்கை; 'உலக பாலருருவாய் நின்று உலகம் காத்தலின் இறையென்றார்' (குறள், பொருட்பால், அவதாரிகை); "இந்திரன்முதற் றிசாபால ரெண்மருமொரு வடிவாகி, வந்த படி தரைநின்று மனுவாணை தனிநடாத்தி" (இரண்டா மிராசராசன் மெய்க்கீர்த்தி); 'உலோக பாலரென்பதற்கு இந்திரன் முதலான திக்கிற்றேவர் எண்மரையுங் கொள்ளாதே பூமியிலுள்ள இராசாக்களெனக் கொள்க' (தக்க. 17, உரை.) 114. நாகர் - பாதாளவுலகத்திலுள்ள பாம்புகள். தெய்வ முனிவர் - தேவரிஷிகள். 'தேவ இருடியாகிய குறுமுனி' (சிலப். அடியார்க்கு நல்லார் உரைப்பாயிரம்); "அமர முனிவ னகத்தியன் றனாது" (மணி : பதிகம், 11; 22 : 35.) தீவிய - இனியன. 115. மாதவி முதலியன தலைவனணிந்த மாலைகள்; தரின் தீவிய எனவியைக்க. மாது - சீதை. 116. ஒறுக்கும் - துன்பப்படுத்தும். தொல்லை - இராமாவதாரத்தில்; என்றது இவனைத் திருமாலாக நினைந்து கூறியது. வலம்புரி, தாதகி ;136-9.

(பி - ம்) 111. 'பகைஞன்' 113. 'கண்வருஞ் செவ்விக்' 'திசைதீ தேவர்' 'எண்வரும்', 'விண்வரும்' 114. 'தேவர்க்குந் தானவர்க்கும்' 115. 'கொள்ளை தரினென்பார்' 116. 'மீதே' 'அவனிவனே யென்பார்'

117. சென்று கனைகட லார்த்துத் திருக்குலத்து
நின்ற பழிதுடைப்பாய் நீயென்பார்—இன்றளவும்

(ப - ரை) மறுக்காமல் (116)-கலங்காமல்; அரிதென்று மீளாம லென்றுமாம். ஒருவன் தன் காதலியைச் சிறைசெய்யக் கொடுத்தானென்று திருக்குலத்துநின்ற பழியைத் துடைக்க வந்தவன் காண் நீ யென்பார்; என்ற கருத்து இருந்து வருந்தேம்; இறந்துபடுவேம் என்பது குறிப்பாற்கொள்ளக் கூறினார்.

(கு - ரை) உரை. இருந்து வருந்தேம் இறந்துபடுவேம் : இருந்து வருந்தல் சீதையின் செயல்; "பொறையிருந் தாற்றியென் னுயிரும் போற்றினேன், அறையிருங் கழலவற் காணு மாசையால்" (கம்ப. உருக்காட்டு. 11.)

118. துஞ்சுந் துயிலிழந்த தண்டர் குழற்றுளையில்
நஞ்சுங் குமிழியெழு நாளென்பார்—பஞ்சவனே

119. வாடையினுந் தண்ணெனனும் மந்தா நிலமெமக்குக்
கோடையினுந் தீது கொடிதென்பார்—கூடி

(ப - ரை) 118-9. இன்றளவும் (117) எமது கண் துயிலும்; இன்றுடனே துயிலிழந்தது. அதுவுமன்றி அண்டர் குழற்றுளைதோறும் இசையென்னும் நஞ்சும் குமிழியாகவே யெழும் இனியுள்ள நாளென்பார். அஞ்சுகிலம் உடையோனே, நுண்டுளி விரவிவரும் வாடையினுங் காட்டிற்றண்ணென

வீசும் மந்தாநிலம் எமக்குக் கோடைக் காற்றினுந் தீது. குதுகலத்தால் (112) கொடிதென்பாராய் (119.) கூடி - இங்ஙனே சிலர்கூடி.

(கு - ரை) 118. அண்டர் - ஆயர். பஞ்சவன் - ஐந்து நிலமுடையவன்; "வியனற்றமிழ்நா டைந்தின், குலங்காவல் கொண்டொழுகுங் கோ" (தண்டி. 73, மேற்.) வாடை - வடகாற்று. மந்தாநிலம் - தென்றற்காற்று. கோடை - மேல்காற்று. 119. வாடை, தென்றல், கோடை : "சேணுலாம், வாடையனைய மலயா நிலந்தனையும், கோடை யிதுவென்றே கூறினாள்" (விக்கிரம. 279-80.)

(பி - ம்) 118. 'துயிலிழந்தோங் கண்டாய்', 'துயிலிழந்தோ மண்டர்' 'நாடென்பார்', 'நாட்டென்பார்' 'பஞ்சவரென்.'

120. முருகுவார் கூந்தலார் மொய்த்தலர்ந்த கண்ணாற்
பருகுவார் போல்வீழ்ந்து பார்ப்பார்—பொருமதனன்

(ப - ரை) மணத்துக்குக் காரணமான மாலையும், விடுபோதும், அவிழப்பட்ட கூந்தலினராய் நாயகன் மேற்செறிந்து இமையாமல் மலர்ந்த கண்ணாலே அவனழகைப் பருகுவார்போல விரும்பிப் பார்ப்பாராய்.

இளைத்தார் இனையர் பலர் நிகழ (123) வண்ணம் இழப்பார், மனமிழப்பாராய் (110), இளைத்தார் பலர்நிகழ (123) இளையாமல் மன்னர்க்கு மன்னன் மகனென்பார் (111), கொள்ளத்தரின் நன்றென்பாராய்ப் (115) பலர்நிகழ, நின்ற பழி துடைப்பாய் நீயென்பார் (117); குமிழியெழும் நாளென்பார் (118); தீது கொடிதென்பார் (119) இனையர் பலர் நிகழ.

(கு - ரை) பருகுவார்போலப் பார்த்தல் : "பருகு வன்ன வருகா நோக்கமொடு" (பொருந. 76.) 111–20. இளையாமல் இருப்பவர்கள் செயல். உரை. விடுபோது : 'சிவந்த காலையுடைய வெட்சியுடைய சிறிய பூக்களை விடுபூவாகத்தூவி' (முருகு. 21, ந.); 'விடுபூ, தொடைப்பூ, கட்டுப்பூ வென்னும் மூவகைப் பூவகையும்' (சிலப். 5 : 14, அடியார்.)

(பி - ம்) 120. 'போல்விழுந்து பார்ப்பார்'

121. பார்த்தானோ புங்கானு புங்கம் படப்பகழி
தூர்த்தானோ யாதென்று சொல்லுகேம்—ஆர்த்தான்

122. உளைத்தான் சிலையிக் கொருகோடி கோடி
வளைத்தா னரும்புலகின் மாய்த்தான்—இளைத்தார்

## பேதை

123. இனையர் பலர்நிகழ வீங்கொருத்தி முத்திற்
புனையுஞ் சிறுதொடிக்கைப் பூவை—கனைமுகினேர்

(ப - ரை) 121-3. சிலர் இளைப்பச் சிலர் தலைமை கூறச் சிலர் இறந்துபாடுகூற, இவரைக்கூடிப் பொருமதனன் புங்கானுபுங்கமாகக் கடவதென்று

தானுங் கடவுளாதலின் கடவுட்கண்ணுலே பார்த்தானே, எய்து முடித் தானே, யாது செய்தானென்று தெரிந்ததில்லை. தெரியாத காரியத்தை எப்படிச் சொல்லுகேம். வெற்றி தோன்ற ஆர்த்துக்கொண்டான்; உலகிற் கரும்பால் மூவகை மாதரையும் நெஞ்சு உளைவித்தான் ; சிலையாகிய இக் கினைப் புங்கானுபுங்கமாக எய்யவேண்டுதலின், வில்லின் மென்காலான கோடியை ஒரு கோடி பரியாயமாக வளைத்தான். அரும்பு உள்ளது மாய்த்தானென, "ஊரொடு தோற்றமு முரித்து" என்னுஞ் சூத்திரவிதிக் கேற்பப் பவனிகண்ட வாயில் வகையோர் கூறியவாறு காண்க. புங்கானு புங்கம் : அம்பினது பலவாயைப் பகழிவாய் பொருந்தி இலக்கு எல்லை யாக மாலையான ஏவு. அதற்கு முட்டி சிலையிக்கு ஒரு கோடி வளைத்தல். அபிஷேகஞ் சூட்டியபின் (32) போதத்திமிரப் பொறை நீக்கலாகிய ஞானவுபதேசம் பெற்றுத் (35) திருவம்பலமும் (47) திருக்காமக் கோட்டமுந் திகழ்வித்துத் (56) தில்லை மூவாயிரவர்க்கும் வேண்டுவன செய்து பிறக்கிக் (58) கங்காபுரிபுகுந்து (59) பவனியெழுச்சி பணித்து (60) எருத்தந் திருக்கவின ஏறி (82) மண்ணுலகு பொன்னுலகாய் மாறு டப் (97) பொற்றொடியார் மைம்மழை மாடமறுகணைந்தான் (100); உலகிற் கரும்புளைவித்தான் (122); இளைத்தாரிணையர் பலராய் நிகழப் (122-3) பொருமதனன் (120) சிலையிக்கொரு கோடி கோடி வளைத்தா னெனவும் அரும்புலகின் மாய்த்தானெனவும் (122) இவ்விடத்து இத்தன்மை யான பலர் விளங்க; "கைக்கிளை வகையோ டுளப்பட" (தொல். புறத். 35) என்னும் விதிக்கேற்பக் கைக்கிளை யொழுக்க மொன்பதும் எய்திக் கையகலா மையலார் பேரலராய் மன்றேறப் (386-7) பாரேழும் பேணும் ஒரு குடையான் உலாப்போந்தானெனக் கூட்டுக. மூவகை மாதர் : அத்தினி, சங்கினி, சித்தினி யென்பார் ; பற்பனி தெய்வயோனி.

(கு - ரை) 121. புங்கானு புங்கம் : "அங்குலிக மொன்றுபுன லாழ்தரு கிணற்றில்விழ வந்தமுனி தேடுமினென, புங்கமொடு புங்கமுற வெய்திவ னெடுத்தமை" (வி. பா. வாரணுவதச். 51.) 122. உளைத்தான் - வருத்தினன். சிலை இக்கு - வில்லாகிய கரும்பு; இக்கு=இக்ஷு. ஒரு கோடி - ஒருகால். மன்மதனுடைய பாணம் அரும்பு என்பது நூற்கொள்கை; "சுருப்புநாண் கருப்புவில் லருப்புக்கணை தூவ", "கருப்பு வில்லியை யருப்புக்கணை மைந்தனை", "கருப்பு வில்லி யருப்புக்கணை தூவ" (மணி. 18 : 105,20 : 92,25 : 90.) 123. முத்திற் புனையுந்தொடி - முத்தாற் செய்த தொடி. "ஏற் றுப் பணைபணைக்கு மென்றோ ளிரண்டுக்கும், தோற்றுச் சொரிமுத்தின் சூழ் தொடியும்" (230.) உரை. மூவகை மாதர் : இளைப்பார், தலைமை கூறுவார், இறந்துபாடு கூறுவார் என்னும் மூவகையாரெனினுமாம். வெற்றி தோன்ற ஆர்த்தல் ; "வென்றிகொள் வீர ரார்ப்பினும் பெரிதே" (அகநா. 36 : 23); மலைபடு : 386, அடிக்.) பரியாயம் - முறை. ஊரொடு தோற்றம் : தொல். புறத். 30. பவனி - உலா.

(பி - ம்) 121. 'சொல்லுகேன்' 122. 'இளைத்தான்' 'சிலைகளொரு கோடி' 'வளைத்தான் கரும்புலகில்' 123. 'இனைய பலநிகழ'

124. ஆடாத தோகை யலராத புண்டரிகம்
பாடாத பிள்ளைப் பசுங்கிள்ளை—சூடத்

125. தளிராத சூதந் தழையாத வஞ்சி
குளிராத திங்கட் குழவி—அளிகள்

126. இயங்காத தண்கா விறக்காத தேறல்
வயங்காத கற்பக வல்லி—தயங்கிணர்க்

127. கூழைச் சுருண்முடிக்கக் கூடுவதுங் கூடாதாம்
ஏழைப் பருவத திளம்பேதை—சூழும்

(ப - ரை) 124-7. இப்பருவத்துக் கைக்கிளை காண்டலாகலின் அது கைக்கிளைத் திணையாயவாறு யாதோவெனின், பவனிகாண்டல் வேட்கை, தலைவிக்கு உளதாய்த் தலைவர்க்குத் தலைவிமேற் காட்சி விருப்பமின்மையின் ஒருதலைக்காமமானமையானும், பெண்பாற் கைக்கிளைக்கு அமைந்தமையானும் கூறினரென்பது. இத்தலைவிக்கு அவயவ பரிணமமும், மனவுணர்ச்சியு மின்மையின் பூவை முதலாகக் கூறியவை உவமப் பொருளாதலின், உவமைக்கு அமையாப் பருவத்துக் கூறிய கருத்து யாதெனின், முத்தினற் பூணையும் சிறு தொடியையுமுடைய கைப்பூவை. இது கண்டோர் நகைப்ப வண்டவிழைக்கையும் கழங்கு முதலிய ஆடலும் நிகழ்தலின் பூவைக்குப் பிறரை நகுவித்தலே தொழிலாகக்கூறின வினையுவமத்திற்குப் பேதையெனவும், மனக்களிப்புக்குக் காரணமான முகில் முழங்கினும் நேர்நின்று ஆடாத தோகையெனவே மன அறிவு உவமத்தினல் பேதை யெனவும், முகைமலராத புண்டரிகமெனவே தனது நாயகனை இரவியைக் கண்டாலும் முகம் மலராமையின் காட்சி யுவமைக்குப் பேதையெனவும், வார்த்தையினது பாகுபாடு பாடிப் பயிலாத செவ்விமொழி கூறும் இளைய கிள்ளை யெனவே ஓசை யுவமத்திற்குப் பேதையெனவும், சூடும்படி முறி தளிராத சூதமெனவே வேனிற்காலத்து இளமாங்கன்றுந் தளிர்க்கும் தன் காலமறியாததால் பரிசவுவமைக்குப் பேதையெனவும், நிழலில் வஞ்சி பரிணமம் நீட்டித்தலின் தழைத்தல் கூடாத வஞ்சியெனவே இடனறியாத மெய்யுவமத்திற்குப் பேதையெனவும், குளிர்ச்சிகூடாத திங்கட் குழவி யெனவே உருவுவமைக்குப் பேதையெனவும், விளைந்திறக்காத தேறலெனவே பயனுவமைக்குப் பேதையெனவும், விளக்கமில்லாத கற்பகக் கொடியெனவே ஓரையிலே ஒளிமழுங்கத் துகளேற லறியாமையின் பண்புவமைக்குப் பேதையெனவும், ஒரு பொருணுதலிக் கூறினமையின் பேதை யென்பது இறுதி விளக்கம்.

கொத்துப் போலசைந்து வளர்ச்சி யமையாது தலைசுருண்டு முடிக்கு மளவில் சில கூடுவதும், சில கூடாததுமாய், எளிய பருவத்து இளைய பேதையெனக் கூட்டுக. பூவை முதலாகக்கூறிய பத்துப் பெயரும் வினை நிலையுரைத்தல்; வினைநிலை யுரைத்தல் - தன் தொழில் நிகழ்தல். இடமும் காலமும் மெய்யுவமத்திற்கு ஏற்பத்தின் மேற்று.

(கு - ரை) பேதைப் பருவத்துக் கைக்கிளை காண்டல்: பு. வெ. 15. மாந்தளிர் சூடுதற்குரியது ; "கச்சியிற்சூ ரூதசீதள பல்லவங்கன விற்கவித், துச்சியிற்பனி வீசுகண்ணியின் வெண்ணிலாவை யொதுக்கவே" (தக்க. 625); "கலிகெழு கடற்கச்சிக் கமழிளந் தேமாவின், ஒலிதளிரும் முலைச்சுவடு முடன்சிறப்ப வுலவுங்கால்" (தொல். செய். 146, பேர். மேற்.) அளிகள் இயங்காத தண்கா என்பதற்குப் பழையவுரை இல்லை ; வண்டுகள் சஞ்சரியாத குளிர்ந்த சோலை. 126. தயங்கு இணர் - விளங்குகின்ற பூங்கொத்துக்களை யணிந்த. 127. குழைச்சுருள் - வளர்ச்சி குறைந்த சுருண்ட கூந்தல் ; கூடுவதும் கூடாதாங் கூந்தல். "பெருந்துறைப் பிள்ளைகள்ளார், முருகு தலைச்சென்ற கூழைமுடியா" (சிற். 104.) உரை. பூவைக்குப் பிறரை நகுவித்தலே பொருள் : 274. உரை. ஓரை - மகளிர் விளையாட்டு. "ஓரை யாயத் தொண்டொடி மகளிர்" (புறநா. 176 : 1.) ஒரு பொருள் நுதலிக் கூறினமை : "ஒரு பொரு ணுதலிய வெள்ளடி யியலாற், றிரி பின்றி வருவது கலிவெண் பாட்டே" (தொல். செய். 153.) மெய்யுவமத்திற்கு இடமும் காலமுங் கூறியது மாங்கன்றையும், வஞ்சியையுங் கருதி. வினைநிலை யுரைத்தல்: தொல். வேற். 5.

(பி - ம்) 127. 'சூழ'

128. நிலைத்தாய வெள்ள நெருங்க மருங்கே
முலைத்தாயர் கைத்தாயர் மொய்ப்பத்—தலைத்தாமம்

129. தொக்க கவிகைக் குலோத்துங்க சோழனை
மிக்க பராந்தகனை மீனவனைப்—புக்கார்

130. வணங்க வணங்கி வழுத்த வழுத்தி
அணங்க வணங்கா ளகலாள்—குணங்காவல்

(ப - ரை) 128-30. இத்தன்மையளாய பேதையாயினும் விசாரிக்கும் (127) நிலைமையையுடைத்து ; ஆயவெள்ளம் தம்மில் நெருங்க முலைத்தாயரும், கைத்தாயரும் இருபுறத்துஞ் செறியநின்று பவனி வந்த குலோத்துங்க சோழனை, பராந்தகனை, மீனவனை ஆயமுந் தாயரும் வணங்கப் புகுந்தாரென்று அதுகண்டு தானும் வணங்கி வழுத்தப் புகுந்தாரென்று அதுகேட்டுத் தானும் வழுத்தி, 'இவள் இந்த அரசனுக்குத் தலைவியாவது என்றோ' என்று அவர் அணங்கத்தான் அதுக்கு அணங்காளாய்.

(கு - ரை.) முலைத்தாயர், கைத்தாயர்: ஐவகைச் செவிலிமார்களுள் இருவர்; 'ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓலுறுத்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாய்' (சீவக. 363, உரை.) தலைத்தாமந்தொக்க கவிகை - தன்னிடத்தே மாலைகள்கூடிய வெண்கொற்றக் குடையையுடைய; "பூத்தாம வெண்குடையான்" (நளவெண்பா, 366.) பராந்தகன் - மற்ற அரசர்களுக்கு யமன் போன்றவன். மீனவன் - பாண்டியன்; இவன் பாண்டிநாட்டையும் ஆண்டமைபற்றி இங்ஙனங் கூறினர். புக்காரென்றது செவிலித்தாயரையும்

ஆய மகளிரையும். வழுத்த - புகழ. அணங்க - வருந்த. அகலாள் - அவ் விடத்தைவிட்டு நீங்காளாய். (உரை.) தலைவியென்றது இங்கே மனைவி யென்னும் பொருளது.

(பி - ம்) 128. 'மருங்கின்' 'தலைத்தந்த', 'தலைத்தடா' 129. 'பரந்தபனை'

131. மன்னன் புனையுந் திருமுத்த மாலையை
அன்னம் படிந்தாட வாறென்னும்—பின்னவன்

132. கோவைத் திருப்பள்ளித் தொங்கற் குழாங்கிளிக்கும்
பூவைக்கு நல்ல பொழிலென்னும்—பாவை

133. அயிர்க்கு மிருகோட் டயிரா பதத்தை
மயிற்கு மலையென்று மன்னும்—குயிற்கிளவி

(பழைய உரை.) 131-3. தான் காக்கும் உலகத்தவர்க்குத் துர்க்குணம் ஆகாமலும் நற்குணம் போகாமலும் காவல் செய்யும் மன்னவன் புனைதற்கு அமைந்த திருமுத்தமாலையைத் தன்னுடன் விளையாடும் அன்னம் படிந்தாட ஆறென்று கூறும். அதன் பின்னராகக் கோவை செய்த திருப்பள்ளித் தொங்கற்றிரளினைக் கண்டு தன்னுடைய கிளிக்கும் பூவைக்கும் விளையாடு தற்கு நல்ல பொழிலென்று கூறும். அதன் பின்னராகப் பாவை (மேற் செல்ல) ஐயப்படும் இருகோட்டையுடைய அயிராபதத்தை மயில் வாழ் தற்கு மலையாம் என்று பொருந்தும். யானைக்கு அயிராபதத்தோடு வினை முதலான உவமை நான்கும் ஒத்துக் கோடு ஒவ்வாமையின் விசேடித்தார்.

பாவையென்று தலைவிக்குப் பெயராக்கி மலையென்று ஐயப்பட்டுப் பொருந்துமெனினுமாம்.

(கு - ரை) 131. முத்துமாலை ஆற்றிற்கு உவமை; "நதிக்குப் போத வொழுகு முத்தாரமும்" (தக்க. 280.) 132. கோவையாகிய திருப்பள்ளித் தொங்கல்: இது சேருடி என்னும் ஒருவகை விருது; மயிலிறகாற் செய்யப் படுவது; 83; "குடையொடு களிறுந் தொங்கற் குழாங்களுங் கொடியின் காடும், இடையிடை மயங்கி யெங்கும் வெளிகயந் திருளைச் செய்ய", "தொங்கலுங் குடையுந் தோகைப் பிச்சமுஞ் சுடரை யோட்ட", "தொங்கல் வெண் குடைதொகைப் பிச்சமுட் படவிராய், எங்கும்விண் புதைதரப் பகன் மறைந் திருளெழ" (கம்ப. எழுச்சிப். 56, 78; எதிர்கோட். 7.) பாவை - பேதையின் விளையாட்டுப் பொருள்களுள் ஒன்று. மகளிருக்குப் பாவையி லிடத்துள்ள அன்பு, "சிறுபசும் பாவையு மெம்மு முள்ளார்" (குறுந். 278 : 3), "பாவையும் யானும் பண்புளிச் சூடுகம்" (பெருங். 2. 15 : 112), 'புல்லிக்கொண்டு பாவையைத் தந்தாள என்றியைத்துப் பாவை மேலுள்ள அன்பால் அதனைத் தருவுழிப் புல்லிக்கொண்டு தந்தாள் என்றுரைப்பாரு முளர்' (சிறு. 200, பேர்.) என்பவற்றால் விளங்கும். உரை. தலைவனேறிய யானைக்கு அயிராபதத்தோடு உரு ஒத்தலாவது வெண்டுகில் பூட்டியிருத்தல்: "வெண்டுகில் பூட்டிய வேழக் குழவியும்", "மறுவில் வெண்டுகில் மருங்

கணி பெறீஇ, அணைமிசை யமர்தந் தஞ்சுவரு வேழத்து" (பெருங். 1. 39 : 74, 2. 2 : 36-37.)

(பி - ம்) 131. 'புனைந்த' 'திருமுத்தின் மாலையை' 'மின்னரும்' 132. 'லென்றும்'. இவ்வாறே பின்னும் (134-9) உள்ளது.

134. தேன்வாழுந் தாமஞ்சூழ் தெய்வக் கவிகையை
மான்வாழ மாசின் மதியென்னும்—கோனுடைப்

135. பாங்குவளை யாழிப் பார்மடந்தை தன்னுடைய
பூங்குவளை மாலை புனைகென்னும்—தேங்கமலத்

136. தற்புத வல்லி யவளே பிறந்துடைய
கற்பக மாலையைக் காதலிக்கும்—பொற்பார்

137. பொலம்புரி காஞ்சிப் புகழ்மகட்கே தக்க
வலம்புரி மாலைக்கு மாழ்கும்—பொலன்றொடி

138. போராக வாரப் பொலன்கொடி பெற்றுடைய
பேராக மாலைக்குப் பேதுறும்—நேரியன்

139. ஏந்திழை மாத ரெவர்க்கும் பொதுவாய
பூந்துழாய் மாலை புனைகென்னும்—வேந்தன்முன்

140. இவ்வகை யல்ல திலங்கிழையார் மால்கூரும்
அவ்வகை கூரா ளயலொருத்தி—எவ்வுலகும்

(ப - ரை) 134-40, குயில்போலும்மொழியினையுடையாள் தேன்வாழும் தாமஞ்சூழும் தெய்வக் கவிகையைத் தனது மான் வாழுதற்கு மாசில்லாத மதியென்று கூறும். அரசனுடைய பகுதியாய் விளைந்த கடலைத் தனக்கு உடையாகவுடைய பார்மடந்தைதனக்கு உடைமையாய பூங்குவளைமாலை என்னுடைய மாலை; இக்குவளை மாலையை எனக்குப் புனைக என்று கூறும். தேங்கமலத்துக்கு அற்புதமாம் திருவின் செல்விதன்னோடு பிறந்துடைய கற்பகமாலை என்னுடைய மாலையென்று காதல் கூரும். அழகு பொருந்திய சாம்பூநதத்தாற்செய்த காஞ்சியினையுடைய புகழ்மகளுக்கே தக்க வலம்புரிமாலைக்கு வருந்தும்; பொன்னிறைற்செய்த தொடியினை யுடைய விசயமகள் தனது போராரவாரத்தால் பெற்றுடைய பெருமையினையுடைய ஆத்திமாலைக்கு மயக்குறும்; தன் உடைமை யென்பது அறியாளாதலின், பேதைமையுறும் என்றுமாம். நேரிமலையை உடையோனிடத்துப் பார்மடந்தை, பூமடந்தை, புகழ்மடந்தை, போர்மடந்தையாகிய கடவுண் மகளிர்க்கும், கோவியமகளிர்க்கும் பொதுவாகத் தனக்கு உடைமையாகப் புனைந்த துழாய் மாலையை, என்னுடைய மாலை இம்மாலை வாங்கிப் புனைகென்று கூறும் இவ்வகையல்லது வேந்தன் திருமுன்பு வணங்கி வாழ்த்தும் இலங்கிழையார் மால்கூரும் வதுவைக்குத் தான் காதல் கூராளாதலின், இவள் கருத்துச் சூழும் நிலைமையுடைத்தெனப் பவனி

கண்டோர் கூறினரென்பது. சூழும் நிலைமை யாதெனின் உவமைப் பொருளுக்கு அமையாத பேதையாயிருந்து செல்வமகளாய் வேண்டியவாறு கூறுமல் தலைவனுடைய முத்தமாலை, பள்ளித்தொங்கல், அயிராபதம், தவள சத்திரம் ஆகிய இவையிற்றைத் தன்னுடன் வளரும் அன்னம், கிளி, பூவை, மயில், மான் என்னும் இவையிற்றுக்கு இடமாகக் கூறியும் அவனுடைய கடவுட்டேவிமார்க்கு உரிய மாலைகளைத் தன்னுடைய மாலையெனப் புனைக வென்றும் கூறிய இதனல், இவளிடத்து இவளுக்கு உழுவலன்பு உண்டென்ன விசாரிக்கும் தன்மையு (மு)டைத்தென (ப் பருவத்தன்மையும் பாவையுங்கருதி)க் காண்டற் கைக்கிளை முற்றுறக் கூறியவாறு காண்க. பேதை முற்றும்.

(கு - ரை) 134. தேன் - வண்டுகள். தாமம் - பூமாலை. தெய்வக் கவிகை யென்றது அது தொழப்படும் தகுதியுடையதென்பதுபற்றிக் கூறியது; 'வளவன் வெண்குடையைக் காட்டித் தொழுமின் என்றூர்க்கு நிறைமதி தொழப்படாதாயினும் குடையோடு ஒப்புமைகண்டு தொழுத யாம் குடை தன்னைக் கண்டால் தொழுதல் சொல்லவேண்டுமோவென அதன் சிறப்புக் கூறியவாறு' (புறநா. 60, உரை.) 135. பாங்கு - பகுதி. பூமி தேவிக்குக் குவளைமாலை உரியது. 136. திருமகளுக்குக் கற்பகமாலையை யுரிமை யாகக் கூறியது திருப்பாற்கடலில் கற்பகம் அவளுடன் பிறந்தமைபற்றி. 137. பொலம்புரி காஞ்சி - பொன்னாற் செய்யப்பட்ட காஞ்சியென்னும் ஆபரணம். வலம்புரிமாலை வெண்ணிறமுடையதாதலின் புகழ்மகளுக்கு உரிய தாயிற்று; வலம்புரிமாலை - நந்தியாவர்த்தமாலை; போர் ஆரவாரப் பொலன் கொடி - துர்க்கை. 138. பேராரமாலை - பெரிய ஆத்திமாலை; இது சோழன் போர்க்களத்தே சூடும் மாலை; "விறற்படை மறவர் வெஞ்சமங் காணின், மறப்போர்ச் செம்பியன் மலைபூ வுரைத்தன்று", "மல்கும், கலங்க லொலிபுனற் காவிரி நாடன், அலங்க லமராழுவத் தார்" (பு. வெ. 242); "இளவரிக் கவட்டிலை யாரொ டேர்பெறத், துளவிய றும்பையின் சுழியஞ் சூடினன்" (கம்ப. முதற்போர். 115.) உரை. திருவின் செல்வி: குலோத்துங்கனுடைய தேவி. சாம்பூநதம் - நால்வகைப் பொன்னுள் உயர்ந்தது; "பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்பூநதம்" (திருவள்ளுவமாலை.) விசயமகள் - துர்க்கை. கோவியமகளிர் - ஆய்ச்சியர். செல்வமகள்: கலி. 50 : 14. தவளசத்திரம் - வெண்கொற்றக்குடை. உழுவலன்பு : ஏழு பிறப்பிலும் தொடர்ந்துவந்த அன்பு; பெருங். 1. 32 : 42. 133–40. பார்மகள் முதலியோர் : கம்ப. இராவணன் வதை. 226.

(பி - ம்) 134. 'மான் வாழும்' 138. 'பேழ்கணிக்கும்'

## பெதும்பை

141. முற்ற முடிக்க முடிக்காம வேள்சூட்டும்
கொற்ற முடியனைய கொண்டையாள்—அற்றைநாள்

(ப - ரை.) அயல் ஒருத்தி (140) - பேதைப் பருவத்துக்கு அயலாகிய பெதும்பைப் பருவத்து ஒப்பிலாள் ; அவள் தன்மை யாதெனின்.

உலகமென்ப துயர்ந்தோர் மாட்டாகலின், எவ்வுலகுமென்றது உலோகாயதனை யொழிந்த ஐவகைச் சமயகுரவரை; அவர் காமனே கடவுளென்று கருத்துமுற்ற, அவர்கொண்ட வேறுபாடற எடுத்தவினை முடிக்கக் காமவேள் விசயமகட்குச் சூட்டும் கொற்றமுடிபோலும் முடிக்கொண்டையாள் ; கொற்றமுடி - வீராபிஷேகம். முடிக்கொண்டை - உச்சிக்கொண்டைமேற் கோளகை.

(கு - ரை) ஐவகைச் சமயங்கள் : பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சம், மாயாவாதம், பாஞ்சராத்திரம் ; சூடா. 12 : 59. வீராபிஷேகம் - வீரமுடி. உச்சிக்கொண்டை மேற்கோளகை - உச்சிக்கொண்டை யென்னும் ஆபரணத்தின் மேலிடப்படும் பூண்.

(பி - ம்) 'கொங்கையாள்' 'இற்றைநாள்'

142. சாத்து மபிடேகத் தாரைபோற் றூழ்கின்ற
கோத்த பருமுத்தக் கோவையாள்—தேத்து

(ப - ரை) வீர விசய வபிஷேகஞ் சூட்டிய அந்நாளில் சகசிரதாரையாற் செய்த தாராவபிஷேகம் போலும் பருமுத்தாற் கோத்துத் தாழவிடப்பட்ட தலைப்பாளையாள். இவ்விரண்டும் உவமையும் பொருளும் ஒத்த மெய்யுவமம். தேத்து - இவ்விடத்து.

(பி - ம்) 'கோத்த'

143. விடம்போற் பணிகட்கு வேழங்கட் கெல்லாம்
கடம்போற் கொலையூறுங் கண்ணாள்—அடங்கா

(ப - ரை) திகாந்தத்தில் நிற்கும் பணிகட்கெல்லாம் வேழங்கட்கெல்லாம், விட மூறுதற்கும், கடமூறுதற்கும் நிலைக்களமானவிடத்து வந்தூறும் விடம்போலவும், கடம்போலவும், கொலையூறுதற்கிடமாகிய கண்ணாள். வினைவிளைவிற்கு இடங்கூறலின் இது மெய்யுவமத்தின் பாற்படும்.

(கு - ரை) சகசிர தாரைபோலும் முத்தக்கோவை; 'மாலை - சகசிர தாரையென்னும் முத்தக்கோவை' (தக்க. 106, உரை.) இவ்விரண்டுமென்றது அபிஷேகத் தாரையையும் முத்தக்கோவையையும். தலைப்பாளை: இது தெரியகமென்றும் வழங்கும் ; சிலப். 6 : 107, அரும்பத. உவமையும் பொருளும் ஒத்த மெய்யுவமம் ; "உவமையும் பொருளு மொத்தல் வேண்டும்" (தொல். உவம. 8.) பணி - பாம்பு. திகாந்தத்தில் நிற்கும் பாம்புகள் ; 34. வேழம் - திக்கஜம். கடம் : 'இரண்டு மதம் கடத்திற் பிறத்தலிற் பன்மை பற்றிக் கடம் என்றார்' (சிற். 55, பேர்.)

144. வயிர்ப்பரன் மறலி மகளுருக்கொ லீதென்
றயிர்ப்பா ரயிர்க்கு மழகாள்—உயிர்ப்பாளை

(ப - ரை) மறலி அடங்காத வயிர்ப்புடையானென்று, அவன் வினையைக் குறித்து ஐயப்படுவார், அவ்வினை மறுத்து ஐயப்படும் அழகாள். இதன் கருத்து மக்கள் செய்த வினைமுடிவு அறிந்து உயிர்கோடல் இயல்பாகவுடைய மறலி, சோழேசனுக்கு வழக்காலும் வலியாலும் தோற்று மக்கள்மேல் உயிர்கோடல் வினை மாறித், தன்வினை செல்லுமளவும் அடங்காத வயிர்ப்பானதலின் அவன் தன் உருவை மறைத்துக்கொண்ட பெண்ணுருவங் கொல்லோ என்று ஐயப்படுவார், அவன் தென்றிசைக் கடவுளாதலின் தன் தன்மையொழியப் பெண்ணுருவங் கொள்ளானென்று மறுத்து ஐயப்படுமழகாள். அழகு - மெய்யழகும், உருவழகும்; இஃது ஐயவுவமை. அடங்க வயிர்ப்பான் என்று பாடமோதின் மறலி அரசனுக்குச் செல்லும் உலகம் அடங்க வயிர்ப்பானென்றுமாம். மறலி உருக்கொல், மகளுருக்கொல் என்று அயிர்ப்பார் இரண்டுமல்லவென்று தன்னை ஐயப்படும் அழகாள் என்றுமாம். மக்கள் உயிர் கோடற்கே எமதூதியென்னும் மகள் கொண்ட உருக்கொல் இதுவென்று ஐயப்படுவார், எமதூதி தன்னுருவந் தெரியாம லடங்கிநின்று கொல்லும்; இது வெளிநின்று கொல்லும் என்று மறுத்து ஐயப்படும் அழகாளென்றும் ஒரு பொருள். மறலி என்றும் மக்கள் உயிர்கோடல் இயல்பாகலின் அயிர்ப்பு வேண்டாமையின் முன்னதே பொருளென்பதுபெற்றும். ஐயப்படுவாரென்றது நுண்ணுணர்வின் ஆராய்ச்சியுடையாரை. கொண்டையாள், கோவையாள், கண்ணாள், அழகாள்.

(கு - ரை) வயிர்ப்பு - வயிரம்; "வயிர்த்தன ணிலத்தினுயர் வானமினிதென்பாள்", "நனிவர வயிர்த்த போது நவியமு மடியு மன்றே" (வி. பா. சம்பவச். 102, சூதுபோர். 11.) உரை. மறலி சோழேசனுக்கு வழக்கால் தோற்றது; 6. யமன் சோழனுக்கு அஞ்சிப் பெண்ணுருவங் கொண்டது; "மன்னவன் செங்கோன் மறுத்த லஞ்சிப், பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்றம், ஆண்மையிற் றிரிந்துதன் னருந்தொழி றிரியாது, நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டிப், பண்மொழி நரம்பிற் றிவவியாழ் மிழற்றிப், பெண்மையிற் றிரியும் பெற்றியு முண்டென", "வேண்டுருவங் கொண்டு வேறோர், கொலைவே னெடுங்கட் கொடுங்கூற்றம் வாழ்வது" (சிலப். 5 : 218-23, 7 : 10); "வெறுப்பினால், வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொல்" (கலி. 56 : 8-9); "கன்னி ஞாழல் கமழ்பூங் கானல் யான்கண்ட, பொன்னங் கொடியை யீன்றோ ரில்லை போலுமால், மன்னன் காக்கும் மண்மேற் கூற்றம் வரவஞ்சி, இன்ன தொன்று படைத்த தாயினவன்செய்கோ" (தொல். செய். 155, பேர். மேற்.) உரு - நிறம். ஐயவுவமை: உவமையையும் பொருளையும் ஐயுற்றுரைப்பது; தண்டி. 31. யமதூதி பாம்பினுடைய நால்வகைப் பற்களுளொன்று (முருகு. 148, ந., சீவக. 1288); "சாலும் வஞ்சச் சகுனியொ டெண்ணிய, நாலு மைந்தரும் நச்செயி றாகவும், வாலும் மெய்யும் வருக்கங்க ளாகவும், ஆலும் வெம்பகை யாடர வானதே" (வி. பா. திரௌபதி மாலையிட்ட. 100.)

145\. கொல்லிக்கு முண்டுயி ருண்மைத்ரி கூடத்துச்
சொல்லிக் கிடக்குந் துணைமணிக்கும்—வல்லி

146\. இதற்கு நடைவாய்த் துயிர்வாய்த்த தென்ன
மதர்க்கு மொருதிரு மாது—முதற்றன்

(ப - ரை) 145-6. மெய்யழகாலும், உருவழகாலும் வேறு சொல்வது ஏதெனவினவின் உயிரில் பாவை கொல்லிக்குமுண்டு. அதற்கு மெய்யழகால் உயிருண்ணுந் தன்மை சொல்லிக்கிடக்கும் ; திரிகூடத்துத் துணைமணிக்கும் உருவழகால் உயிருண்ணுந் தன்மை சொல்லிக் கிடக்கும். இவை கண்டறிவாரில்லை. வல்லிசாதிக் கொடியாகிய இதற்கெனக் கொலைக்கு ஆதாரமாக நடையும் உயிரும் வாய்த்தனவாதலால் இது கொலைக்குக் காரணமாக உலகங்கூறும் மூவகையினுமல்ல ; இவ்வல்லி, "நல்கூர்ந்தார் செல்வ மகள்" என்று அயிர்ப்பார் துணியும்படி மதர்க்கும் தன்மையை யுடைய ஓர் மாது.

இஃது உவமை மறுத்துப் பொருளைப் புகழ்ந்தது. உயிர்ப்பாவை உலகோரறியக் கொல்லும்பாவை யென்றுமாம். மூவகை -(காலம், வினை, இடம். இவ்வாறு காமஞ் சாலா இளமைப் பருவத்துக் கைக்கிளையான கயப்பு விளங்க.

(கு - ரை) 144. உயிர்ப்பாவை-உயிரையுடைய பாவை. 145. உண்மை- உண்ணுந்தன்மை (கம்ப.) திரிகூடம் - இலங்கையிலுள்ள திரிகூட மென்னும் மலை. துணைமணி : இது தன் உருவழகால் உயிரைக்கொல்லும் ; "செம்மணிச், செஞ்சோதி சிங்களத்தை மாற்றினுய் செக்கரிளம், வெஞ்சோதி கண்டால் விலக்காயால்" (375-6) என்பர் பின்னும். "மாணிக்கக், கோவையான் முக்குவட்டுக் குன்ற யொருதிருப், பாவை யாற் கொல்லிப் பனிவரையாய்" (இராசராச. 65-6); "காவ விலங்கை விலங்கல் கிழித்திருள் கான்மணி கைப்படவும்" (குலோத். பிள்ளைத். சப்பாணி. 10.) உரை. மெய்யழகுக்குக் கொல்லிப்பாவையும் உருவழகிற்குத் திரிகூடத்துத் துணைமணியும் வேறு வேறு சொல்லப்பட்டன. கொல்லிப்பாவை தன் சிரிப்பால் உயிரைப் போக்குமென்பர் ; "திரிபுரத்தைச், செற்றவனுங் கொல்லிச் செழும்பாவை யுஞ்சிரிக்கக், கற்றதுவு முன்னகையைக் கண்டன்றோ" (சித்திரமடல், 90 - 91.) திரிகூடத்துத் துணைமணி இசைக்கு உருகுமென்பர் ; "வாவிய பொற்பரி யாவூரில் வீரையன் மைந்தபஞ்ச, காவியந் தேர்கின்ற தீத்தானின் கீதத்திற காவலர்தம், ஓவிய சாலையெல் லாங்கொல்லி யாவுள் ளுருகும்ரத்ன, மேவிய கூடமெல் லாந்திரி கூடத்தின் மேற்படுமே" (தமிழ்நா. 249.) வல்லி சாதிக்கொடி யென்றது, கொடியென்னுஞ் சொல் துவசத்தையுங் குறித்து வருவதால் அதனினின்றும் வேறுபடுத்துவதற்கு. கொலைக்குக் காரணமாக உலகங்கூறும் மூன்று பொருள் யமன், கொல்லிப்பாவை, திரிகூடத்துமணி. நல்கூர்ந்தார் செல்வமகள் : கலி. 56 : 12. உவமை மறுத்துப் பொருளைப் புகழ்ந்தது : இதனை உண்மை யுவமை யென்பர் தண்டியாசிரியர் ; 31. காலம், வினை, இடம் என்ற

மூன்றும் முறையே யமனுக்கும் கொல்லிப்பாவைக்கும் திரிகூடத்து மணிக்கும் உரியன. காமஞ்சாலா இளமைப்பருவம்: தொல். அகத். 50. கைக்கிளையான நயப்பு : பு. வெ. 15.

(பி - ம்) 145. 'த்ரிகூடத்தில்' 146. 'உயிர் பெற்றதென்ன

147\. பணிவாயி லாயம் பரந்தகலக் கிள்ளைக்
கணிவாயின் முத்த மருளி—மணிவாயாற்

148\. சொல்லா யெனக்கன்னை சொல்லாயோ நீயன்றே
வல்லாய் பிறவறிய வல்லவோ—கல்லரணக்

(ப - ரை) 147-8. முதற்பாடு தன் பணிவிடையிலே ஆயவெள்ளம் பரந்து செல்லக் கற்பித்து அதன் பின்னராகத் தான் வளர்த்த கிள்ளையை யெடுத்து அதற்குத் தன் அழகிய வாயில் முத்தமருளிப் 'பவளமணிபோலும் வாயாற் சொல்லாய்; எனக்கு ஆத்தாள்' என, அது கூறியது கூறுங் கிளியாதலின் இவள் கருத்து அறியாதிருப்ப 'யான் கேட்டதற்கு ஒன்று சொல்லாயோ' என்று அதற்கு அச்சமுறீஇ 'நீ காண் அறிந்து சொல்லவல்லாய்; பிற வல்லவோ' என்று எதிர்மறுத்துப் பறவைப் பிறப்பில் வைத்துக்கொண்டு 'நம்மரசன் அசுர நிரசன காரணத்தால் சண்டிகள (?) மூர்த்தியான காலையில் அவர்க்குத் திவ்விய தேவராசியமாகத் தெய்வவுலகத்துக்குக் கூறுமவை அவ்வுலகத்துச் சென்று நெற்கொணர்ந்த நீ அசுரரைச் சீந்து போராழித் தடக்கையபயற்கு; வாழியாய் - அவன் செல்வமே; கிளிக்கு ஆகுபேர்; வாழியாய் - வாழ்வாயாக வென்றுமாம்; தேவவுலகத்து நெற் கொணர்ந்து இவ்வுலகத்து உயிர் வாழுந் தன்மை செய்தலின்.

(கு - ரை) 147. மணிவாய்-பவளத்தைப் போன்ற வாய்; "மாசி லங்கை மணிமரு ளவ்வாய்" (அகநா. 16 : 3.) உரை. முதற்பாடு - முதல்; இது பிற்பாடு என்பது போல்வதோர் சொல்; 'பிற்பாடு: ஒரு சொல்' (சிலப். 13 : 1, அடியார்.) ஆத்தாள் - தாய். கூறியது கூறுங்கிளி : "கிளிப்பிள்ளை, சொன்னத்தைச் சொல்லுமென்று சொல்லப் பெயர்கொண்டாய்" (அழகர் கிள்ளை விடுதூது, 46 - 7.) அசுரநிரசனம் - அசுரர்களை யழித்தல். தேவராசியம் - தேவரகசியம்; "செவிராசி யங்கடந்த சேறைக், கவிராசன்" (சேயூர் முருகனுலா, 152 - 3.) சீந்து - கோபிக்கின்ற; "சீந்தா நின்ற தீமுக வேலான்" (சீவக. 1055.) சோழன் கிளிவடிவமாகச் சென்று நெற் கொணர்ந்தது, 201, உரை; இவ்வரலாறு இன்னதென்று தெரியவில்லை.

(பி - ம்) 148. 'நீயன்றி', 'வல்லரணக்'

149, கோழித் திருநகரக் கொற்றவற்கு வெற்றிப்போர்
ஆழித் தடக்கை யபயற்கு—வாழியாய்

150\. காக்குங் கடலேழு மாடுங் கடாரமோ
ஆக்கு நதியேழு மாரமோ—தேக்கிய

151\. பண்ணேழுங் கன்னுவ தங்கிசமோ பண்டளந்த
மண்ணேழும் வாகு வலயமோ—தண்ணாறுங்

152. தூவ னறவப் பொழிலேழுந் தொங்கலோ
காவன் மலையேழுங் கந்துகமோ—ஏவலால்

153. செய்யு நலனுடைய கோளேழுந் தீபமோ
பெய்யு முகிலேழும் பேரியமோ—வையகம்

154. கூறு மவையிவை யென்று குறுந்தொடி
வேறு தனிவினவும் வேலைக்கண்—சீறும்

(ப - ரை) 149-54. நின்னை வாழியாகவுடைய ஆழித்தடக்கை யபயற்கு அந்த மூர்த்தத்திற்குத் திருமஞ்சனஞ் செய்தற்குக் கடாரம் காவலான கடலேழுமோ? திருமார்பிற்கு ஆரமாக்கப்பட்டவை நதியேழுமோ? செவிப்பூ தேக்கப்பட்ட இசையேழுமோ? செவிப்பூ - செவித்தார். தேக்குதல் - நிறைதல். வாகுவலயம் முன்பு அளந்த மண்ணேழுமோ? தண்ணென்று நறுவியவாய தூய மாலை தருவன பொழிலேழுமோ? ஆடுகந்துகம் காவல் மலை யேழுமோ? நெறிமுறையில்தான் ஏவலால் ஏவல் செய்யுங் கோளேழும் நலனுடைய தீபமோ? காலம் பிழையாமற் பெய்யும் முகிலேழும் பெரிய வாச்சியமோ? இவையென்று வையங் கூறுமவையோ, நீ நெற்கொணரச் சென்ற காலையிலே தேவவுலகத்துக் கூறுமவையோ வேறு சில வுளவோவென்று குறுந்தொடி ஆயமுந் தாயருங் கேளாமல் (154) அவன் புகழும் வீரமும் உழுவற்றன்மை தோன்ற நயப்புற்றுத் தனியிருந்து வினவும் எல்லையிடத்து.

(கு - ரை) கல்லரணம் (148) - மதிலாகிய அரணையுடைய. 149. கோழி - உறையூர்; இப்பெயரின் காரணம் சிலப். 10 - 247 - 8-ஆம் அடிகளின் உரைகளால் விளங்கும். 150. கடாரம்-பாத்திர விசேடம்; 52. நதிக்கு, ஆரம்: தக்க. 280, 151. பண்களைக் கன்னுவதங்கிசமாகக் கூறியது காதாற் கேட்கப்படுதலின்; கன்னுவதங்கிசம்; "மணிக்குழைசேர், காதின் மிகை நீலங் கைபுனைவீர்" (தண்டி. 42, மேற்.) மண்ணேழென்றது ஏழு தீவுகளை. அவற்றை வாகுவலயமாகக்கூறியது அவற்றைத் தோளிற் சுமத்தல்பற்றி; "சிறந்தநன்,னுடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப" (பொருந. 137-8); "பூசக்ர கேயூரன்" என்பர்பின். 158. பொழிலேழு: தக்க. 70, 404, 571. 152. மலையேழு: "ஒருநின், சிலம்புக ளோரேழுஞ் சென்றடைந்து நோலேன்" (363-4.) கந்துகம் - பந்து. கோள்கள் ஏவல் செய்தல் இவனுடைய செங்கோன்மைபற்றி; மதுரைக். 6 - 9; பதிற். 69 : 13 - 5: "கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும்" (மணி. 7 : 8.)

(பி - ம்) 149. 'ஆழித்திருக்கை' 154. 'வினவுமேல்வைக்கண்' 'வினவுமெல்லைக்கண்'

155. ஒருத னடியின் மடிய வுபய
மருது பொருத வயவன்—விருதன்

156. விலையி லமுத மதன விமலை
முலையின் முழுகு முருகன்—வலைய

157. கனக சயில வெயிலி கணவன்
அனக னதுல னமலன்—தினகரன்

158. வாசவன் றென்னன் வருண னளகேசன்
கேசவன் பூசக்ர கேயூரன்—வாசிகை

159. ஆழிப் பெருமா னபய னனபாயன்
சூழிக் கடாயானை தோன்றுதலும்—தாழாது

(ப - ரை) 155. விருதன் - விபூருதன். 156. முருகன் - புதுமணவாளன். 157. அனகன் - பாபரஹிதன். 158-9. தருமநேமியைத் திருவாசிகையாகவுடைய பெருமான். சூழி-முகபடாம். வினவுக்கு உத்தரமாம் முன்னை அரசனுடைய யானை தோன்றுதலும்.

(கு - ரை) 155. உபயமருது - இரண்டு மருத மரங்கள்; பாகவதம் 10 : 4; இவனைக் கண்ணபிரானாக நினைந்து கூறியது. 156. அமுத மதன விமலை - திருமகள்; மதனம் - கடைதல். 156-7. வலைய கனகசயில எயிலி - வட்டமாகிய பொன்மலையாகிய மதிலையுடைய பூமி; கனகசயிலமென்றது சக்ரவாளகிரி பொன்னிறமுடையது என்பதுபற்றி; தக்க. 2, உரை. தினகரன் - சூரியன். 158. வாசவன் - இந்திரன். தென்னன் - கூற்றுவன்; "கூற்றுயிர் மாற்றலின்" (சீவக. 160.) ஈகையால் வருணனையும், அளகேசனையும் ஒப்பான். அளகேசன்-குபேரன். பூசக்ரகேயூரன் : "பண்டளந்த, மண்ணேழும் வாகுவலயமோ" (151.) ஆழி வாசிகையென மாற்றுக. 159. ஆழி-தருமசக்கரம்; "அடலாழி தனியேவு குலதீபந்ருபதீபன்" (தக்க. 6.) அபயன் - பய மில்லாதவன். அனபாயன் - பகைவர்களிடமிருந்து அபாயமில்லாதவன். இப்பெயர் பெரியபுராணத்திற் பலவிடங்களிற் காணப்படும். உரை. புதுமணவாளன்; சீவக. 420, ந. பாபரஹிதன் - பாபங்களினின்று நீங்கியவன். உத்தரம் - விடை.

(பி - ம்) 156. 'முதல்வன்' 159. 'ஆழிப் பெருமாள்'

160. சென்று டிருமுன்பு செந்தளிர்க் கைகுவித்து
நின்று ளினிவறிதே நிற்குமே—என்றாலும்

(ப - ரை) யானை தோன்றிய வளவிலே தரிகொடாமற் றிருமுன்பு சென்றாள். சிவந்த தளிர்போலும் கைகுவித்து நின்றாள். அதுகொண்டு அருத்தி அறிவார் (177) முற்பட்ட பேதைப் பருவம்போல் அணங்காளாய் இவ்விடத்தே நில்லாளெனத் தம்மிற்கூறி. ஏகாரம் எதிர்மறை.

(கு - ரை) உரை. தரிகொடாமல் - நில்லாமல். எதிர்மறை யேகாரம் 'நிற்குமே' யென்பதிலுள்ளது.

161. கோடு கழல்கண்டல் கொண்டற்கு மாலதி
ஓடு நகாதே யுடையாதே—பீடுற

(ப - ரை) நில்லாமைக்குக் காரணங் கூறுவார்போல மங்கைப் பருவத்தே தலைப்பட்டாள் என்பது குறிப்பாற் கூறினர். மங்கைப் பருவத் தொழிந்து விரகமில்லையென்ன வேண்டா; இப்பருவத்திலே அங்குரித்து அப்பருவத்திலே நிரம்புமென்பது இவர் குறிப்பாயிற்று. பின்பனிப் பருவத்துக் கொண்டற்காற்று நாயகமாக மலரும் கண்டலும் மாலதியும் கிளியுடன் நயப்புக் கூறியது உணராத ஆயமுந் தாயரும் மாலதி காலைமல ராகாமை தேற்றங்கூறக், கிளியுடன் நயப்புக் கூறியது சிறைப்புறமாக அறிந்த அருத்தியறிவார், கொண்டற் காற்றுக்கு அரும்பிய மாலதி காலைப் பூவான கண்டலுடனே மலராதொழியினும் மாலைப் பொழுதின் மலரா மென்பது தோன்ற முகையாது ஒழியுமேயென்று அவர் தேற்றத்தைப் பிரி நிலை செய்தது.

(கு - ரை) கண்டல் - தாழை. கொண்டல் - கீழ்காற்று. ஓடு - புறவிதழ் உலர். விரகம் - இங்கே காமம் என்னும் பொருளது. அங்குரித்து - முளைத்து. பெதும்பைப் பருவத்தில் காமம் தோன்றி மங்கைப் பருவத்தில் வெளிப்படுதல்; "காதலெனும், வித்தங் குரித்துவளர் மென்பூஞ் சிறு கொடிக்குச், சித்தங் கொழுகொம்பாஞ் செய்கையினள்" (**கடம்பர் கோயிலுலா, 172-3.**) கொண்டற்காற்று நாயகம். 'நாயகவாசி' என்பர்பின்; 163, உரை. சிறைப்புறமாக - வேலிப் பக்கமாக. பிரிநிலை செய்தது என்றது உடையாதே என்பதிலுள்ள ஏகாரத்தை நோக்கி.

(பி - ம்) 'நெகாதே'

162. வந்து தொடுங்குன்ற வாடைக் கிளங்கொன்றை
கொந்து தொடாதே குழையாதே—செந்தமிழ்த்

(ப - ரை) பருவப் பொருண்மைக் கேற்பக் கிளியுடன் தலைவன் வீரமும் புகழும் வினவினள். இனி இந்தப் பவனியில் குழையாதே : அரும்பின் காமம் மலர்தற்குப் பொழுது வேண்டுதலின். பெருங்காற்றாக வந்து தீண்டும் குன்றவாடைக்கு இளைய கொன்றை பூங்கொத்துத் தொடாதே யெனத் தேற்றங்கூற, அக்காற்றுக்குக் கொந்து தொடாதொழிந்தாலும் குழையாது ஒழியுமோ என அவர் தேற்றத்தைப் பிரிநிலை செய்தது.

(கு - ரை) பருவப் பொருண்மை நயப்பு. அரும்பின காமம்: "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" (**குறள், 1227.**) குன்றவாடை ; குன்று - இமயமலை.

(பி - ம்) 'வந்த கொடுங்குன்ற', 'வந்து கொழுங்குன்ற' 'கொடாதே'

163. தென்ற லெதிர்கொண்ட தேமாங் கொழுங்கன்று
மன்றல் கமழாதே வாழாதே—என்றுபோய்

(ப - ரை) செந்தமிழை யளைந்த தென்றலென்று நாயகவாசி யறிந்து தேமாவின் கொழுவிய கன்று மணத்தை முகிழாதேயெனத் தலைவி செவ்வியெளிமை கொண்டு தேற்றஞ்செய்ய, நாயகவாசி யறியாதாயிற் றென்றலுக்குத் தழைத்து வாழாதே; தழைத்தது நாயகவாசி யறிந்தன்றோவென

நயப்புக் கூறியது குறிப்பாற்கூறி அவர் தேற்றத்தைப் பிரிசிலே செய்து, இனி வறிதே நில்லாளென்று நயப்பைத் தேற்றஞ் செய்தது. போய்க் கொண்டற்கும் குன்றவாடைக்கும் தென்றற்கும், மாலதியொளி முகையும் இளங்கொன்றையும் தேமாவும் தழைத்து வாழுமதுபோல நின்றாள்; இனி வறிதே நிற்குமே. தலைவன் புகழும் வீரமும் நயந்து கிள்ளையுடன் கூறியது. ஆயத்துள்ளாரும் தாயரும் அறியார்; தலைவனுமறியான்; பயின்ற ஆயத்தையும், தாயரையும் மறைத்துக் கிளியுடன் கூறலால் தனது நயப்புப் பயன்கொள்ளாமல் இனி இவள் ஒரு சார்பற்று வறிதே நிற்குமே என்று, அருத்தியறிவார் (177) நொந்தாரென்றாலும் கோடு கமழ்கண்டல் கொண்டற்கு மாலதி ஓடு நகாதே, உடையாதே யென்றாலும், கோடுதோறுங் கமழுங் கண்டல், மாலதி இரண்டும், கொண்டற் காற்றுக்குப் புறவிதழ் ஒளி பெறாதே மலராதே. என்றுபோய் - என்று கூறித் தலைவியருகே சென்று. குன்றவாடைக்கும் தென்றற்கும் கொன்றையும் தேமாவும் பூத்தொழிந்து தழைத்து வாழாதே யென்றருகு சென்று என்றும் ஒரு பொருள்.

(கு - ரை) உரை. செந்தமிழ்த் தென்றல்: "தென்னந் தமிழி னுடன் பிறந்த சிறுகா லரும்பத் தீயரும்புந்தேமா" (மீனாட்சியம்மை பிள்ளைத். தாலப்.1); "தோடு கமழ் சந்தன வனத்திடை துளைந்தே, நீடுதமி ழின்சுவை யளைந்து... வாடைமிசை தென்றல்புகும் வையை வளநாடு" (அருணசல புராணம்.) நாயக வாசி: 160–61. உரை. நயப்பு பயன் கொள்ளாமை; நயப்பு இப்பருவத்திற்குரிய கைக்கிளை.

164. சூதள வல்ல துணைமுலை தூயகண்
காதள வல்ல கடந்தனபோய்—மாதர்

165. உருவத் தளவன் றொளியோக்க மாக்கம்
பருவத் தளவன்று பாவம்—தெருவத்

(ப - ரை) நயப்புடனும் காட்சியுடனும் சூதளவல்லவாய துணைமுலை விரகு அறியாது தூயவாயின; கண் காதளவல்லவாய் அவ்வெல்லையை விட்டுக் கடந்தன. இப்பெதும்பைப் பருவத்து மாதர் உருவத்தின் அளவன்று, ஒளியினது மிகுதியும் வளர்ச்சியும்; பருவத்தினளவல்ல மெய்ப்பாடென இருவகைப் பொருட்கும் ஒப்பமுடிந்தது. மெய்ப்பாடு விளக்குவார்.

(கு - ரை) சூது - சூதாடுதற்குரிய கருவி. துணை - இரண்டு. ஓக்கம் - மிகுதி. "சூதள வளவெனு மிளமுலைத் துடியள வளவெனு நுண்ணிடைக், காதள வளவெனு மதர்விழிக் கடலமு தனையவர்" (கலிங்கத். 21.) அன்று பன்மைக்கும் வரும்; நேமிநாதம், வினைமரபு, 7, உரை. உரை. விரகு - சூது. இரு வகைப்பொருள் நயப்பும் காட்சியும்.

(பி - ம்) 165. 'யூக்க மாக்கம்' 'தளவல்ல பாவம்'

166. துடைவ துடையாதா முள்ள முறவோர்ந்
தடைவ தடையாதா மச்சம்—கடைகடந்து

167. சேயினு நல்ல பெருமா டிருத்தடந்தோள்
தோயினுந் தோய மனந்துணியும்—ஆயினும்

(ப - ரை) புகுமுகம் புரிதல் விளங்கக் கண் காதளவகன்று கடந்தன. சிதைவு பிறர்க்கின்மை தோன்றத் தெருவிடத்து உடைவதும் உடையாதுமா முள்ளம் பொறி நுதல் வியர்த்தல் தோன்ற அச்சம் அடைவதும் அடையா ததுமாம். இம்மெய்ப்பாடு பிறத்தலின் சேயினும் நல்ல பெருமாள் திருத் தடந்தோள் தன்னிடத்து வந்து தோயினும் உங்கள் காவற்கடையைக் கடந்து தோய மனந்துணியும்.

(கு - ரை) உரை. புகுமுகம் புரிதல் - தலைமகன் காண்டலைத் தலைமகள் வேட்டல். சிதைவு பிறர்க்கின்மை - உள்ளம் சிதைந்து நிறை அழியுமாக லின் அச்சிதைவு புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினை நிறுத்தல். பொறி நுதல் வியர்த்தல் - தலைமகன் தன்னை நோக்கியவழி உட்கும் நாணும் ஒருங்குவந்து அடைதலின் வியர்பொறிக்கும் நுதலளாதல்.

(பி - ம்) 166. 'முடைய துடையாதாம்' 'உறவோர்த்து' 'தீடை கடந்து', 'கடல் கடைந்து'

168. ஏந்து தடந்தோ ளிணைப்பணைப்புக் கண்டிலன்
காந்து தனதடங் கண்டிலன்—பூந்தடந்

169. தேரி னகலுந் திருந்தல்குல் கண்டிலன்
காரி னெகிழளகங் கண்டிலன்—மாரவேள்

170. எய்யு மொருகருப்பு வல்வில் லெடுத்தானோ
கொய்யு மலரம்பு கோத்தானோ—தையன்மால்

(ப - ரை) 168-70. முதல் மெய்ப்பாடு தோற்றுவாய் செய்ததாயினும் புணர்ச்சி நிமித்தமான தடந்தோளிற் பணைப்புடன் ஏந்துந் தன்மையான இருகையு மெடுத்தல் கண்டிலன்; தனதடத்து அழகான புளகமும், ஊழணி தைவரலும் கண்டிலன். காரின் நெகிழளகமெனக் கூழை விரித்தல் கண்டி லன். மாரவேள் மனஸிஜனை காமன் அது காணாமையாலே எய்தற்றொ ழில் கருதி ஒப்பற்ற வல்வில்லை யெடுத்தானோ; அதுவுமில்லை; கொய்யும் மலரம்பு கோத்து ஆவமான தூணியைக் கட்டினானோ வென்னில் அதுவு மில்லை.

(கு - ரை) 168. பணைப்பு-பெருத்தல். காந்து-ஒளி விடுகின்ற. தனதடம்: "தனதடங்கண் மிசை நகநடந்த குறி" (கலிங்கத். 26); தடம் - உயர்ந்த இடம் (சிற். 4, பேர்.) 169. தடந்தேரின் - பெரிய தேரைப்போல. காரின் நெகிழ் - கரிய மேகத்தைப்போல அவிழ்ந்த. 170. கருப்பு வல்வில் - பல இலக்குக்களை யும் ஊடுருவிச் செல்லும் கரும்பாகிய வில். வல்வில்லின் தன்மை, புறநா. 152 : 1-6-ஆம் அடிகளாலும் அவற்றின் அடிக்குறிப்பாலும் விளங்கும்.

உரை. முதல் மெய்ப்பாடு : 'ஒருவனு மொருத்தியு மெதிர்ப்பட்டவழி அவ்வெதிர்ப்பாடு தொடங்கிப் புணர்ச்சியளவும் மூன்று பகுதியவாம் மெய்ப்பாடெனவும், புணர்ச்சிப் பின்னர்க்களவு வெளிப்படுந் துணையும்

மூன்று பகுதியவா மவையென்வும் அவையாறும் ஓரோவொன்று நந்நான்கு பகுதியான், ஒன்றன்பின்னொன்று பிறக்குமெனவும் கூறுகின்றான்' (தொல். மெய்ப். 13, பேர்.) இருகையுமெடுத்தல் - படைத்துக்கொண்ட வலியானுக் தடுக்கப்படாது நிறையழிதலின் கைகள் தாமே முயங்கல் விருப்பத்தான் எழுவனபோல்வதோர் குறிப்பு. தனதடத்துப் புளகம் : "புதிய கச்சணி குரும்பைக ளரும்பின புளகம்" (வி. பா. அருச்சுனன் தீர்த்தயாத்திரைச். 69.) ஊழணி தைவரல் - கூழையுந் தோடும்போலப் பெய்யப்படும் முறைமைய வாகிய வளைகளை முன்கைமேல் இறுகச் செறித்தலும் விரற்செறியினைத் திருத்தலும் முதலாயின. கூழை விரித்தல் ; 'மெய்யும் மெய்யுந் தீண்டிய வழி மெல்லியல் மகளிர்க்கு வரும் வேறுபாடு நான்கனுள் முதற்கண்ண தெனப்படும். என்னை ? தன்னுள்ளத்தில் நிகழ்ந்த வேறுபாட்டினை அக் காலத்தில் தலைமகள் நிறையுடையளாதலால் கரந்தொழுகற்பாலளே ; அங்ஙனங் கரக்குங்கால் தன் வயத்ததாகிய உடம்புபற்றி வரும் வேறுபாட்டினைத் தாங்கும் ; அங்ஙனந் தாங்குங்கால் உடம்பொடு தொடர்புடைய வேறுபட்ட தலைமயிரினது முடி உள்ளநெகிழ்ச்சியானே தன் வயத்ததன்றி நெகிழும்' (தொல். மெய். 14, பேர்.)

(பி - ம்) 168. 'காந்தி மதிவதனம்' 169. 'காரி னிருளளகம்' 170. தையலும்'

171. மந்தா கினிக்கோன் றிருப்புருவ வார்சிலையும்
செந்தா மரைக்கண்ணுஞ் செய்ததென—நொந்தார்

(ப - ரை) தையலிடத்து முதல் மெய்ப்பாடு தோன்றுதற்குக் காரணம் யாதெனின் மந்தாகினிக்கோன் திருப்புருவ வார்சிலையும், "மோக மரவிந்தம்" என்றலின் தாமரை யிதழ்போலுங் கண்ணும் செய்வித்ததே இதுவென்று தேற்றமுறக் கூறி நொந்தார் எனக் கூட்டுக.

(கு - ரை) மந்தாகினிக்கோன் - இரண்டாங் குலோத்துங்கன் : 'கங்கை கொண்ட கோப்பரகேசரிவன்மன்' (சாஸனம்). உரை. மோகம் அரவிந்தம் : இச்செய்யுள் இன்ன நூலிலுள்ளதென்று தெரியவில்லை. மன்மதனுடைய பாணங்கள் திரவியபாணம் என்றும், பாவபாணமென்றும் இருவகைப்படு மென்பர் ; சீவக. 706, ந.

(பி - ம்) 'செய்தவென', 'செய்தவே'

172. வளைத்தளிர்ச் செங்கை மடுத்தெடுத்து வாசக்
கிளைத்தளிர்ப் பாயற் கிடத்தி - துளைத்தொகை

173. ஆய்க்குழ லென்று லதுவு மவனூதும்
வேய்க்குழ லென்று விளம்பியும்—தீக்கோள்

174. நிகழ்நிலா வன்று நிருபகுல துங்கன்
புகழ்நிலா வென்று புகழ்ந்தும்—இகலிய

175. பல்லிய மன்று பரராச கேசரி
வல்லிய மென்று மருட்டியும்—மெல்லிய

176. கல்லார மன்று கதிரோன் றிருமருமான்
மெல்லார மென்று விளம்பியும்—நல்லார்

177. அருத்தி யறிவா ரவையிவை யென்று
திருத்தி விடவிடாய் தீர்ந்தாள்—ஒருத்தி

(ப - ரை) 172-7. உழுவற்றன்மையாலே நயப்புத் தோன்றி நயப்பாலே முதல் மெய்ப்பாடு சிறப்ப ஆயமுந்தாயரும் தலைவனுமறியாமல் தலைவிக்குண்டான அருத்தியறிந்து அருத்தியறிவார் வளையயுடைய தளிர்போலுஞ் செங்கையைப் பூட்டியெடுத்து வாசக்கிளைபோலுந் தளிராற் செய்த பாயலிலே வளர்த்தி ஆயர்குழலிற் றுளையைத் தொகை செய்தாற்போல அதிலெழுமிசையும் துளைத்தொகை யாயிற்றென்று தலைவி கூறினல், அதுவும் ஆறறிவுடையனவும், ஓரறிவுடையனவு மொக்க மயக்கும்படி நும் தலைவனூதிய குழலென்று சொல்லியும், தீக்கோளான ஆதித்தன் வெயில் நிகழ்கின்றது ; நிலா அன்றென்று மறுத்துக்கூறினல், அது நிலா அன்று உயர்ந்த அரசில் உயர்ந்தோன் புகழ் நிலா ; அதிலே பிரதாபாக்கினியுண்டு ; அரசிலுயர்ந்தாரால் உயர்ச்சி கூறப்படும் அரசாலுயர்ந்தோன் புகழாகிய நிலாவென்று புகழ்ந்து கூறியும், தம்மில் மாறுபட்டனவென்று கூறில் அது வாத்தியமன்று ; பரராசகேசரி வரவு கருதினன்போலும் என்றும், முழக்கம் அவனது கொடிப்புலி முழக்கமென்றும் மருளக் கூறியும், கல்லாரம் மெல்லியவென்று குறிப்பான் இகழ்ந்துகூற, அது கல்லாரமன்று ; கதிரோன் மரபிலுள்ளோன் போர்க்கண்ணியான ஆத்திமாலையென்று வன்மைக் குறிப்புத் தோன்றக் கூறியும் இவ்வாறு அவள் வேறுபடக் கூறியவை யெல்லாம் அவையல்ல ; இவை தலைவர்க்குள்ளனவென்று அருத்தி யறிவாரான நல்லார் திருத்திவிட விடாய் தீர்ந்தாளெனப் பவனி கண்டோர் கூறினரென்பது. அருத்தி யறிவாரென்றது பல்லவை யுணர்ந்தோர் முது பெண்டிரை.

கடல்முதல் முகில் ஈருன (150-53) எண்வகை ஓகாரமும் வினு ; சிறப்பென்றுமாம். நிற்குமேயென்ற ஏகாரம் (166) பிரிநிலை ; தேற்றமுமாம். கண்டல் மாலதி கொன்றை தேமா எனவந்த ஏகாரம் (161-3) ஒன்று தேற்றம் ; ஒன்று பிரிநிலை. என்று போய் (163) னொந்தார் (171) என்னும் வினை அருத்தியறிவார் (177) என்னும் பேர்கொண்டு முடிந்தது. மதர்க்கும் ஒரு திருமாது (146) திருத்திவிட விடாய் தீர்ந்தாள் (177) எனக் கூட்டுக. பெதும்பை முற்றும்.

(கு - ரை) உரை. உழுவற்றன்மை-ஏழு பிறப்பிலுந்தொடர்ந்த அன்பு. அருத்தி - ஆசை. தளிர்ப்பாயல் - தளிராலாகிய படுக்கை. ஆறறிவுடைய உயிர்கள் மக்கள் ; ஓரறிவுடையன தாவரங்கள். பிரதாபம் - செந்நிறமுடைதென்பது கவிமதம் ; "தனது கீர்த்தியுந் திறற்பிர தாபமுந் தரைமேல், அனல்செய் கோபமு முல்லையு மெனவெங்கு மமைத்துப், புனித மாமலை

தன்னையும் பொதிந்துகொண் டென்னப், பனிவி சும்பினிற் சிவந்துவெண் ணிறம்படைத் தன்றே" (காஞ்சிப். திருநாட்டுப். 10.) பரராசகேசரி : இது சோழர்கள் கொண்ட பட்டப் பெயர்களுளொன்று ; "இராச கேசரி புரந்து பரகேசரிகளா மிருவராணை புலியாணையென நின்ற விது வும்" (கலிங்கத். 191.) கல்லாரம் - செங்கழுநீர்ப்பூ ; இது குலோத்துங்க னுக்கு உரிய மாலை. கதிரோன் - சூரியன். மருமான் - வழித்தோன்றல். மெல்லாரம் - மெல்லிய ஆத்திமாலை. போர்க் கண்ணியான ஆத்திமாலை ; 138 ; "நின்னொடு, பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே" (புறநா. 45 : 3-4.)

(பி - ம்) 172. 'துளைத்தொகையால்' 173. 'ஆய்க்குழலன்றால்' ஆய்க்குழலன் றங்கதுவும்' 174. 'புகன்றும்' 177. 'விடர்தீர்ந்தாள்'

## மங்கை

178. உருவ வரிக்க ணொழுக வொழுகப்
புருவ முடன்போதப் போத—வெருவி

179. வனமுலை விம்மி வளர வளரப்
புனைதோள் புடைபோதப் போத—வினைவர்

180. அருங்கலை யல்கு லகல வகல
மருங்குபோ யுள்வாங்க வாங்க—நெருங்கு

181. பரவர ராச பயங்கரன்மேல் வேட்கை
வரவர வாற்றுத மங்கை—பொரவரு

(ப - ரை) 178-81. இப்பருவத்துக்குக் கைக்கிளை உட்கோளாதலின் "ஒரு பொருள் நுதலிய" என்னும் விதிக்கேற்பப் பரராஜ பயங்கரன்மேல் வேட்கை வரவர ஆற்றுத மங்கை. உருவ - விடாமல் ; உட்கோள் : இது முதனிலைத் தீவகம். செவ்வரி பொருந்திய கண் உட்கொண்டொழுகுந் தன்மைபோல நெடுகவர, உட்கொண்டு புருவங் கண்ணுடனே போதும் தன்மைபோல வளர்ச்சி போதவர, உட்கொண்டு பருவங்கண்டு அஞ்சி வளருந் தன்மைபோல முலைபெருமை வளரவளர, உட்கொண்டு வளருந் தன்மைபோலப் பூண்புனை தோள்வளர்ச்சி வரவர, உட்கொண்டு வினைவர் ஏற்கவே இடங்கொள்ளுந் தன்மைபோல வளர்ச்சிபோத அருங்கலை புனையல் குல் இடவிதாகவினையறிந்தோடி ஒளிப்பார் தன்மைபோல வர, உட்கொண்டு மருங்குல் உள்ளே கரப்ப, மருங்குற்கு அழகு நுண்மையாதலின் வரராச ரான பரராசருள்ளம் பயம் நெருங்கும்படி பயத்தைச் செய்யுஞ் சோழேசன் மேலே தனது உட்கோள் வேட்கைவர, அதனைப் பொறுத்தாற்றுதவாறு விளங்கும் மங்கை. வினையில்லனவற்றுக்கு வினையுள்ளனபோல உவமஞ் செய்யலாமென்னும் உவமவியல் விதிக்கேற்பக் கண் முதலான அவயவங் கள் இறந்து பரிணாமங் கூறியவாறு காண்க. பரிணாமம் கண்ணுக்குக் குறிப் பும், புருவத்துக்கு முரிவும், முலைக்குப் பெருமையும், தோளுக்குப் பணைப்பும்,

அல்குற்குப் பரப்பும் மருங்குற்கு நுடக்கமுமாம். இதனைப் பொருட்கொட ராக்கிக் கண்டோருள்ளம் உட்குதல்வரக் கண்நெடிதாக, அதுகண்டு புருவம் அதனுடனே போகக்கண்ணும் புருவமும் போதுந் தன்மைகண்டு முலைவெருவிப் பெருமையும் போரும் வளர, முலைவளர இடங்கொடுத்துப் பூண்புனைதோள் பக்கத்துப்போத, அதுகண்டு தோளுக்கும் முலைக்கும் ஆதாரம் நாம் என்று பொன்செய் கொல்லர் அரிதிற்செய்த மேகலையை யுடைய அல்குல் இடவிதாக அதுகண்டு மருங்குல்போய் உள்ளே குடி வாங்கத் தும்பைப் போர்க்கு எதிரேன்ற தெவ்வர் வகுப்பு அழியாமல் வாங்கி நொச்சிப்போர் கருதிச் சென்று நெருங்குபவரான பரவரசருக்குப் பயங்கரனை சோளேசன் மேற்றனது வேட்கைவர, அவன் பவனிவருந் துணையும் வேட்கை பொறுத்தாற்றாத மங்கை யென்பது மொருபொருள். வரரான பரவரசருக்குப் பயங்கரனென்று தலைவனைக் கூறுதலின், தும்பைப் போருக்கு எதிரேன்ற தெவ்வரைக் கெடுத்தல் பிடித்தல் செய் யாமல், நொச்சிப் போருக்கு இடங் கொடுத்தவன் இவன் ; பயங்கரஞ் செய் யும் பரவரசர் போர்க்கு வாரானல்லன் என்னும் பொருள் தந்தது. முன் னர்ப் பொருள் பருவக் கைக்கிளைக்கும், "ஒரு பொருணுதலிய" என்னும் விதிக்கு மேற்றது.

(கு - ரை) உரை. உட்கோள் : பு. வெ. 15. ஒரு பொருள் நுதலிய வென்னும் விதி : தொல். செய். 153. உருவ - உட்குவர. முதனிலைத் தீவகம்- "குணந்தொழில் சாதி பொருள்குறித் தொருசொல், ஒருவயி னின்றும் பல வயிற் பொருடரின், தீவகஞ் செய்யுண் மூவிடத் தியலும்" (தண்டி. 39.) மருங்குற்கு அழகு நுண்மை : "நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" (கலி. 108 : 3.). சோளேசன் : "துங்க பத்திரைச் செங்க ளத்திடைச் சோள சேகரன் வாளொ றிந்தபோர்" (கலிங்கத். 103.) வினை இல்லனவற்றிற்கு வினையுள்ளனபோல உவமஞ் செய்தல் : 'வந்த வென்றதனுன் இல்லாத வினை வருவித்தும் சொல்லப்படும் ;......இவை உவமையும் பொருளுமாகிய வினைபற்றி வந்திலவாகலின் அதன் வகை யெனப்பட்டன' (தொல். உவம. 1, பேர்.) பரிணமம் - மாறுதல். முரிவு - வளைதல். பணைப்பு - பெருத்தல். நுடக்கம் - அசைதல். நொச்சிப்போர் - மதிலைக் காத்தற்குச் செய்யும் போர். பருவக் கைக்கிளை : உட்கோள்.

(பி - ம்) 179. 'இனைய', 'வினையார்' 180. 'வாங்க', 'வாங்கி' 181. 'பொரவரும்'

182. தேமிரைக்குங் காலையின் ஞாயிற் றிளஞ்செவ்வி
தாமரைக்கே சாலுந் தரத்ததோ—காமர்

183. அமுத மதியத் தலர்நிலா முற்றும்
குமுத நறுமுகைக்கே கூறோ—நமதுகார்

184. கானின் மடமயிற்கே காணியோ தண்ணிள
வேனில் குயிற்கே விதித்ததோ—தேனிமிர்

185. தண்டா மரையா டலைவனை யாமும்போய்
கண்டாலென் னென்னுங் கடைப்பிடியாள்—பண்டை

186. ஒளியா ரணங்காத நம்மைத்தா மொன்றும்
தெளியாத வாறே தெளிந்தும்—களியன்னம்

(ப - ரை) 182-6. நிசாசரரைப் பொரவரும் செஞ்ஞாயிற்றிளஞ் செவ்வி யானது இனிமைபெற வண்டு இரைக்கும் காலையில் முகை யவிழ்ந்த தாம ரைக்கே நமதென்று பொருந்துந் தன்மைத்தோ; செவ்வந்தி, செண்பகம், செங்கழுநீர் என்னும் மலரும் காலைமலராதலின் அவையும் தமதெனத் தகாதோ? அழகு பொருந்திய வடிவுடைய மதிமலரும் நிலாவானது முற்றும் கறுவிய குமுத முகைக்கே நமதென்று தன் கூறுகக்கொள்ளும் தகைத்தோ? மௌவல், பித்திகை, சிறுசண்பகம் முதலான மாலைமலர்களும் நமதென்று பயன் கொள்ளத் தகாதோ? பருவத்து எழு காரானது நமதென்று ஆளு தற்குக் கானமடமயிற்கே காணியாக விட்டதோ? சாதகம் முதலான பல் லுயிரும் நமதென்று பயன் கொள்ளாதோ? தண்ணென்ற இளைய வேனிற் பயன் குயில் நமதென்று ஆளுதற்கே விதித்ததோ? மாமரமும் கொடியும் வண்டும் முதலியன நமதென்று பயன் கொள்ளாவோ? இயல்பு மணத் தால் வண்டானது விடாமல் முரலும் தண்ணென்ற தாமரையாள் தலைவ னை சோளேசனை யாமுஞ்சென்று கண்டால் என் செய்யுமென்னும் கடைப்பிடியை உடையாளாயிராநின்றாள். சோளேசன் தொல்லொளி யான நாராயணன் (185-6); தான் அவனை நீங்காத ஆரவாரத்தையுடைய அணங்காகுந் தன்மையைத் தங்களைத் தாங்கள் தெளியாமை யிருக்கும் படியே யெனத்தலைவி உட்கோள் கூறித் தெளிந்தும். இவற்றுள் ஓகாரம் பிரிநிலை ஓகாரம். நமதென்பது ஓர் வினைக் குறிப்பு.

(கு - ரை) 182. தேம் - வண்டு. உரை. நிசாசரர் - மந்தேகர்; வி. பா. இருட்டிணன் தூது. 87. தாமரை சூரியனைக்கண்டு மலர்வது: 'செந் தழலே வந்தழலைச் செய்திடினுஞ் செங்கமலம், அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லா லலராவால்' (பெருமாள் திருமொழி, 5 : 6.) பித்திகை - பிச்சி. காணி - உரிமை.

(பி - ம்) 183. 'அணிநிலா' 'கூற்றோ' 184. 'தேனிமிரும்'

187. வாவிக் கரையில் வரநீ ரரமகளிர்
சேவிக்க நின்றுடுஞ் செவ்வியாள்—காவிற்

188. புகுதில் வனதெய்வப் பூங்குழை யாயத்
தொகுதி புடைபரந்து சூழ்வாள்—மிகுதே

189. னிரையர வந்தரு செய்குன்ற நீங்கா
வரையர மாதரின் வாய்ப்பாள்—பெருவிலைய

(ப - ரை) 187-9. தெளியாத மயக்கத்தையுடைய அன்னம் வாவிக்கரை யின் வரின் நீரரமகளிர் பண்டையொளியாரணங்கென்று தெளிந்து நின்று

சேவிக்க நின்றுடுஞ் செவ்வியாள். காவிற் பூக்கொய்யப்புகில் அவ்வன துர்க்கையான பூங்குழை தனதாயத்துடனே ஒளியாரணங்கென்று தெளிந்து நின்று பரந்து சூழ்போதச் செவ்வி போதுவாள்; பரத்தல் - விடநிற்றல். மிகு தேனிரையரவந்தருஞ் செய்குன்றில் நீங்காத காலேயில் வரையரமகளிர் ஒளியாரணங்கென்று தெளிந்து செவ்வி மிகுத்துக் கூறுதல் வாய்ப்பாள் என இயற்கை நலங்கூறியது.

(கு - ரை) இக்கண்ணிகளில் மங்கையை நீரரமகளாகவும், வன தேவதையாகவும், வரையரமகளாகவும் கூறினர். இவற்ருல் நீராடுதல், பூக் கொய்தல், செய்குன்றில் விளையாடுதல் முதலிய மங்கைப் பருவத்துக் குரிய நிகழ்ச்சிகள் குறிப்பாகக் கூறப்பட்டன. புகுதில் - புகுந்தால். விட - மிக; 'விடக்களி யாநம் விழுநக ரார்க்கும் வியன்முரசே' (சிற். 297.) இயற்கை நலம் - ஆபரணங்களைக்கொண்டு அலங்கரியாத அழகு.

(பி - ம்) 188. 'புகுதில வன்றெய்வப்' 'பூங்குழையா ராயத் ' 'புடை பெயர்ந்து' 189. 'நிரையர வந்தங்குஞ்', 'நிரையவரந்தரும்', 'நிரையுர வந்தேரும்', 'நிரையவரந்தந்து' 'செய்குன்றினீங்கா'

190. முத்தில் விளங்கின் முளரித் தவளப்பூங்
கொத்தி னணங்கனைய கோலத்தாள்—பத்திய

191. பச்சை மரகதம் பூணிற் பணைமுலைசூழ்
கச்சை நிலமகள்போற் காட்சியாள்—நிச்சம்

192. உரக பணமணிகொண் டொப்பிக்கி லொப்பில்
வரகமலை யன்ன வனப்பாள்—நரபதி

(ப - ரை) 190-92. எனச் செய்கை நலம் உருவுவமையால் ஒப்பக்கூறி உவமையைப் புகழ்ந்தது. இத்தன்மையானவள்.

(கு - ரை) 190. தவளமுளரி - வெண்டாமரை. அணங்கு - கலைமகள். பத்தி-வரிசை. 191. கச்சை - கச்சு. நிலமகள் - பூமிதேவி; 'மரகதப்பணி பூணில் வசுந்தரை யாவோம்' (224-7, உரை.) நிச்சம் - நாள்தோறும். 192. உரக பணமணி - பாம்பினுடைய படத்திலுள்ள மணி. ஒப்பிக்கில் - அலங்காரம் செய்தால். வரகமலை - மேன்மையான திருமகள். நரபதி : சோழனுடைய பட்டப்பெயர்; 'நரபதியென்பது சோழன் பெயராதலால் சிறப்புடைத்து', 'எனவே மனுஷ்யருடைய வரம்பழியாமற் காப்பவன் சோழன் என்பது; இதற்குக் காரணம் நரபதியென்னும் பெயருடைய னுதல்', 'மனுஷ்ய லோகத்திலுள்ளாரெல்லாரும் சோழனைப் போலிருப்பார், அவன் நரபதியாதலால்' (தக்க. 9, 246, 275, உரை); "நரபதி நன்னி லத்துப் பெருங்கோயி னயந்தவனே' (தே. சுந்தர.)

193. மைம்முகில் வண்ணத்து வானவன் மீனவன்
கைம்முகில் மேல்வரக் கண்டதற்பின்—மொய்ம்மலர்

194. நீலமே வேய்ந்தடுக்க நீலமே பூண்டுடுக்க
நீலமே யன்றி நினையாதாள்—நீலமே

(ப - ரை) 193-4. உட்கோள் : அதற்குக் காரணம் கூறுகின்றார். சனநாதன், மைம்முகில் போலும் வண்ணத்து வானவன், மீனவன் கையுடையதோர் முகில்போலும் யானைமிசையே பெதும்பைப் பருவத்துப் பவனியில் வரக்கண்டு அதற்குப் பின்பு நயந்து உட்கொண்டவாறு தோன்ற நீலநிறம் செறிந்த மலர்வேய்ந்து, நீலவர்க்கமான மணியே பூண்டு, உடுக்க நீலநிறத்திற்றுகிலேயன்றி நினையாதாளாய்.

(கு - ரை) முகில் வண்ணத்து - மேகம்போன்ற நிறத்தையுடைய. குலோத்துங்க சோழன் நிறம் கறுப்பென்பது 62-ஆம் கண்ணியுரையாலும், தக்க. 777-ஆம் தாழிசையின் விசேடக் குறிப்பாலும் அறியப்படும். வானவன் மீனவன் என்றது சேரநாட்டையும் பாண்டிய நாட்டையும் இவன் ஆண்டமைபற்றி. நீலம் மொய்ம்மலர் - நீலநிறம் நெருங்கிய பூ. அடுக்க நீலம் - வர்க்கமாகிய நீலமணிகள். தலைவனுடைய நிறம் கரியநிறமாதலால் அதனைப் போன்றவற்றையே தலைவி அணிய விரும்பினள் ; " மானோர் நோக்கின் வளைக்கை யாய்ச்சியர், கான முல்லை சூடார் கதுப்பிற், பூவைப் புதுமலர் சூடித் தாந்தம், அடங்காப் பணைமுலை யிழைவளர் முற்றத்துச், சுணங்கின் செவ்வி மறைப்பினும் மலர்ந்த, பூவைப் புதுமலர் பரப்புவர் பூவயின், ஆனிரை வருத்தம் விடமலை யெடுத்து, மாரி காத்த காளை, நீல மேனி நிகர்க்குமா லெனவே" (தண்டி. 19, மேற்.) என்னும் பழைய செய்யுளிலும் இச் செய்தி அமைந்திருத்தல் அறியத்தக்கது. சனநாதன் : நரபதி யென்னும் பொருளது ; "தண்டே னசையாற் சனநாதன் றொண்டியின்வாய், வண்டே மகிழ்ந்தேறல் வந்து" (நம்பி. 127, மேற்.) ; "பண்சிலம்ப வண்டாடும் பைந்தார்ச் சனநாதன்" (களவியற். மேற்.)

(பி - ம்) 193. 'கைம்மலை' 194. 'வேய்ந்தடுக்கி', 'வேய்ந்துடுக்க' 'பூண்டுடுக்கை'

195. முன்னுடைய செங்கே ழறிக்கு முறிக்கோலம்
தன்னுடைய மாமை தழீஇக்கொள்ளப்—பின்னர்

196. நெருங்கு கழுநீரும் நீலோற் பலமும்
ஒருங்கு மலர்தட மொத்தும்—மருங்கே

197. இறங்கிய கற்பக வல்லியு மேறி
உறங்கிய தும்பியு மொத்தும்—பிறங்க

198. வயங்கு தளிரீனு மாங்கொம்பர் பூக்கொண்
டுயங்கு கருவிளை யொத்தும்—தயங்குவாள்

(ப - ரை) 195-8. அவள் உட்கொண்ட நீல உருவமே, ஒளியாரணங்காய் (186) முன்பு தானுடைய சிவந்த நிறத்தை விளக்கும் தளிர்முறி போலும் தன்னுடைய நிறம் பத்தி பாய்ந்து தழுவிக்கொள்ள, ஒன்று பின்ன

ரும் ஒன்று முன்னருமாக நெருங்கு கழுநீரும் நீலோற்பலமுமாக ஒரு காலத்து மலர்தடத்தை ஒப்பாயும், கையும் தோளும் இறைத்தொடி முதலாக வாகுபுரி யளவாக அணிந்த நீலப்பூணும் தனது சிவந்த நிறமும் புற்கென்ற நிறத்தை யுடைத்தாய்ப் பூலோகத்தில் இறங்கிய கற்பகக்கொடியும் அதன் செவ்விகண்டு வாவியும் சோலையும் மறந்து கொடியிலே ஏறிப் பயன்கொண்டு துயிலும் தும்பியென்னும் சாதிவண்டும் ஒப்பாயும், விளக்க முண்டாகத் தளிர்த்து அசைவதோர் மாங்கொம்பர் கருவிளம் முதல் நடு இறுதிபூத்து அசையுமாறு ஒப்பாயும் பரிவர்த்தனைக்கும் இல்பொருளுவமைக்கும் ஏற்ப விளங்குவாள்.

(கு - ரை) " அவர்தம், நீலநிறத்தை யெல்லோரும் நினைக்க வதுவாய் நிரம்பியதோ " (கம்ப. 1. 10 : 67.) கழுநீர் சிவப்பு : " செக்கச் சிவந்த கழுநீரும் " (கலிங்கத். 74.) நீலமும் செந்நிறமும் என்றது பரிவர்த்தனை. ஏனையவை இல்பொருளுவமை.

(பி - ம்) 197. ' வல்லியையும் ' ' தும்பியையும் ' ' பிறங்கி ', ' பிறங்கு ' 198. ' தளிரிள ' ' கருவிளையும் '

199. கோலத்தார் மௌலிக் குலோத்துங்க சோழற்கு
ஞாலத்தா ரெல்லார்க்கு நாயகற்கு—நீலத்தின்

200. காசுங் கலாபமும் மேகலையுங் காஞ்சியும்
தூசுந் துகிலுந் தொடியுநான்—கூசேன்

201. வெளியே தருவேன் விரையாரத் தொங்கல்
கிளியே தருமேனி கேளாய்—அளியேநீ

202. தாது கடிகமழ் தாதகித் தாமத்தின்
போது கொழுதப் புறப்படாய்—ஓதிமமே

203. எங்கள் பெருமானை யிங்கே தரவாநீ
உங்கள் பெருமா னுழைச்செல்லாய்—பைங்கழற்காற்

204. சேயை நினைந்தேகி னம்முடைய சேக்கையான்
சாயன் மயிலே தலைப்படாய்—பாயும்

205. கடமானே போல்வார்க்கு நீநின்னைக் காட்டின்
மடமானே தானே வருங்காண்—கடிதென்று

206. கொள்ளைகொள் காமன் கொடும்பகைக்குக் கூசித்தன்
பிள்ளைக ளோடிருந்து பேசுவாள்—உள்ள

(ப - ரை) 199-206. எல்லா அரசருக்கும் நாயகமாயுள்ளவன்தனது நிறத்திற் கேற்றபடியாகப் புனைந்த காசு முதல் தொடியிறுதியாக நீலப்படியாற் புனைந்தவை யெல்லாம் திறையாக மறையாமல் தருவேன் ; பூணணியின்றி நிற்பதற்குக் கூசுவதும் செய்யேன் ; மணம் பொருந்திய ஆத்திமாலை

யொன்றும்-தருமாகில் நீ சென்று கேளாய், கிளியே ; நீ கேளாய் என்றாள், கிளி அவன் வடிவாதல்கொண்டு. தலைவன் நிறத்துக்கு அமைந்த அணி கொண்டு உயிர் புரந்திருந்தாள் எனவும், இனி வரவு தாழ்த்தது கொண்டு ஆற்றாளாயினாள் எனவும் தன் உட்கோளை விளக்குதல் கருதிக் கூறியவாறு காண்க. வண்டே, நீ தாதும் விளக்கமுமுள்ள மணங்கமழும் தாதகித் தாமத்தின் இனிய போதில் உண்டான தாது கொழுதி அதன் மணம் கமழும் படி இருக்கிறவரை விட்டுப் புறப்படாய். அன்னமே, எங்கள் பெருமானை இவ்விடத்திலே கொண்டுவந்து தர உங்கள் பெருமானை ஸ்ரீ கருடாழ்வானிடத்து ஏறச்செல்லாய் ; உங்கள் பெருமானென்றாள் பறவைக்கரசென்பதும், வழிபட்டோர்க்குக் காலம் செல்லாமல் விரைய வரம் கொடுக்கும் என்பதும் நோக்கி. மயிலே, அழகிய வீரக்கழற்கால் சேயை நினைந்து செல்வையாகில் நீயே வாயிலாக நம்முடைய சேக்கையான் ஆவன் ; விரையச் சென்று தலைப்பட்டாய் ; சேக்கையான் ஆவன் என்ற கருத்து பரிபாடலிலே முருகனைப் பாடப் பிரிந்தோரைக் கூட்டுவன் என்றமையின். மடப்பத்தையுடைய மானே, கடம்பாயும் வேழம் போல்வார்க்கு நீ நின்னைக் காட்டுவையாகில் யானிருந்த இடத்தைத் தேடித் தானே விரைய வருங்காண்; விரைய என்றது மாயமான் பிடித்துக்கொடாத குறை கருதிப்போலும். என்று நாண் முதலாகிய நாற்குணங்களையும் கொள்ளை கொள்ளுகிற காமனது கொடிய பகைக்குக் கூசித் தன் பிள்ளைகளோடிருந்து பேசுவாளாய். பகல் முனிவுரைத்தல்.

(கு - ரை) 199. கோலத்தார் - அழகிய மாலையை அணிந்த. காசு முதல் தொடியிறுதியாகவுள்ளவை நீலத்தாற் செய்யப்பட்டவை. 200. கலாபம் இருபத்தொரு வடமுடையது. மேகலை : இருவடமாய்த் துகிலுக்குள்ளே அணியப்படுவது. காஞ்சி : எட்டுவடமுடையதாய்த் துகிலின் புறத்தே அணிவது. தூசு - பட்டாடை. துகில் - பருத்தியாடை. 201. ஆரத்தொங்கல் - சோழனுக்குரிய ஆத்திமாலை. 202. கடி - விளக்கம். தாதகித் தாமம் - ஆத்திமாலை. 204. சேய் - முருகக்கடவுள். சேக்கையான்-பள்ளியிடத்தான். 205. கடமான் - யானை ; கடம் - மதம். யானை போல்வானென்றது பகையை மதியாமைபற்றி ; "தரணி காவலன் சச்சந்த னென்பவன், பரணி நாட்பிறந் தான்பகை யாவையும், அரணி லான்" (சீவக. 1813) என்பதும் 'பரணி யானை பிறந்த நாளாதலின் அது போலப் பகையை மதியான் என்றாள்' என்னும் அதன் உரையும் இங்கே அறியற்பாலன. 206. பிள்ளைகள் : கிளி வண்டு முதலியவற்றின் இளமைப் பெயர். முருகனைப்பாடப் பிரிந்தோரைக் கூட்டுதல் : "கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை, எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே" (பரி. 14 : 23-4) என்பதும், 'பிரிந்த கேளிர் வந்து புணர்ந்து பின் நீங்காமைப் பொருட்டு மகளிர் யாழை எழுவி நின்னைப் பாடுகின்ற பாட்டை விரும்பினோய்' என்னும் அதன் உரையும் இங்கே அறிதற்பாலன. உரை. பகல் முனிவுரைத்தல் - பகற்பொழுதை வெறுத்தபடியைச் சொல்லுதல்; பு. வெ. 15.

(பி - ம்) 199. 'நாயகற்குஞ் சீலத்தின்' 202. 'தாதகித்தண்ணறும்'

203. 'பெருமானை' 204. 'தலைப்பட்டாய்' 205. 'வருமே கொடி தென்று' 206. 'உள்ளி'

207. அலகில் குலநீல ரத்ந பரணம்
விலகி வெயிலை விலக்க—உலகிற்

208. பெரிய பெருமாள் பெரும்பவனி வீதி
இரிய வெதிரேற் றிழந்தாள்—வரிவளை

(ப - ரை) 207-8. அவ்வெல்லையிலே உலகிற் பெரிய பெருமாள் பெரும்பவனியிலே போத மீதணிந்து விளங்கிய குல நீலரத்நபரணம் பெரும்பவனி வீதியிலே வெயிலை மறுத்துவிலக்க எதிரே சென்று நாண் முதலிய நாற்குணமும் இரிய வளைமுதலானவை இழந்தாள்.

(கு - ரை) உள்ள (206) - தன்னிடமுள்ள. 207. அலகில்-கணக்கில்லாத. நீலரத்நாபரணத்தை அணிந்தது குலோத்துங்க சோழன் நிறத்தோடு ஒப்புடைமைபற்றி (194.) 208. பெரிய பெருமாள் : குலோத்துங்க சோழன் பெயர் ; "நீடிய எண்டிசை நீழல் வாய்ப்ப நேரிய தெக்கிண மேரு வென்னப், பீடிகை தில்லை வனத்த மைத்த பெரிய பெருமாளை வாழ்த்தினவே" (தக்க. 773.) இரிய என்பதற்கு எழுவாய் வருவிக்கப்பட்டது.

(பி - ம்) 208. 'எதிரேற்றெழுந்தாள்'

209. ஆயத்தா ரென்னி லளியத்தா ரெல்லாரும்
நேயத்தா ரல்லரே நிற்பரே—தேயத்தார்

210. மன்னனை யஞ்சாதே வாரணத்தை யஞ்சாதே
மின்னனை யாளையு மீதூரா—முன்னர்

211. கடமாக்குந் தெய்வக் களிறு விரும்பும்
இடமாதும் யாமென்பார் போலப்—படமாய்

(ப - ரை) 209-11. இத்தன்மைகண்டு ஆயவெள்ளத்தார் யாது செய்தாரோ வெனில் எல்லாரும் தலைவியாலே தலையளி பெறத்தக்கார். தலைவியளவில் எல்லாரும் ஒரு தன்மைத்தாய நேயத்தாராகையாலே தேயத்தார் மன்னனை அஞ்சாதே வாரணத்தையும் அஞ்சாதே மின்போல் நுடங்கிக் கிடந்த தலைவியையும் தோள்மீது அணைத்துக்கொண்டு பெருமான் முன்னர்ச் சென்று கடத்தைத் தன்னிடத்து உண்டாக்கும் தெய்வக்களிறு விரும்புமிடம் யாம் ஆதும் என்று கருதுமவர்போல.

(கு - ரை) 209. அல்லரே ; ஏகாரம் எதிர்மறை. நிற்பரே : ஏகாரம் வினா. 210. வாரணம் - குலோத்துங்கன் பவனிவந்த யானை. 211. தெய்வக் களிறு - குலோத்துங்கன் பட்டத்து யானை.

212. இரைப்பச் சுரும்போ டிருளளக பாரம்
நிரைத்து வனமாகி நிற்பார்—விரைப்பூண்

213. முலையாய் வளரு முரட்குவடு கொண்டு
மலையாய் நெருங்க வருவார்—தொலையாத

214. பாய பருமுத்தின் மாலை பலதூக்கித்
தூய வருவியாய்த் தோன்றுவார்—சாயற்

215. கொடியா யடிசுற்றிக் கொள்வார் புரக்கும்
பிடியாய் நறுந்துகள் பெய்வார்—விடுதுமோ

216. யாழாய் மிடற்றால் வணக்குதும் யாமென்பார்
தோழாய் வளைத்தெங்குஞ் சூழ்போவார்—ஆழிக்கைத்

(ப - ரை) 212-6. காட்டிலே படாம் வளைத்து நிரையாக நின்று ஆரவாரிக்கும் தன்மைபோல வண்டாகிய படாம் வளைத்தவை இரைப்ப நிரைத்து அளகத்தால் வனமாகப் பாவித்து நிற்பாராய், மணம் பொருந்திய பூண் முலையாகிய குவடுகளைக்கொண்டு மலையாகப் பாவித்துத் தம்மில் நெருங்க வருவாராய், ஒளிபரந்த பருமுத்தாகிய மாலையாலே மலையும் அருவியுமாகப் பாவித்துத் தோன்றுவாராய், அழகிய கொடியாகப் பாவித்து யானையினது அடியைச் சூழ்ந்து கொள்வாராய், அதனல் அளிபெறும் பிடியாகப் பாவித்துச் சுண்ணத்துகளை வீசுவாராய், எளிதாக விடுவோமோ என்று கூறி யாழாகப் பாவித்துக் கண்டக்கருவிப் பாடலாலே வணக்குதும் யாமென்று துணிவாராய், தொழு வளைத்ததாகப் பாவித்துச் சூழ வளைத்துக் கொள்வாராய் இடமும் வினையும் கருதி மயிலனையார் (217) வளைத்துக் கொள்ளுவதாக.

(கு - ரை) 212. விரை - வாசனை. 213. முலையாய் வளரும் முரட்குவடு: "முலையென விரண்டு முரட்குவடு மரீஇ" (கல். முருகன்துதி.) முத்துமாலைக்கு அருவி: 150, குறிப். 214. சாயல் - மென்மை. 215. கொடி, யானையின் காலைப் பிணிப்பது. களிற்றின்மீது துகள் பெய்தல் இயல்பு: "நீறாடிய களிறுபோல" (பட்டின. 48.) 216. யாழாயென்றது தாம் சாரீரவீணை என்பது கருதி. மிடற்றால் வணக்குதும் என்றது யானை இசைக்கு வசமாதல கருதி; "வகையுடை நல்யாழ் வரத்திற் பெற்றதூஉம், விசையுடை வேழம் வணக்கும் விச்சையும்" (பெருங். 2. 11: 154-5); "இசையினி லிவட்குத் தோற்றும் யானையால் வேறு மென்னின், இசைவதொன் றன்று கண்டீர்" (சீவக. 748); 'யானை நாதத்தில் தோற்றுதலின் அதற்கு வணங்குதல் இயல்பு' (சீவக. 748, உரை.) தோழ் - தொழுவம்; "ஊழிதொ ருவுந் தோழும் போன்றுடன் மூக்க வென்று" (சீவக. 487.) இக் கண்ணிகளில் வனசரம், கிரிசரம், நதிசரம் என்னும் மூவகை யானைகள் குறிப்பாகக் கூறப்பட்டன. "மூத்திறத்தன.........யானை", "மூவகை யானையர்" (வி. பா. சூது போர். 79, 13-ஆம் போர். 6.) உரை. படாம் - ஓடை. அளகம் - கூந்தல். கூந்தற்காடு என்பது மரபாதலின் அளகத்தால் தம்மை வனமாகப் பாவித்தார். யாழாகப் பாவித்துக் கண்டக்

கருவிப்பாடலால் வணக்குதும் என்றது யாழும் மிடறும் வேறுபாடின்மை பற்றி; "இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடி னாளோ, நரம்பொடு வீணை நாவின்வின்றதோ வென்று நைந்தார்" (சீவக. 658); 'காட்ட வீணையும் சரீர வீணையும் ஒக்கக் காட்டின சில பட்சிகள்' (தக்க. 610, உரை.) இடம் என்றது வனம், மலை, நதி என்ற மூன்றையும் கருதி. வினை யென்றது கொடியாய் அடிசுற்றல், சுண்ணம் தூவுதல், யாழாற் பாடல், தோழாய் வளைத்தல் என்பவற்றை.

(பி - ம்) 212. 'இரைப்பச் சுருளோடு', 'இரைத்துச் சுருளோடு' 'நிரைப்ப' 213. 'நெருக்கி', 'நெருக்க' 215. 'அடிச்சுற்றிக்' 216. 'யாழால்', 'தோழால்'

217. தியாகனை மானதனைத் திக்கானை யெட்டுக்கும்
பாகனையே பின்சென்று பற்றுவார் - தோகையர்

218. நற்றுகில் கொண்ட நறுந்துழாய் மார்பநின்
பொற்றுகி றந்தருளிப் போதென்பார் - மற்றிவள்

219. தன்சங்கங் கொண்ட தடந்தா மரைக்கண்ணு
நின்சங்கந் தந்தருள னேரென்பார் - மின்கொள்ளும்

220. இன்றுயிற் கெல்லா மெறிபாற் கடற்கொள்ளும்
நின்றுயி றந்தரு ணீயென்பார் - என்றென்று

221. மானு மயிலு மனையார் வளைத்துளைப்பத்
தானுங் களிறுந் தடையுண்ட - கோனும்

222. தடுத்த கொடிக்குச் சதமடங்கு வேட்கை
அடுத்த திருநோக் கருளாக் - கொடுத்த

223. திருநகை மூர றிகழ்ந்தா னணங்கும்
ஒருநகை கூர்ந்தொருவா றுய்ந்தாள் - பெருநகை

224. எய்தி யனங்க னெழப்போனான் மாதரும்
உய்து சிறந்தா ளுமைச்சென்றார் - நொய்திற்

(ப - ரை) 217-24. என்றென்று மானனையார் உளையக்கூறி வளைப்ப, களிறும் தானுமாக இவர்கள் வளைப்பப் போகாது நின்ற அரசனும் முற் பருவத்துவேட்கை ஒன்று பத்து நூறாக அடுத்ததெனத் தலைவி தன்மையை ஆயவெள்ளத்தார் குறிப்பானும், அவர் கூறிய கூற்றானும் அறிந்து தனது அகமகிழ்ச்சி முகத்தால் அறியும்படி மெத்தென்ற திருநகை முகத்தாலே விளக்கினன்.

வளையிழந்த அணங்கும் உழையர் குறிப்பாலும் கூற்றாலும் விளைந்த அபராதம் உட்கொள்ளாமல் எமது உட்கோள் அறிந்தருளினன். உழையராலே நமக்கு இப்பேறு கிடைத்ததென்று ஒப்பற்ற ஒளிகூர்ந்து ஒருவழி

யால் காமன் வினைக்குப் பிழைத்தாள். காமனும் இவர்கள் குறிப்புணர்ந்து உழையர் பெருக நகைப்பத் திருநோக்கு அருளி அதனுடன் கொடுத்தாற் போலும் குறுமுறுவலும் நிகழ்ந்தான். அது பயனாக வீதி விடப் போனான். வளைத்தும் உளைத்தும் தன் நேயம் உணர்த்திய ஆய வெள்ளமாதரும் மனவியாகுலம் தீர்ந்து உய்ந்து சிறந்தாளான தலைவியருகே செறிந்தார்.

(கு - ரை) ஆழிக்கை (216) - சக்கரத்தை ஏந்திய கையையுடைய ; இது திருமாலாக நினைந்து கூறியபடி. 217. தியாகன்-கொடுப்பவன் ; "சென்னி நாட் டெரியல் வீரன் றியாகமா விநோதன் தெய்வப், பொன்னிநாட் டுவமை வைப்பை" (கம்ப. மருத்துமலை. 58.) மானதன் - மானத்தைக் கொடுப்பவன் ; "தண்கொடை மானதன் மார்புதோய்" (கலிங்கத். 31); "மானதன் மூரிக்களிறு", "மானதன் மெல்லென் கவரிக்கால்", 'வயிரா கரமெறிந்த மானதன்" (இராசராச. 162, 166, 260.) திக்காணை எட்டுக்கும் பாகன் என்றது அவை நிற்குமிடமளவும் இவன் ஆட்சி சென்றது என்பது கருத்து. தோகையர்-ஆய்ச்சியரது. 218. துகில் கொண்டது கண்ணபிரானாக அவதரித்தபொழுது. இவள் தன் சங்கம் - இத்தலைவியின் வளையல்களை. நின் சங்கம் என்றது பாஞ்சசனியத்தை. தடுத்த கொடி என்றது "சாயற் கொடியா யடிசுற்றிக் கொள்வார்" (215) என்பதை நினைந்து கூறியது. 222. நோக்கு அருளா - பார்வையைக் கொடுத்து. 223. அணங்கு - மங்கை. 224. அனங்கன் - மன்மதன். உய்து : உய்ந்து என்பதன் விகாரம். உரை. முற்பருவத்து வேட்கை : நயப்பு. கூற்றும் குறிப்பும் : "சொல்லொடுங் குறிப்பொடும் முடிவுகொ ளியற்கை, புல்லிய கிளவி யெச்சமாகும்" (தொல். செய். 206.) உழையர் - பக்கத்துள்ள மகளிர். அபராதம் - குற்றம். பெருக நகைத்தல் : 'நகை என்பது சிரிப்பு ; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலுமென மூன்றென்ப' (தொல். மெய்ப். 3, பேர்.) விடப்போனான் - அகலப்போனான், இது 'விடநிற்றல்' என்பது போன்ற வழக்கு. வளைத்து - தடுத்து. உளைத்து - மனம் வருந்தும்படி.

(பி - ம்) 217. 'தோகைதன்', 'தோகையை' 218. 'பொற்றுகி லின்றருளிப் போகென்பார்' 'உற்றவள்', 'உற்றிவள்' 219. 'தந் தருள்க நீயென்பார்' 'முன் கொள்ளும்' 220. 'றந்தருளுநீ', 'றந் தருளாய் நீ' 221. 'வளைந்திளைப்ப' 'தகையுண்ட' 222. 'தசமடங்கு' 'அருளித் தொடுத்த' 223. 'கூர்ந்தொருகால்' 224. 'எய்தவனங்கன்' 'உய்தி'

225. றொடுக்கும் புறஞ்சொற் றொடாமே முலைமீ
தடுக்கும் பசலை யடாமே - உடுக்கும்

226. துகிலுஞ் சரியாமே சுற்றத்தா ரெல்லாம்
புகிலும் புகாமே பொராமே - அகிலுறும்

227. பள்ளியிற் செல்லாள் பருவ முருகற்றோய்
வள்ளியிற் சால வயங்கினாள் - ஒள்ளிழை

(ப - ரை) 225-7. நொய்தாகத் தொடுக்கும் புறங்கூற்றுமொழி தொடாமல் முலைமிசையே அடுக்கும் பசலை அடாமல், உடுக்கும் துகிலும் சரிதல் கூடாமல் சுற்றத்தா ரெல்லாம் தாம் புகும் இல்லிற்புகாமே நின்று போர் செய்யாமல், அகிற்புகை மணக்கும் தலைவனது பள்ளியிடத்துச் செல்லாளாய் அருள் பெற்று ஆயமும் தானும் நின்ற செவ்வி கூறில் பருவந்தோறும் பிரியாமல் முருகன் தோள் தோய்ந்த அகத்திணை இன்பம் நயந்த வள்ளியினும் மிக விளங்கினாளென வாயில்வகையிற் பவனி கண்டோர் கூறினர் எனக் கூட்டுக.

அணங்கு மென்றது (223) முதலான உம்மை எண்ணும்மை. ஏகாரம் அடங்கலும் (225 - 7) ஈற்றசை. அருத்தி யறிவார் திருத்திவிட விடாய் தீர்ந்தாள் ஒருத்தி (177) கண்ணும் புருவமும் (178) முலையும் தோளும் (179) அல்குலும் மருங்கும் (180) முதலான அவயவ பரிணமம் கூடின பருவத்தாளாய் மங்கைப் பருவக்கைக்கிளை விளங்கத் தாமரையும் குமுதமும் மயிலும் குயிலும் கொண்டு கூறித் (182 - 4) தான் திருவின் செல்வி யென்பது நீரரமகளிர், கானரமகளிர், வரையரமகளிர் தெளிந்து சேவிக்கும் செவ்வியாளாய் இருக்கவும் தன்னைத் தெளியாமலிருக்கும்படியே என்று அதிசயித்து, பெதும்பைப் பருவத்துப் பவனிக்காட்சி கொண்டு தலைவனை நாராயணன் என்று தெளிந்து (186 - 9) அவன் நிறத்துக்கேற்ப உடுப்பதும் முடிப்பதும் பூண்பதும் அடங்கலும் நீலமாக (193 - 4) அவன் நீலமும் தனது சிவந்த நிறமும் தம்மிற் பருவத்திணைக்கும் இல்பொருளுவமைக்கும் ஏற்பித்துக் (195 - 8) கிளியுடனே உட்கோள் கூறி (200 - 201), வண்டு முதலியன கொண்டு பகல் முனிவுரைத்தல் கூறிய எல்லையில் (202 - 6) தலைவனை வரவு எதிரேற்றுக்கொண்டு சென்று வளையிழந்தாள் (208.) அது கண்டு ஆயவெள்ளத்தார் தம் அன்பு தோன்ற வளைத்தும் உளைத்தும் கூறத் (209 - 21) தலைவி குறிப்புணர்ந்து திருநகை மூரல் திகழ்ந்தான் (222-3.) அதுகொண்டு அணங்கு மகிழ்ந்து உய்ந்தாள் (223.) காமனும் போனான் (224.) உழையரும் தலைவியைச் சென்று கூடினர் (224.) அருள்பெற்ற தலைவி முருகனுடனே கூடி விளங்கிய வள்ளியிற் சாலவயங்கினாளென் வாயில் வகையாரிற் பவனிகண்டோர் கூறினர் எனக் கூட்டுக. நீலமே யன்றி நினையாதாள் என்றார் (194), முத்தின் பணி பூணின் நாமகள் ஆவோம்; மரகதப்பணி பூணில் வசுந்தரை ஆவோம்; மாணிக்கப்பணி பூணில் வரகமலையாவோம்; அப்பணிகள் பூணமல் மறுத்து நாயகன் நிறத்துக்கேற்ற பூணணிதலை உட்கொண்டாள் என 'ஒரு பொருள் நுதலிய' (தொல். செய். 183) என்ற விதிக்கு ஏற்றது. மங்கை முற்றும்.

(கு - ரை) 224. நொய்து - அற்பம். 225. புறஞ்சொல் - அலர் மொழி. அடாமே - பொருந்தாமல். 226. சரியாமே - நழுவாதபடி. புகிலும் - புகும். இல்லும். 272. வள்ளியின் - வள்ளி நாச்சியாரைப் போல.

(உரை) அகத்திணை யின்பம் நயந்த வள்ளி : 'இனி அக்களவிற் புணர்ச்சியை யுடைமையான் வள்ளி சிறந்தவாறும், அத்தமிழை ஆய்ந்த மையான் முருகன் சிறந்தவாறும் கூறுகின்றார்' (பரி. 9 : 16 - 26, பரிமேல்.)

(பி - ம்) 227. 'செல்வாள் பருவ முருகற்கோர்' 2. 'சாயல் வழங்கினாள்'

## மடந்தை

228. பின்ன ரொருத்தி பெருமைக் கரமகளிர்
முன்ன ருரைக்கும் முதன்மையாள்—சென்னியில்

(ப - ரை) முன்னர் வள்ளியிற் சால வயங்கிய ஒள்ளிய ஆபரணத்தை யுடையாள் (227) அதற்குப்பின்னர்ப்பருவமான மடந்தைப் பருவத்தாள் ; அப்பருவத்து மாதரில் ஒப்பிலாள்; உருவானும் திருவானும் நலத்தானும் குலத்தானும் உலகிற் கூறும் பெருமைக்கு அரமகளிர் முன்னர்ச் சென்று தொழும் இந்திராணி போல்வாள் ; இதுமேல் உயர்ந்ததன் மேற்றாக உவமையும் பொருளும் ஒப்பாகக் கூறிற்று.

(கு - ரை) உரை. உரு, திரு, நலன், குலன் : தொல். மெய்ப். 25. உயர்ந்ததன் மேற்று : "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" (தொல். உவம. 3) என்பதும், 'உவமை யெனப்பட்டது உயர்ந்த பொருளாகல் வேண்டும்' என்னும் பேராசிரியர் உரையும் இங்கே அறிதற்பாலன.

229. வண்ட லிடுநாவி வார்குழற்கு மாறுடைந்து
கொண்டல் சொரிமுத்தின் கொண்டையும் - பண்டுவந்

230. தேற்றுப் பணைபணைக்கு மென்றூ ளிரண்டுக்கும்
தோற்றுச் சொரிமுத்தின் சூழ்தொடியும் - ஆற்றற்

231. கலம்புரி செல்வக் கழுத்திற்குத் தோற்ற
வலம்புரி முத்தின் வடமும் - பொலம்பூண்

232. எதிர்க்கு முலைக்கிரிந்த திக்கயக்கோ டிட்ட
கதிர்க்கு நகைமுத்தின் கச்சும் - அதிர்க்கும்

233. அடல்விடு மல்குற் பரவைக் குடைந்து
கடல்விடு முத்தின் கலையும் - உடலிமேல்

234. ஏந்து மினைய விளநிலா விட்டெறிப்பப்
போந்து மறுகு புகுந்தொழிந்தாள் - வேந்தனும்

(ப - ரை) 229-34. உச்சியிலே (228) வண்டலிடும்படி நாவி செறிந்த குழலுக்கு ஒப்புத் தோற்று மேகம் நிறையாகச் சொரிந்த முத்தாற் செய்த தலைக்கோலமும் கொண்டையும், முற்பட்ட பருவத்து வந்து மாறேற்று மூங்கிலானது பணைக்கும் தன்மை தோளுக்கு மிகுதல் கண்டு தோற்றுச்

சொரியும் முத்தாற்செய்த சூழ் தொடியும், ஆபரணங்களுக்கெல்லாம் பிராணனை வலியையுடைய பூண்புனைதல் கண்டு செல்வக் கழுத்துக்குத் தோற்று வலம்புரி நிறையிட்ட முத்தாற் செய்த கட்டுவடமும், பொன் பிதிர்த்தாற் போலும் சுணங்கு பூணுடனே மாறுபாடு படும் முலைக்கு மாறுபாடு கெடத் திக்கயங்களின் கோடுகள் நிறையிட்ட கதிர்த்த ஒளிபொருந்திய முத்தினாற் செய்த கச்சும், கடலரவத்தைத் தனது கலாபத்தாலாகிய இசையாலே அதிர்விக்கும் அல்குலாகிய பரவைக்கு உள்ளுடைந்து மாறுபடுகை விடும் கடல் நிறையாக இட்ட முத்தாற் செய்த மேகலையும் தம்மில் மாறுபட்டு முறிமேனி யுருவின்மேல் ஏந்தும் இத்தன்மையாயின, செக்கர் வானமடுத்த திங்களிற் பிறந்த இளைய நிலாவை விட்டு விளங்கப் பூணணி மண்டபத்தினின்றும் போந்து மறுகிலே புகுந்து பருவக் கைக்கிளையான மெலிதலை மேவி உட்கோள் ஒழிந்தாள். பொருட்கு ஒரு மிகுதி கூறி உவமையைப் பழித்து ஓசை உருவுவமமும் பரிவர்த்தனையும் கூறியுமையும் ஒருபொருள் நுதலியவாறும் காண்க.

(கு - ரை) 229. வண்டல் இடும் நாவி - சேறுகப் பூசிய புழுகு நெய்; நாவி - புழுகு; "நாவியுங் காரகி லாவியுந் தோய்குழல்" (தஞ்சை. 20.) வார்குழல் - நீண்ட கூந்தல். மாறு - ஒப்பு. கொண்டல் - மேகம். இது முதல் 233-ஆம் கண்ணி முடிய் முத்துப் பிறக்குமிடங்களும் அவை தலைவி உறுப்புக்களுக்குத் தோற்றவாறும் கூறப்படும். பண்டு - மங்கைப் பருவத்தில். பணை - மூங்கில். பணைக்கும் - பெருக்கும். முத்தின் தொடி: "முத்திற் புனையுஞ் சிறுதொடிக்கைப் பூவை" (123.) 230-31. ஆற்றற்கலம் - மற்ற ஆபரணங்களுக்கு வன்மையைத் தரும் மங்கலநாண். 232. முத்தின் கச்சு: "நீர்மங்கை கொங்கைக்கு நித்திலக்கச் சொக்குமால்" (சிதம்பரச் செய்யுட் கோவை, 49.) 233. கலை - மேகலை; "திரிந்தாள் கலைநிலையும்" (251.)

உரை. தலைக்கோலம் - சீதேவி யென்னும் ஆபரணம்; முருகு. 23, ந. முத்துக் கொண்டை: 141. பொன் பிதிர்த்தாற் போலும் சுணங்கு என்பது வருவிக்கப்பட்டது. முறிமேனிஉரு - தளிரைப் போன்ற நிறத்தையுடைய உடம்பு. செக்கர் வானமடுத்த திங்கள் என்பது வருவித்துரைக்கப் பட்டது. தலைவியின் உடம்புக்குச் செக்கர் வானமும் முத்தின் ஆபரணங்களுக்குத் திங்களும் அவற்றின் ஒளிக்கு நிலாவும் உவமை. பருவக்கைக் கிளையான மெலிதல்: பு. வெ. 15. உட்கோள் - மங்கைப் பருவத்துக் கைக்கிளை. பொருள் - உபமேயம். ஓசை யுவமம் என்றது அல்குற்குக் கடலை உவமை கூறியது. ஏனையவை உருவுவமம். பரிவர்த்தனை - கொண்டல் முதலியன கொடுத்த முத்துக்கள்.

(பி - ம்) 229. 'தார்குழற்கு' 'தருமுத்தின்' 230. 'தோற்று' 232. 'யானைக்கோ டிட்ட'

235. சட்கோடி மாணிக்க மொன்றுஞ் சமந்தகமும்
உட்கோடு கேயூரத் தூடெறிப்பக்—கொட்கும்

236. கடல்சேப்ப வந்த கவுத்துவ மொன்றும்
அடல்சேக்கு மார்பிற் கமைய—உடலி

237. அனந்த பணுமவுலி யாயிரமு மொற்றை
நனந்தலை மௌலிக்கு நாண—இனங்கொள்

238. முறுகு கதிரின் முகந்திரிய வேற்று
மறுகு திருமலர வந்தான்—குறுகும்

239. நடையாய வெள்ளமும் நாணிரம்பு திங்கட்
குடையாய வெள்ளமுங் கூடி—அடைய

240. மதியுதய மென்று வணங்க வனச
பதியுதய மென்று பணிய—துதியில்

241. ஒருவரு மொவ்வா வுருவமீக் கூறும்
இருவரு மெய்திய வெல்லைத்—தெருவில்

(ப - ரை) 235-41. சோளேசனும், ஆறு கோடியையுடைய, நன்மாணிக் கத்துடன் பொருந்தும் சமந்தக மென்கிற தெய்வமணி ஒளி உள்வளையும்படி கேயூரத்தூடே விளங்க, கடல் வளைந்த எல்லை முற்றும் சிவக்கும்படி பிறந்த கவுத்துவமணி யொன்றுமே வெற்றியைப் பொருந்தச் சிவக்கும் திருமறு மார்பிற்கு மறுவொளி மயங்கப் பொருந்த, அனந்தபணுமௌலிமணி ஆயிரமும் மாறுபட்டு ஏகபணுமவுலியான தொல்லணிக்கு நாணமுற; மாறு படுதல் - ஒளி வேறுபடுதல். இப்படி இனமான ஆபரண ஒளிகண்டு பவனி சேவிக்க வந்த பன்னிரு கதிரும் முகம் மாறி முறுக மாறுபாடு ஏற்று வீதி அழகுபெற வந்தான். மெத்தென்ற நடையையுடைய ஆயவெள்ளமும் நாள் நிரம்பும் திங்கள் போலும் குடையையுடைய அரசவெள்ளமும் இருபாலும் வந்துகூடி இரண்டாய வெள்ளமும் நினையும் நினைவு ஒரு தன்மையை யடையத் தலைவியை மதியுதயம் என்று மதியை வணங்கும் அடைவிலே வணங்கத் தலைவனை வனசபதி உதயமென்று பருதியைப் பணியும் அடை விலே பணியத் துதியுடனே உலகம் உவந்து துதிக்கும் கடவுளரில் ஒருவரும் உவமையில்லா உருவம் இவ்வுருவமென்ன மிகுத்துக் கூறும் உருவம்; இருவரும் காட்சிபெற்ற அக் காலத்திலே.

(கு - ரை) 235. சட்கோடி - ஆறு முனைகளையுடைய. சமந்தகம் : சத்திரா ஜித்து சூரியனை வழிபட்டுப் பெற்ற மணி; **பாகவதம்**. 10. 25 : 3. கேயூரத் தூடு - வாகுவலயத்தில். 236. கடல் சேப்ப வந்த கௌத்துவம் : "செங் கலங்கல் பரந்தெனப் பாற்கடல் சேப்ப வந்த கவுத்துவஞ் சேர்த்தியே" (**தக்க.** 277.) அடல் சேக்கும் - வன்மை தங்கிய. 237. நனந்தலை - பரந்த இடத்தை யுடைய. **உரை.** ஏகபணுமவுலியான தொல்லணி : "பவித்ர விசயப் படைப்பரசு ராமன், கவித்த வபிடேகங் காணீர் - தவித்துலகில், மூவெழுகா லெக்கோக் களையு முடித்தவனி, மூவெழுகாற் கொண்ட முடிபாரீர்" (**இராசராச.** 89-90.) வனசபதி - தாமரைக்கு நாயகனாகிய சூரியன். மதியை

உதயத்தில் வணங்குதல் : " அந்தி யாரண மந்திரத் தன்புட னிவனே, வந்தி யாதவர் மண்ணினும் வானினு மில்லை" (வி. பா. குருகுலச். 6.) சூரியன் வணங்கப் படுதல் : " முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி, ஏமுற விளங்கிய சுடர் " (நற். 283 : 6-7.) தலைவிக்கு மதியும் தலைவனுக்குச் சூரிய னும் உவமை. " மதியமும் ஞாயிறுங் கதிர்விரிந் தோடிக், கடனிற விசும்பி னுடனின் றுங்குப், பைந்தொடிச் சுற்றமொடு தந்தை தலைத்தாள், ஆயத் திடையோள் பாசிழைப் பாவை, யானை மிசையோன் மாமுடிக் குரிசில், இருவரு மவ்வழிப் பருகுவனர் நிகழ " (பெருங் 1. 32 : 22-7); ' வெங்கதிர்க் கனலியும் தண்கதிர் மதியமும் தம்கதி வழுவித் தலைப்பெய்தாற் போலவும் தலைப்பெய்து ' (இறை. 2, உரை.)

(பி - ம்) 236 ' உடலில்' 237. ' பணுமணி', 'பணுமோலி' 238. 'திமிர' 241. 'கூர விருவரும்'

242. நெருங்க மகளிர் நிறந்திறக்க வெய்து
மருங்கு வருகின்ற மாரன்—திருந்திய

(ப - ரை) மகளிர் தெருவிலே ஒருவரை யொருவர் நெருங்கும்படியாக அக நிலைகளிலே குளிப்ப எய்து பக்கம் சேவித்து வருகின்ற மாரன் யாது செய்தான் என்னில்.

(கு - ரை) நிறம் - உயிர்நிலை ; " சிலைமாண் கடுவிசைக் கலைநிறத் தழுத்தி " (குறுந். 272 : 5.)

243. பாய பகட்டல்குல் பாரா வதன்பரப்பிற்
போய மருங்குற் புறநோக்காச்—சாயா

244. முலையின் கதிர்ப்பு முருகு கெழுதோள்
நிலையின் பணைப்பு நினையாக்—கொலையால்

245. உடைக்கு முலகடைய வூடாடு கண்ணின்
கடைக்கு முடிவின்மை காணுக்—கிடைக்கும்

246. பருவக் கொடிவதன பங்கே ருகத்தின்
புருவக்கொடி முடியப் போகா—உருவக்

247. களிக்கும் புடவி சதகோடி கற்பம்
அளிக்கும் பெருமானை யஞ்சா—குளிர்க்கும்

248. கடுங்காற் கொடுந்தேரை முட்டக் கடாவிக்
கொடுங்காற் சிலையைக் குனித்து—நடுங்கா

249. முகுந்த னிவனென்று முன்பெய்த வேவிற்
புகுந்த திதுவென்று போனான்—திகந்த

(ப - ரை) 243-9. இதனுள் பாய பகட்டல்குல் முதல் புருவக்கொடி யளவும் புடவி சதகோடிகற்பம் அளிக்கும் பெருமான் வினையாக்கி மாரன்

அவ்வினைகண்டு அஞ்சித் தேரை முடுகக் கடாவிச் சிலையைக் குனித்தான். முன்பு எய்த ஏவில் புகுந்தது இதுவென்று போனனெனப் பொருளுரைக்க.

முற்பருவம் போலன்றித் திருந்தியவெனப் பரந்துயர்ந்த அல்குலதிசயம் பார்த்துக் காணாத மருங்குலை அல்குலின் பரப்பெல்லை முற்றப் பார்த்து ஆராய்ந்து திருந்தியவாய் இடைகாணாததற்கு அஞ்சாமல் வளரும் முலையின் கதிர்ப்பையும் மணம் கெழுமிய தோள் நின்ற நிலையின் பெருமையையும் உணர்ந்து இதனாலே போயதனை நினைந்து கொலைத் தொழில் திருந்தியவாய் உலகடையக் கொலையாலே உடைக்குமென்று கருதும்படி மகரத்தைப் புறங்கண்டு குமிழுடன் மாறுபட்டு ஊடுலாவு கண்ணின் கடைக்குச் சிறக் கணிப்பு மாறாத் தன்மை கண்டு திருந்திய மடந்தைப்பருவம் கிடைக்கும் வல்லிசாதிக் கொடியினது வதனபங்கேருகத்தின் புருவமாகிய கொடி யானது ஒரு காலின்கண் கண்ணின்கடையை விட்டு மீண்டு போகாதென இடைவிடாமல் அகமும் புறமும் ஒரு தன்மையாகக் கண்டு களிக்கும் பெருமானை, புடவியைச் சதகோடி கற்பமளிக்கும் பெருமானைக் கண்டு அஞ்சி, கண்ணுக்குத் தோற்றா மந்தக்கால்தேரினை வாடைக்காற்றென விரையக் கடாவித் தோன்றாத எல்லையிலே நின்று நிறம்திறக்க எய்ததில் (242) வளைந்த காலையுடைய சிலையைக் குனித்தான்; நாண் இறக்கினான்; அதன் பின்னராக நடுங்கினான். 'இவன் அரசன் அல்லன்; அரவணைச் செல்வனும்; இவள் திருவின் செல்வியாம்; மானிட மகளல்லள்; முன்னர் உமாதேவி காரணமாக வினை செய்து பெற்ற பயன் இது' எனத் தனது வடிவின்மையைச் சுட்டித் தனதிடமே போனான்.

(கு - ரை) 243. அல்குல் முதல் புருவக்கொடி: 178-9ஆம் கண்ணிகளில் இம்முறை மாறிக் கூறப்பட்டுள்ளன. பாய - பரவிய. பகடு - பெருமை. பாரா முதலியன செய்யா என்னும் வாய்பாட்டு எச்சங்கள். 244. கதிர்ப்பு: காமக் களிப்பாலுண்டாகிய மதம். பணைப்பு - பெருத்தல். 245. உடைக்கும்: முற்று. அடைய - முழுவதும். 246. பருவக்கொடி யென்றது மடந் தையை. வதனபங்கேருகம் - முகமாகிய தாமரையை. உருவ - இடை விடாமல். 247. புடவி - உலகம். சதகோடி: பல என்னும் பொருளது; இவ்வாறு வருவதனை 'அனந்தவாசி' என்ப; தக்க. 73, உரை. பெரு மானை அஞ்சாமை: "தேயத்தார், மன்னனை யஞ்சாதே" (209-10.) 248. முட்ட - விரைய. கடாவி - செலுத்தி. கொடுங்கால் - வளைந்த வில்லின் முனை; "வரையன் றொருகா லிருகால் வளைய நிமிர்த்து" (சிறு. 152.) உரை. மகரத்தை.........மாறுபட்டு: "குழைபொருது நீண்டு குமிழ் மேன் மறியா......கருநெடுங்கண் போலுங் கயல்" (தண்டி. 32, மேற்.) சிறக் கணிப்பு - சுருங்குதல்; குறள். 1095. வல்லிசாதிக்கொடி: நெடுநல். 113, ந. அகம் - நெஞ்சு. மந்தக்கால் - தென்றல். அரவணைச் செல்வன் - திருமால். உமாதேவி காரணமாகச் செய்த வினை: சிவபெருமான் உமா தேவியை மணம் செய்துகொள்ளும் பொருட்டு அவர்மீது அம்பு எய்தமை. மன்மதன் தனது வடிவின்மையைச் சுட்டி வருந்திச் சென்றது: "உழந்த யோகத் தொருமுதல் கோபத்தால், இழந்த மேனியு மெண்ணி யிரங்கினான்,

கெழுந்த கைக்கொரு வன்மை கிடைக்குமேல், பழந்து யர்க்குப் பரிவுறும் பான்மையால்" (கம்ப. அயோமுகி. 26.)

(பி - ம்) 242. 'திருந்திழை' 243. 'மருங்குல் புடைநோக்கா' 244. 'பரப்பு முருகெழுதோள் நிற்கும்' 'கொலையின்' 246. 'போதா' 247. 'அஞ் சான் 248. 'கொடித்தேரை' 'குனித்தான்' 249. 'பெய்த வேள்விற்', 'பெய்தவாறே' 'வென்னென்று'

250. முழுதா ளபயனை முகிணகையுந் தோளும்
தொழுதா ளொருதானே தோற்ருள்—அழுதாள்

251. திரிந்தாள் கலைநிலையுஞ் செம்பொற் றுகிலும்
சரிந்தா டுணைவியர்மேற் சாய்ந்தாள்—பரிந்தார்

(ப - ரை) 250-51. இனித் தலைவி நிலை யாதென்னின் திகந்தமுழுதாள் அபயன் நகைபுரிந்தானைக் கருதிப் பவனியிடத்திலே அந்நகையையும் தோளையும் வணங்கினாள். தீரா உயக்கத்தால் தன் பருவக் கைக்கிளைத்திணை தோன்றத் தலைவன் உருவின்றன்மையால் காமன் வினையற்றிருக்கவும் தன்னைத் தானேதோற்ருள்; மெய்ப்பாட்டில் கருணையென்னும் மெய்ப்பாடு தோன்ற அழுதாள் ; கலையும் நிலையும் திரிந்தாள் ; சிவந்த பொற்றுகிலும் சரிந்தாள் ; துணைவியர் தோள்மேற் சாய்ந்தாள் ; முற்பருவத்து வளைத்தும் உளைத்தும் (221) பரிந்த புரிக்குழலார் (261) இப்பருவத்துங் கூடி யாது செய்தாரென்னில்.

(கு - ரை) 251. கலை - மேகலை. நிலை - மனநிலை. உரை. உயக்கம் - வருத்தம். பருவக் கைக்கிளை : இங்கே மெலிதல். கருணையென்னும் மெய்ப் பாடு தோன்ற அழுதல் : 'அழுகையென்பது அவலம் ; அஃது இருவகைப் படும் ; தானே அவலித்தலும் பிறரவலம் கண்டு அவலித்தலும் என ; இவற் றுள் ஒன்று கருணையெனவும் ஒன்று அவலமெனவும் பட்டுச் சுவை ஒன்ப தாகலு முடைய வென்பது' (தொல். மெய்ப். 3, பேர்.)

(பி - ம்) 250. 'ளபயனை மூரனகையும்'

252. முடைக்கை யெதிர்க்குரவை கோத்தாய் முரல்யாழ்
நடைக்கை தொடுக்கை நகையோ—விடைப்பே

253. ரினந்தழுவிப் பின்னையைக் கொள்வா யிவளைத்
தனந்தழுவிக் கொள்கை தவருே—அனந்தம்

254. கருந்துகிலக் கோவியரைக் கொள்வாய் கமலை
தருந்துகி லேக்கத் தகாதோ—விருந்து

255. துளவ முகிற்கிது வந்தது தூய
வளவர் திருக்குலத்து வந்தோ—அளவிறந்த

256. வன்கண் ணிவளளவுங் கண்டே மடவரல்
புன்க ணடியேம் பொறேமென்று—மின்கண்

(ப - ரை) 252-6. 'குரவைக் கூத்துக்குப் பால்முடை நாறும் கோவியர் கையோடு கைகோவை செய்தாய் முன்னம்; அது நகையோ? யாழுடனே எப்பொழுதும் பயிலும் ஒழுக்கத்தினையுடையாள் கையோடு கைகோவை செய்தல் நகையோ? கோவியர் மெல்லியர் அல்லவென்பது விளக்க இனமாக விடையாமவையிற்றின் கோட்டைத் தழுவித், தழுவுதற்குப் பின்னைப் பிராட்டியைக் கொள்வாய் என்று உலகம் கூறுதல் தவறோ? மென்மைக்கு வடிவமான இவள் தனத்தைத் தழுவிக் கோடல் தவறோ? கோவியரைப் பலநாளும் முடைமாசு மூசிய பல கருந்துகிலை நீ விரும்பிக் கோடல் தக்கதோ? இவள் தான் விரும்பித் தரும் துகில் கோடல் தகாதோ? நோக்கித் திருவுள்ளத்துடனே விசாரித்துப் பார்க்க; ஆயினும் புதிது, துளவ மாலையையுடைய முகிலே! உனக்கு மாதரளவில் பராமுகம் வந்தது மீன், ஆமை, பன்றி, விறலரி, விளைவறியாக் கோவரிடத்தன்றி இருமரபுந் தூய வளவர் திருக்குலத்தில் வந்து அவதரித்ததில் வந்ததோ? அளவிறந்த வன்கண்மை மடவரலான இவளளவிலே கண்டேம். அடியோங்கள் இவள் புன்கண் கண்டு பொறேம்; வந்தபடி சொல்வேம்' என்று இவை சொல்லிப் பரிந்தார்.

• (கு - ரை) 252. முடை-பால்முடை; "தடாநிறை வெண்ணெயுந் தயிருங் கொண்டெதிர், அடாமுடை நாறுதோ ளாயர்" (வி. பா. சூதுபோர். 94.) குரவை - கைகோத்து ஆடும் கூத்து. நடைக்கை யென்றது தலைவியின் கையை. விடைப்பேரினம் தழுவியது பாகவதம், 10 : 29-ஆம் அத்தியாயத் தால் அறியப்படும். 253. பின்னை : இவள் பெயர் சத்தியை யென்று பாக வதம் கூறும்; "நிலமகட்குக் கேள்வனு நீணிரைநப் பின்னை, இலவலர்வா யின்னமிர்த மெய்தினு னன்றே" (சீவக. 482.) அனந்தம் - பல. 254. கோவி யர் - ஆய்ச்சியர். கமலையென்றது மடந்தையை; இவளைத் திருவின் செல்வி என்பர். விருந்து - புதுமை. 256. வன்கண் - கொடுமை. புன்கண் - துன் பத்தை. உரை. இருமரபும் தூய வளவர் திருக்குலம்: 'தாயும் தந்தையு மாகிய இருவர் குலத்தையும் உலகத்தார் நன்றென்று மதித்த பலவாய் வேறுபட்ட பழைய குடி' (முருகு. 178, ந.); 'இருமரபுந் தூய மறையோ னுக்கு' (சிலப். 9 : 28-32, அடியார்.)

(பி - ம்) 252. 'முதல் யாழ்' 'கொடுக்கை.' 254. 'கருந்துகில் கோவி யரைக்' 'கோடல்' 'பொருந்து', 'திருந்து' 256. 'புன்கண் தமியோம் பொறோமென்று' 'மன்கண்.'

257. இவையிவை சொல்லிப்போ யின்னமளி யேற்றிக்
கவிரிதழ் பின்னுங் கலங்கத்—துவரின்

(ப - ரை) அதன் பின்னராக ஒருதானே தோற்ற மின்னிடத்துச் சென்று அவளை இனிய அமளியேற்றி உருவினுக்கு உருவம் தானே தோற் றதும் போதாமற் பின்னும் கலக்க மெய்த.

(கு - ரை) கவிரிதழ் - முள்ளு முருங்கையின் பூவைப்போன்ற இதழை யுடைய தலைவி.

258. வியக்குந் துகிரியைய மேம்பட் டுலகை
மயக்குந் திருவாய் மலர்க்கும்—நயக்கும்

259. பொருப்புருவத் தோளின் புதுமைக்கு நேரே
திருப்புருவஞ் செய்த செயற்கும்—பரப்படையச்

260. செங்கே ழெறித்து மறிக்குந் திருநயன
பங்கே ருகஞ்சூழ் படுகொலைக்கும்—அங்கே

261. தரிக்குமே தென்றலுஞ் சந்த்ரோ தயமும்
பரிக்குமே கண்கள் படுமே—புரிக்குழலார்

262. பாலிருத்தி மம்மர் படப்படப் பையப்போய்
மாலிருத்தி யுள்ள மயங்கினாள்—மேலொருத்தி

(ப - ரை) 258-62. புரிக்குழலார் துவர்ப்பு நிறத்தில் உலகம் வியக்கும் பவளத்தைப் பொருந்துதலையுடையவாய் அவ்வுலகை மயக்கஞ் செய்யுந் தன்மையவாய (பகட்டல்குல் திருந்தியதென்னும் உட்கோள் விளக்கும்) திருவாய் மலர்க்கும், தோளும் முலையும் மருங்கின்றி நிற்கும் நிலை உட்கொண்டு பொருப்பினது உருவொத்த தோள் செய்த புதுமைக்கும், கண்ணின் கடைக்கு முடிவின்மைகண்டு திருப்புருவம் செய்த செயற்கும், புருவக்கொடி முடியப் போதாத திருநயன பங்கேருகஞ் சூழ்ந்த படுகொலைக்கும் சென்று தென்றலரசனை வினை செய்யாமல் உயிர் தரிக்குமோ? சந்திரோதயமும் வினை செய்யாமல் உயிர் சுமந்து வாழுமோ? அவை அப்படிச் செய்தாலும் கண்ட கண்களிற் றுயிலுண்டாமே யென்று இவை சொல்லி இருவர்க்கும் உழுவலன்பு உண்டென்னும் தன்மை பதிவித்து மயக்கம் படப்படப் பரிந்தார். படுதல் - உண்டாதல். ஆசையெழ, புரிக்குழலார் பரிந்த வாசகம் பற்றுக்கோடாகத் தெளிந்து இவர் அருகு நின்று மெத்தென எழுந்து, பாயலிடத்துப் போய், தனது நாயகனை மாலை உள்ளத்துக்கொண்டு மயங்கினாளென மெலிதற் கைக்கிளை மற்றப் பவனிகண்டோர் கூறியவாறு காண்க. இவை யிவை என்ற முன்னிலை வினை ஒன்று தலைவன் மேற்று; ஒன்று தலைவி மேற்று.

(கு - ரை) (257) துவர் - செந்நிறம். 259. பொருப்பு - மலை. 260. செய்கேழ் - செந்நிறம். நயன......படுகொலை: "புங்கப் படைவிழிக் கடையிலன் றிவர்புரூஉப், பங்கத் தகிலமும் படுகொலைப் படுவதே" (தக்க. 82.) 261. சந்த்ரோதயம்: "சந்த்ராதவரும் இந்த்ராதியரும்" (தக்க. 183.) 262. மம்மர் - மயக்க நோய். மால் - திருமால். உரை. உழுவலன்பு - எழு பிறப்பினும் தொடர்ந்த அன்பு. முன்னிலை வினையென்றது 252-4ஆம் கண்ணிகளில் உள்ளனவற்றை. அவற்றுள் முன்னது தலைவன் தொழில். பின்னது தலைவியின் தொழில்.

(பி - ம்) 258. 'துகிரினைய' 259. 'பொருப்பவர்மெய்த் தோளிற் புதுமைக்கும் போந்து' 260. 'எறிக்கு முறிக்குங்' 262. 'பைபயப் போய்'

### அரிவை

263. தாளை யரவிந்தச் சாதி தலைவணங்கத்
தோளை யுரகர் தொழவிருப்பாள்—நாளை

264. வளவர் பெருமான் வரும்பவனி யென்று
இளவி விறலியர்வாய்க் கேட்டாள்—அளவுடைத்

(ப - ரை) 263-4. மடந்தைப் பருவத்துக்கு மேற்பருவமான அரிவைப் பருவத்தாளொருத்தி (262) இவள் மக்களுள்ளாளாயினும் திருவின் செல்வி யென்பது தோன்றத் தாளை அரவிந்தச் சாதி தலைவணங்க, தோளை அது கண்டு உரகர் தொழத்தக இருப்பாள்; இது செல்வம் பற்றிய பெருமிதத்தது. மாலை மங்கலம் பாடிய விறலியர் வந்து, 'வளவர் பெருமான் பவனிவரும் நாளை' என்று கூறக் கேட்டாள்.

(கு - ரை) 263. அரவிந்தச் சாதி - தாமரைப் பூவாகிய இனம் முழுவதும். அரிவையின் தோளுக்குப் பாம்பு உவமை. (உரை) செல்வம் பற்றிய பெருமிதம்: செல்வம் உவகை தோன்றுதற்குரிய காரணங்கள் நான்கனுள் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது; தொல். மெய்ப். 11. மாலைமங்கலம் பாடிய விறலியர்: இதனால் காலையில் மங்கலம் பாடுவோர் பாணர் என்பது அறியப்படும்; "நாளீண்டிய நல்லகவர்க்கு", 'விடியற் காலத்தே வந்து திரண்ட அரசர் விரும்பப்பட்ட சூதர்க்கு; இனி வைகறை பாடும் பாணர் என்பாரும் உளர்' (மதுரைக். 223, ந.) என்பதும் இதனை வலியுறுத்தும்.

265. தோரிரா வன்றம்ம விவ்விரா வோதிமத்தோன்
பேரிரா வென்று பிணங்கினாள்—பேரிரா

266. என்று விடியுங்கொ லென்றாள் விடிவளவும்
நின்று சுடுங்கொ னிலவென்றாள்—நின்றார்

(ப - ரை) 265-6. அவர் கிளவி கேட்டுக் கலக்கமென்னும் மெய்ப்பாடு நிகழ இரவுநீடு பருவர லொழுக்கத்தினளாய் உழையர் கேட்ப, 'கேளீர்! இவ்விரவு முன்போன இராவின் அளவை உடைத்தன்று (264); இஃது இறைக்கு ஓதிமத்தோன் பேரிராவின் அளவை யுடைத்து' என்று வெறுத்தாள். 'இப்பேரிரா என்று காண் விடிவது' என்று ஐயுற்றாள்; 'இவ்விரவு விடியுமளவும் நாடோறும் இரண்டு நாழிகை நிறைவு குறைவான தன்மையொழிந்து நிலவு நிலைநின்று சுடும்போலே இருந்தது' என்றாள்; இம் மூவகையும் கலக்க மெய்ப்பாடு.

(கு - ரை) 265. ஓதிமத்தோன் இரா: "மூல மாமலர் முன்னவன் முற்றுறும், கால மாமெனக் கங்குல் கழிந்ததே" (கம்ப. அயோமுகி. 27.) ஓதிமத்தோன் - அன்ன வாகனத்தையுடைய பிரமதேவன். (உரை) இரவு நீடுபருவரல் - இராப்பொழுது நீடுதலாலுண்டான துன்பம்; பு. வெ. 301. கலக்கமென்னும் மெய்ப்பாடு: 'கலக்கமென்பது சொல்லத்தகாதன

சொல்லுதல்' (தொல். மெய்ப். 22, பேர்.) நாடோறும் இரண்டு நாழிகை நிறைதல் வளர்பிறையிலும், குறைதல் தேய்பிறையிலும் நிகழும். இம்மூவகையும் என்றது இரவு நீடுதலும், என்று விடியுமென்றலும், நிலாச்சுடும் என்பதுமாகிய மூன்றையும்.

(பி - ம்) 265 'அளவிறந்த, தோரிரா' 'அளவுடையதோரிரா' 266. சுடுமே' 'நன்ருய்'

267. அடுத்தடுத் தேந்திய திவ்யா பரணம்
எடுத்தெடுத் தொப்பித் தெழுந்து—சுடர்க்கதிரோன்
268. மாலைப் பகைவியைப் போக்கி வருவித்த
காலைத் துணைவியைக் கண்டெழுந்தாள்—காலையோன்

(ப - ரை) 267-8. இவள் கலக்கங் கண்டு கதிரோன் தலைவனது மரபோனுதலின் அவள் மெலிவொடு வைகல் அமையாதெனக் கருதி இவளுக்கு மாலையாகிய பகைவியைப்போக்கித் தனது துணையான காலையை வருவிக்க அவளைத் துணைவியாகக் கண்டு எழுந்தாள். அற்றைப் பணி முறைக்கு நின்ருர் (266) திவ்வியாபரணங்களைக் கொண்டுவந்து நிற்ப அவற்றிலே தனக்கு அணிதற்கெடுத்தவை எடுத்துப் புனைந்து அவ்விடத்தை விட்டுப் போந்து.

(கு - ரை) 267. ஒப்பித்து - அலங்கரித்துக்கொண்டு. கதிரோன் - சூரியன். 268. மாலைப் பகைவி - இராப்பொழுதாகிய விரோதியை; பகைவி - பகைவன் என்பதன் பெண்பால். 'மாலையைப் பகைவி' யென்றது, "காதல ரில்வழி மாலை கொலைக்களத், தேதிலர் போல வரும்" (குறள், 1224) என்பது பற்றி. (உரை.) மெலிவொடு வைகல் - தளர்ச்சியொடு தங்குதல்; பு. வெ. 298. அற்றைப் பணிமுறைக்கு நின்ருர் என்பதனல் நாடோறும் வெவ்வேறு மகளிர் பணி செய்வாரென்பது அறியப்படும்.

(பி - ம்) 267. 'அடுத்தடுத் தீந்தன' 'சுடர்ப்ரபையோன்', 'சுடர்ப்பகலோன்' 268. 'வருகின்ற'

269. சேமித்த பூங்கோயி லெல்லாந் திருவென்று
காமித் திதழின் கடைதிறப்ப—நேமி
270. மணக்கத் துணையன்றில் வாயலகு வாங்கித்
தணக்கக் கடிகாவிற் சார்ந்தாள்—கணக்கதிர்

(ப - ரை) 269-70. காலையோன் (268) மாலைக்காலத்துச் சேமித்த பூங்கோயிலெல்லாம் தாமரை; வினை, பயன், மெய், உரு எல்லாம் திருவென்று காமித்தலையுற்று இதழினலே அடைத்த வாசல் திறப்ப; ஈது வினையில் பொருட்கண் மனஅறிவுவமத்தால் பொருளே உவமஞ் செய்தல். இரவிற் கூடப் பெருது தன்போல் வருந்திய நேமிப்புள்ளானது பேடையுடனே மணஞ் செய்ய இரவு மணப்பதும் புலர்ந்ததும் கூப்பிடுவதுமான அன்றில் வாயிடத்து அலகுவாங்கி இரைமேற் பிரிய மணம் பொருந்திய காவிற் புகுந்தாள்.

(கு - ரை) 269. பூங்கோயில் - தாமரை. காமித்து - விருப்பமுற்று. நேமி - சக்கரவாகப் பறவை. 270. அன்றில் அலகோடலகு சேர்த்து இரவில் துயிலும்; "எனைப்பார்ப்ப ரன்றி லலகோ டலகுற் றிடுங்கலவி, தனைப் பார்ப்பர்" (மதுரைக் கோவை, 151.) (உரை) மனஅறிவு உவமம்: தொல். உவம. 1, இளம். பொருளே உவமஞ் செய்தல்: அரிவைப் பருவத் தலைவியைத் திருமகளாகக் கூறியது: "பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினும், மருளறு சிறப்பினஃ துவம மாகும்" (தொல். உவம. 9.)

(பி - ம்) 269. 'காமத்திதழின்' 270. 'தணப்பக் கடிகாவுட்'

271. வந்து பொருவதொரு மாணிக்கச் செய்குன்றில்
இந்து சிலாதலத்தி லேறினாள்—குந்திக்

(ப - ரை) பல கதிர் (270) கூடி வளைந்துகொண்டு மலையரண் அழித்தற்குப் பற்றியேறும் தன்மைபோலக் கிரணங்களை விடாநின்ற மாணிக்கப் பாறையாற் செய்த செய்குன்றிடத்தினது பக்கத்தில் சந்திரகாந்தச் சிலையாற் செய்த நிலாமுற்றத்திற் சென்று ஏறினாள். அந்தச் செய்குன்றில் வளரும் மான் முதலிய நிலாவால் என்செய்த வென்று அறியவும், தனது வெம்மை மாற்றவும் போலும் என மெலிவொடு வைகலொழுக்கம் இரவு நீடு பருவரலாற் கைம்மிக அதற்கு ஆற்றலளாய் இந்து சிலாதலத்தில் ஏறினாள்.

எழுந்திருந்து (268) ஒப்பித்த இடத்தினின்றும் எழுந்து (267) கடிகாவிற் புகுந்து (270) இந்து சிலாதலத்தி லேறினாள் (271) எனக் கூட்டுக.

(கு - ரை) கணக்கதிர் - கூட்டமான கிரணம். பொருவது - போர் செய்வது. இந்து சிலாதலம் - சந்திரகாந்தக் கல்லாற் செய்யப்பட்ட நிலா முற்றம். (உரை) செய்குன்றில் மான் முதலியன இருத்தல்: "மென்றினைப் பிறங்கலும் மிளிர்ந்து வீழ ருவியும், குன்ற யன்ம ணிச்சுனைக் குவளை கண் விழிப்பவும், நின்று நோக்கும் மான்பிணை நீல யானை மன்னவன், கன்று காமம் வெஃகிய காமர் காம பூமியே" (சீவக. 148); 'இவற்றைச் சித்திர மெனிற் கோயிற்கு அங்கமாகிய செய்குன்று கூறிற்றிலராவர்' (சீவக. 148, ந.); (பெருங். 1. 46 : 265-285.)

(பி - ம்) 'பொருததொரு' 'குந்தம்'

272. கடப்பன கன்னிமா னேக்கியு மன்னம்
நடப்பன பார்த்து நயந்தும்—தொடக்கிக்
273. களிக்கு மயிற்குலங் கூத்தாடக் கண்டும்
கிளிக்குலம் பாட்டெடுப்பக் கேட்டும்—பளிக்குருவப்
274. பாவை மணக்கோலம் பார்த்தும் பலநகை
பூவை பகரப் புறஞ்சாய்த்தும்—கோவை
275. அளிக்களி யாட்ட மயர்ந்துங் கபோத
விளிக்களி கூர்ந்து வியந்தும்—களிக்கப்
276. பழிச்சி வணங்கிப் பெருமாள் பவனி
எழுச்சி முரசோர்ந் திருந்தாள்—கழற்செழியர்

(ப - ரை) 272-6. ஆயவெள்ளமும் தலைவியும் வருவதுகண்டு மருண்டு குதித்தலைக்கொண்டு கடப்பனவான இளைய மானினத்தை நோக்கியும், அன்னமும் சேவலும் தம்மிற் பிரணயகலகம் தொடக்கி நடத்துவனபார்த்து நயப்புற்றும், இன்பச் செவ்வி பெற்றுத் தம்மிற் களிக்கும் மயிலினங்கள் ஆடும் கூத்தாடல் கண்டும், ஆடற்கு இசையக் கிளிக்குலம் பாடல் எடுப்பன கேட்டும், பளிக்குச்சுவரில் உருவாகத் திறந்து செய்த பாவைக்கு மணக் கோலமான காரணபேதம் பார்த்தும், பலவாகப் பூவையும் சேவலும் நகைத்த மொழிகூற அதற்கு உழையர் முகம்பாராமல் புறத்திலே முகஞ் சாய்த்தும், வண்டு மதுவுண்டு தம்மில் மயங்கிக் கோவை செய்யும் களியாட்டம் கண்டு விரும்பியும், அதற்கேற்பக் கபோதப் பேடும் சேவலும் தம்மிலே விளிக்கும் தன்மை கண்டு வியந்தும், இவை களிப்பக் கண்டும் எம்மைப் போல மெலிவொடு வைகாது சுகமே இருப்பீராக வென்று வாழ்த்தித் தளர்ந்து, முரசொலி ஓர்ந்திருப்பாளான எல்லையிலே பெருமாள் பவனி யெழுச்சி முரசொலி விளங்க.

(கு - ரை) 272. தொடக்கி நடப்பன என்க. 274. பூவை - நாகண வாய்ப்புள். 275. கபோதவிளி - புறாக்களின் குரல். 276. பழிச்சி - வாழ்த்தி. பவனியெழுச்சி முரசு: "மேதினியில், ஊன்று கலிகடிந்த வுத்துங்க துங்கன்றன், மூன்று முரசு முழங்குதலும்", "யாம முரசா விழந்த நிறைநினது, தாம முரசு தரப் பெற்றேன்" (விக்கிரம. 120-21,294) செழியர் - பாண்டியர். (உரை) பிரணய கலகம் - ஊடல். மணக்கோலப் பாவை: 284. பூவை நகைத்த மொழி கூறல்: 'பூவைக்குப் பிறரை நகுவித்தலே பொருள்' (124, உரை.)

(பி - ம்) 273. 'கண்டு' 274. 'பலகாதை', 'பலவகைப்' 275. 'அளிக்கள வாட்டம்' 'கூர்த்தும் வியந்தும்' 'களிப்பப்' 276. 'கழற்செழியன்'

277. தென்சங்கங் கொண்டான் றிருச்சங்கஞ் செய்குன்றில்
தன்சங்க மாகி யெதிர்தழங்க—மின்சங்கம்
278. போல விழுந்து மெழுந்தும் புடையாயம்
கோல மறுகு குறுகுவாள்—ஞாலம்

(ப - ரை) 277-8. வீரக் கழற்காற் செழியர் (276) தென்மதுரையை யழித்துச் சங்கத் தமிழைக் கொண்டான் திருமுன்பு முழங்கும் சங்கம் செய்குன்றின்கண் எதிரொலியாலே தனது முன்பு முழங்கும் சங்கமாக அதனெதிர் தழங்க மின்னின் திரள்போல உடனெழுந்து தம் இனம் நெருங்க விழுந்தும் எழுந்தும் ஆயவெள்ளம் புறஞ்சூழ மறுகிடம் குறுகுவாளாயினள். முன்னர் அவலச்சுவை மாற மான் முதலாயவற்றினது விளையாடல் கண்டு விளையாடற் பொருளாகிய உவகை மெய்ப்பாடு நிகழ, சங்கம் முழங்க, 'என்பேறு பெறுது ஒழிவீர்' என்று அவைமிற்றுக்கு அருள் செய்து கோல மறுகு குறுகுவாளாயினள் எனக் கூட்டுக.

(கு - ரை) 277. செய்குன்று: 271. மின்சங்கம் - மின்னலின் தொகுதி. உரை. அவலச் சுவையை உவகை மாற்றியது: 'வீரத்தாற் காமம் கெட்டு

தென்று இரண்டன் சிறப்புங் கூறினர்' (சீவக. 758, ந.) "காமன், தன்றி றத்தையுங் கடந்தது சீற்றத்தின் றகைமை", "சீற்றமென் றென்று தானே மேனிமிர் செலவிற் றாகித், தோற்றிய துன்ப நோயை யுள்ளுறத் துரந்த தம்மா" (கம்ப. நிந்தனைப். 60, பாசப். 23.) மான் முதலாயின செய்குன்றில் உள்ளவை. விளையாடற் பொருளாகிய உவகை: "செல்வம் புலனே புணர்வு விளையாட்டென், றல்ல னீத்த வுவகை நான்கே" (தொல். மெய்ப். 11.)

(பி - ம்) 277. 'முன்சங்க மாகி முழங்குதலும்' 278. 'புடையாகும்'

279, எடுக்கும் பணிமன்னன் மின்னென் றிறைஞ்சிக்
கொடுக்குஞ் சுடிகைக் குதம்பை—கடுக்கும்
280. மயில்வேண்டுஞ் சாயல் வதனும் புயத்து
வெயில்வேண்ட வேண்டி விளைப்ப—பயில்கதிர்

(ப - ரை) 279-80. எடுத்தெடுத்து ஒப்பித்த ஆபரணமும் (267) இன்ன ஆபரணமும் என்று கூறுமை இஞ்ஞாலத்தைத் (728) தலையாலே சுமக்கும் நாகராசன் நமது பாரத்தைத் தோளாற் பரிக்கும் சோழேசனுக்குத் தோட்டு ஸியான மின்னென்றிறைஞ்சி முன்கொடுத்த சிகாமணி குண்டலம் வதன தாமரையிடத்து இளவெயிலை ஆக்கும்படி வேண்டுமளவாக இருபுறத்தும் அசையுந்தோறும் விருப்பமுற விளைப்பவெனச் சினையொடு சினையுவமத்தால் உருவுவமம் கூறிற்று. ஞாலத்தை முடிமேலெடுக்கும் பணிமன்னனை சேடன் நம் உயிர் இறுதிசெய்யும் மின்னென்று இறைஞ்சி வணங்கித் தன் சுடிகைமணியாற் செய்து கொடுக்கும் குண்டலமணி ஒளிமுகத்துப் பாடஞ் செய்தல் என்போலும் என்னில் மயில் விரும்பும் சாயலையுடையாள் தனது முகத்தாமரை விளக்கம் பெறக் கிரணம் விடுகவென்று வெயிலை விரும்பி மிகாமே குறையாமே பாலாதப கிரணம் கொடுப்பது போலுமென முதலொடு முதலாகச் சாயல் மயிலும் ஆதபனுமாகப் பொருளே உவமஞ்செய்தும் அதனைவினையில் பொருட்கண் வினையுவமமாக்கியும் உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டுமென்னும் விதிக்கேற்பச் சினையும் சினையும் உவமித்தும் தலைவன் வனசபதியாகலின் மிக்க தலையளிக்கு ஆற்றுளென அறிந்துஅருள் செய்தல் போலும். தலைவன் அருள் பெற்ற தலைவிக்கும் இன்பத்தால் ஆராமை மீதூரவின் உட்கோள், மெலிதல், மெலிவொடு வைகல், காண்டல் விரும்பல், பகல் முனிவுரைத்தல், இரவுநீடு பருவரல், கனவின் அரற்றல் என ஆசைக்கு அவதி நிகழ்தலின் தலைவனது விருப்பம் அமையாமை 'மெலிவொடு வைகல் எனவும் உள்ளுறையுவமம் ஆயிற்று.

(கு - ரை) 279. பணிமன்னன் - ஆதிசேடன். பாம்பு மின்னலுக்கு அஞ்சும்; "மின்னலையர் வுறும்வாளர வெனவெய்துற லுற்றான்" (கம்ப. பரசுராமப். 24.) குதம்பை - மகளிர் காதணி. 280. மயில்வேண்டும் சாயல் - மயிலும் விரும்பத்தக்க மென்மை. வதனும்புயத்து - முகமாகிய தாமரையில். (உறை) சோழன் ஆதிசேடனுடைய பாரத்தைப் பரித்தல்: "கறைவிட்டு, மைஞ்ஞாக மெட்டும் மதநாக மோரெட்டும், பைஞ்ஞாக மெட்டும் பரங்

திர ” (33-4.) தோட்டுணையான மின் என்றது அரிவையை. சினையொடு சினையுவமம் என்றது ஆதிசேடனுடைய சுடிகைமணியை அரிவையின் குதம்பைக்கு உவமையாகக் கூறியதுபற்றி. உருவுவமம் - நிறம் பற்றிய வுவமம். பாடஞ்செய்தல் - ஒளிவிடுதல் ; “ பல்லா யிரமா மணிபாடமுறும் ” (கம்ப. சரபங்கர். 11.) முதலொடு முதலாக உவமஞ் செய்தல் : “ முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கும், நுதலிய மரபி னுரியவை யுரிய ” (தொல். உவம. 6.) பொருள் - உபமேயம். உவமையும் பொருளும் ஒத்தல் : தொல். உவம. 8. வனசபதி - சூரியன். ஆராமை - தெவிட்டாமை. உட்கோள் முதலியன முன்னர்ப் பருவங்களில் நிகழ்ந்த கைக்கிளைப் பொருள்கள். உட்கோள்......கனவினரற்றல் : பு. வெ. 15. அவதி - எல்லை.

(பி - ம்) 280. ‘ வெயில்வேண்டி வேண்ட ’ ‘ பயில்கதிரால் ’

281. வெல்லாது தோட்சுடிகை மேகா ளகவிருண்மேல்
எல்லாப் பருதியும் போலெறிப்ப—கொல்குயத்து

(ப - ரை) இப்பொழுது பயின்றுபோதும் கதிர் (280) வெல்லாதெனத் தோளெடுக்கும் பாப்புத்தொடிச் சுடிகைமணி மேகஅளகம் இடமான விருளையாம் ஒரு தன்மையாக எழுந்து அழிக்கவேண்டுமென்று எழுதல் போலும். பாப்புத்தொடிச் சுடிகைப் பன்மணி ஒளியெறிப்பவென்றது பெருமையும் சிறுமையும் சிறப்பிற்றீராமற் சினையுவமித்தது.

(கு - ரை) உரை. பாப்புத்தொடி - பாம்பின் வடிவமாகச் செய்யப்பட்ட தோள்வளை. மேக அளகம் - மேகத்தைப்போன்ற கூந்தல். எல்லாப் பருதியுமென்றது ஊழிக்காலத்தே தோன்றும் துவாதசாதித்தரையும். பெருமையும்......உவமித்தது : “ பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக், குறிப்பின் வருஉம் நெறிப்பா டுடைய ” (தொல். உவம, 10.) தொடியிலுள்ள மணிக்குச் சூரியனை உவமை கூறியது இறப்ப உயர்ந்த வுவமையாகும் ; ஆயினும் கேட்போர் மனங்கொள்ளுமாற்றான் வருதலையுடையதென்பது கருத்து. (பி - ம்) ‘ வெல்லா தொடிச் சுடிகை ’

282. வீழ்சோதி சூழ்கச்சு மேரு கிரிச்சிகரம்
சூழ்சோதிச் சக்ரந் தொலைவிப்பக்—கேழொளிய

(ப - ரை) கொலையிணையுடைய குயத்துக் கச்சும் (281) முகமணியும் சூழ்பன்மணியும் விடுகிற சோதியும், அந்த வமயத்து மேருகிரிச் சிகரம் சூழும் கோளும் ஒப்புத் தொலைவிப்பன எனப் பருதிக்கோளையும் நின்ற பல்கோளையும் உவமித்துச் சிறியதும் பெரியதும் சிறப்பில் தீராமல் சினையடுத்த பொருளான முகமணியையும் பன்மணியையும் இல்பொருளுவமங்கொண்டு உவமித்தது. பருதி வீழ்காலத்துச் சிலகோள் ஒழிந்து எல்லாக் கோளும் விளங்காமையின் உவமையைப் பழித்துப் பொருளை உயர்த்தது.

(கு - ரை) சோதிச்சக்ரம் - நட்சத்திரதாரகாகணங்களைக் கோத்து நிற்பதொரு மகாசோதி மண்டலம் ; தக்க. 254, உரை. கேழொளிய - மிக்க

ஒளியையுடைய. (உரை.) முகமணி என்றது கச்சிலுள்ள நாயகமணியை. உவமையைப் பழித்துப் பொருளை உயர்த்ததென்றது சூரியனையும் ஏனைய கோள்களையும் கச்சிலுள்ள முகமணியும் அதனைச் சூழ்ந்த பன்மணியும் விடுகின்ற சோதியால் வென்றன என்பதுபற்றி.

(பி - ம்) 'சூழ்கச்சை' 'கேழினிய'

283. பைம்பொற் கடிதடஞ்சூழ் மேகலை பார்சூழ்ந்த
செம்பொற் றிகிரி யெனத்திகழ—அம்பொற்

(ப - ரை) நிறக்கும் சிவந்த செம்பொன்னாற் செய்த மேகலைக் கடிதடம் பசும்பொன்னாற் சிறந்த சக்கரவாளகிரி சூழ்ந்த பாரென விளங்க; இது சினையொடு முதலை உவமித்தது.

(கு - ரை) பைம்பொன் மேகலைசூழ் கடிதடம் எனவும், செம்பொற் றிகிரி சூழ்ந்த பார் எனவும் மாறிக் கூட்டுக; திகிரி - மலை. கடிதடத்துக்குப் பூமியும் அதனைச் சூழ்ந்த மேகலைக்குச் சக்கரவாளகிரியும் உவமைகள். சினை : கடிதடம். முதல் : பூமி. சக்கரவாளம் பொன்னிறமுடையது; "பொன்னேமி யளவுந் தன்னேமி நடப்ப" (முதற் குலோத்துங்கன் மெய்க் கீர்த்தி.) பொன் - பொலிவு.

(பி - ம்) 'அம்பொற்கடி' 'யாரஞ் சூழ்ந்த', 'யார் சூழ்ந்த', 'யாழி சூழ்' 'பாரஞ் சூழ்ந்த'

284. புறவுஞ் சகோரமும் பூவையு மானும்
பிறவு மினமென்று பெட்ப—உறவாய்

285. அடர்ந்த பொலன்கே ழடிச்சிலம்புக் கன்னம்
தொடர்ந்து மறுமாற்றஞ் சொல்ல—நடந்துபோய்

(ப - ரை) 284-5. அழகும் பொலிவுமுடைய (283) புறவும் சகோரப் புள்ளும் பூவையும் மானும் மணக்கோலப் பாவை யொழிந்த பிறவும் தம் இனமென்று உடன்வருதலை விரும்ப; தமக்குப் பகையென்று கருதாது உறவென்று தொடர்ந்துபோய் அடியிற் சிலம்பரற்றுந்தோறும் அன்னமானது எதிர்மொழிகூற; ஓசையுவமம்.

(கு - ரை) 284. பெட்ப என்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. 285. சிலம்பின் ஓசைக்கு அன்னத்தின் குரல் உவமை: "மின்னார் சிலம்பிற் சிலம்புங் குரலன்னம்" (சீவக. 2890) என்பதனையும் அதன் அடிக்குறிப்பினையும் பார்க்க. மணக்கோலப்பாவை: 274. உரை. ஓசையுவமம் என்றது சிலம்பின் ஓசைக்கு அன்னத்தின் குரலை உவமை கூறியதுபற்றி

(பி - ம்) 285. 'அடைந்து பொலங்கேழ்'

286. மானவற்குப் புக்கதுறை வல்லவற்கு வில்லவற்கு
மீனவற்குச் சென்று வெளிப்பட்டாள்—தானே

(ப - ரை) நடந்துபோய் மெலிவொடு வைகிய தன்மை தோன்ற மீன வற்குச் சென்று வெளிப்பட்டாள், நாணம் முதலிய நாற்குணங்களும் அற்ற போகத் தானே என்க.

(கு - ரை) மானவன் - மானத்தை யுடையவன்; "அறனிழுக்கா, மான முடைய தரசு" (குறள். 384.) புக்கதுறைவல்லவன் - தான் கற்கப் புக்க கல்வித் துறைகளிலெல்லாம் வல்லவன். வில்லவன் - *சேரன். மீனவன் - பாண்டியன்; என்று இங்ஙனம் கூறியது இவன் சேரநாட்டை யும் பாண்டிய நாட்டையும் ஆண்டமைபற்றி. (உரை.) அறைபோக - கீழறுப்போக; "அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து" (சிலப். 20 : 25.) தானே என்பதற்கு இங்கு எழுதிய உரையோடு, "விளிநிலை கொள்ளா டமியண் மென்மெல" (அகநா. 5 : 2.) என்பதற்கு, 'தமியள் - நாண் முதலான குணங்கள் ஒழியத் தானே யாதல்' என்றெழுதிய உரை ஒப்பிடற் குரியது.

(பி - ம்) 'வானவர்க்கும்' 'வல்லவர்க்கும்' 'மீனவர்க்கும்'

287\. அலரு முகமுங் குவிகையு மாகி
மலரு முகுளமு மானப்—பலர்காணத்
288\. தேனு மமுதுங் கலந்தனைய தீங்கிளவி
மானு மடைய மனங்கொடுத்தாள்—கோனும்
289\. தடாதே தடுத்தாளைத் தன்கடைக்கண் சாத்தி
விடாதே களிறகல விட்டான்—படாமுலைமேல்

(ப - ரை) 287-9. அரசனும் முன்புபோல உழையரைக்கொண்டு தடாதே தனது மெலிவுகாட்டித் தடுத்தாளைத் தனதருளை விளக்கும் கடைக்க ணருளைச் சாத்தி அதனைத் திளைத்து அமைதி பெறவிடாதே விரையக் களிற்றை அகலவிட்டான்.

(கு - ரை) 287. அலர்ந்த முகத்திற்கு மலரும் குவித்த கைக்கு முகுள மும் உவமை; முகுளம் - அரும்பு. தீங்கிளவி மானும் - இனிய சொற்களை யுடைய மான்போன்ற தலைவியும். அடைய - முழுவதும். படாமுலை-சாயாத முலையெனினுமாம்.

(பி - ம்) 287. 'பலர்காணும்'

290\. ஒத்திலங்கு வோர்வந் துறைப்ப நறைக்கழுத்து
நித்திலங்கால் சங்க நிதிநிகர்த்தாள் - எத்திசையும்
291\. சோர்கின்ற சூழ்தொடிக்கைச் செம்பொற் றொடிவலயம்
நேர்கின்ற பற்ப நிதிநிகர்த்தாள் - தேரின்
292\. அரிவை துகிலெனகிழ வல்கு லரவின்
உரிவை விடும்படமு மொத்தாள் - சொரிதளிர்
293\. மாங்கொம்ப ரென்ன வருவாள் சுரமரப்
பூங்கொம்ப ரென்னப் புறங்கொடுத்தாள்—பாங்கியரும்

(ப - ரை) 290-93. அருளாணுகிக் களிறு அகலவிடுதற்குக் காரணம் யாதெனக் கருதிய அச்சக்குறிப்புத் தோன்ற முகபடாம் அணிந்த மூலேமீதே (289) கழுத்தின் கணவேர் வந்து உறைப்ப நித்திலத்தை ஈனும் சங்கநிதியை நிகர்த்தாள். மருட்கை மெய்ப்பாடு நிகழ எத்திசையும் விலைநோக்கின்ற மாணிக்கத்தொடி கையினின்றும் சொரிகின்ற பொழுதின் மாணிக்கச் செம் பொற்றொடி வழங்கும் பதுமநிதியை நிகர்த்தாள். விசாரிக்குமளவில் அரிவை துகில்நெகிழ அல்குல் தோல்விடும் அரவினது படமொத்தாள். தளிரைச் சொரிதலையுடைய மாங்கொம்பரென்ன மறுகில் வருவாளாண வள் முதுவேனிற்பாலேயில் பூங்கொம்பரென்னப் புறங்கூறுமதற்கு இடங் கொடுத்தாள். இதனுள் வினை, பயன், மெய், உரு என்னும் நான்கு உவமை யும் வந்தவாறு காண்க.

(கு - ரை) 290. வேர் - வியர்வை. உறைப்ப - துளிக்க. நறைக் கழுத்து - புழுகு பூசிய கழுத்து; "கண்டத்தி னவியார்" (சீவக. 1434.) நித்திலம் - முத்து. வேர்வைக்கு முத்தும் கழுத்துக்குச் சங்கநிதியும் உவமை. 291. கைக்குப் பதுமநிதி உவமை: "செந்நெ லார்வயற் கட்டசெந் தாமரை, முன்னர் நந்துமிழ் முத்தஞ் சொரிந்திடத், துன்னு மள்ளர்கைம் மேற்கொண்டு தோன்றுவார், மன்னு பங்கய மாநிதி போன்றுளார்" (பெரிய. அரிவாட்டாய. 2.) 292. உரிவை - உரித்தல். சுரம் - பாலைநிலம். (உரை) அச்சக் குறிப்பு; இறை பற்றிப் பிறந்தது: தொல். மெய்ப். 8; பெண்பாலுக்கு உரிய இயல்பான அச்சமுமாம்; அச்சம் - அன்பு காரணத் தால் தோன்றிய உட்கு; தொல். களவு. 8, ந. மருட்கை மெய்ப்பாடு புதுமை பற்றித் தோன்றியது. வினை, பயன், மெய், உரு என்பவற்றை சங்க நிதி, பதுமநிதி, அரவின்படம், சுரமரம் என்பவற்றிற்கு முறையே கொள்க.

(பி - ம்) 290. 'ஒத்திலங்க' 'உறைக்க', 'உரைக்கும்' 291. 'சேர்கின்ற' 'பைம்பொற் சுடர்வலயம்' 292. 'ஆடலரவின்' 'விடு படமும்' 293. 'பாங்கியும்'

294. ஒற்றை யுடைவா ளொருபுடையாள் கொற்றவையேல்
மற்றை யருகிவளை வைத்திலனே - பெற்றுடைய
295. வாரத் தரணியாள் வாழ்தோ ளெதிர்மற்றை
ஆரத் திருத்தோ ளளித்திலனே — நேரொத்த
196. பூந்தா மரையா ளெதிரேயிப் பொற்றொடிக்கும்
ஏந்தார மார்ப மிசைந்திலனே - வேந்தர்கோன்

(ப -ரை) 294 - 6. அடையத் தனதாகப் பொரவந்தாளொருத்திக்கு இராசராசனவன் ஒப்பற்ற உடைவாளப்பாகத்திலே கொற்றவையே குடியிருந்தால் மற்றைப் புறத்திலே இவளை வைக்கலாமே! அது செய்தி லன்; மண வாரத்தைப் பெற்றுடைய தரணியாள் வாழும் தோளுக்கு எதிரான ஆரத்திருத்தோள் அளிக்கலாம்! அது செய்திலன்; இவளுக்கு

இம்மயக்கப் பருவத்துக்கு ஒப்புக் கூறலான பூந்தாமரையாளெதிரே அவ ளிருப்பிடமான மார்பையொழிய அப்புறத்து ஆரமேந்திய மார்பம் கொடுத் தற்கிசையலாமே! அது செய்திலன்; விரும்பி வந்தோர்க்குக் கொடுக்க இடமுண்டாயிருக்க வேந்தர்கோனுயிருந்தும் கொடாமற் போமது போதுமோ என்று.

(கு - ரை) 294. உடைவாளில் கொற்றவை இருத்தல்: "அருங் கொற்ற மாக்கு மணங்கி னுடனே, மருங்கிற் றிருவுடைவாள் வாய்ப்ப" (விக்கிரம. 49.) கொற்றவை - துர்க்கை. 295. வாரம் - அன்பு. தரணி யாள் - பூமி தேவி. ஆர்த்திருத்தோள் - ஆத்திமாலையை யணிந்த தோள். பூந்தாமரையாள் - திருமகள்; அரசர் மார்பில் திருமகள் இருப்பதாகக் கூறுதல்: "மாமறுத்த மலர்மார்பு" (புறநா. 7 : 5.) 296. வேந்தர் கோன் - சக்கரவர்த்தி. (உரை) அடைய - முழுவதும். போதுமோ - தக்கதோ.

(பி - ம்) 294. 'வைத்திலன்' 295. 'அளித்திலன்' 296. 'இசைந் திலன்'

297. அன்னங்கா ணீர்சென் றரற்றீர் கபோதங்காள்
இன்ன மபயம்புக் கெய்திடீர் - நன்னுதற்
298. பாவைகாள் கொல்யானைப் பாவடிக் கீழ்ப்பணியீர்
பூவைகாள் செங்கோன்மை போற்றிசெய்யீர் - [தாவிப்போய்ப்
299. பேதை மடமான் பிணைகாள் வளைத்துளையீர்
கோதை மதுகரங்காள் கூப்பிடீர் - யாதெல்லை
300. என்று விதற்கென் றிரங்கி யிலங்கிழை
தன்றார்வ மாற்றெதிர் சாற்றினார்—பின்னர்ப்

(ப- ரை) 297 - 300. அன்னங்காள்! நீர் சென்று அரற்றீர். கபோதங்காள்! முன்னே உம்மை அறிவன்; இன்னமும் சென்று அபயம் புக்கு எய்திடீர். நறிய நுதலினையுடைய பாவைகாள்! எம்மைப்போல் உயிரில் பாவை ஆகின்றாள் என்னும் குறிப்புணரக் கொல்யானை போகாமல் பரந்த அடி முன்னே பணியீர். பூவைகாள்! செங்கோன்மையை வளவிப் போற்றீர். விரையத் தாவிப்போய் மடப்பத்தையுடைய மான்பிணைகாள்! வளைத்துக்கொண்டு பேதைமை உனக்கு உளதாமோ வென்று உளையீர். கோதையைத் தா என்று மதுகரங்காள்! கூப்பிடீர்; எங்களாலானது தடுத்துப் பார்த்தோம்; வேந்தர்க்கு அரசனாயிருந்து இவை யொன்றற்கும் அஞ்சான்; இதற்கு எல்லை யாதுகொல் என்று விளங்கிய ஆபரணத்தை யுடையாள் ஆர்வத்துக்கு மாற்றாக அவனெதிரே இவை சாற்றினாரென்க. வாயில் வகையில் பவனிகண்டோர் கூறினாரென்க.

(கு - ரை) 297. கபோதம் - புறு; இது அபயம் புக்கது 17-ஆம் கண்ணியினுரையாலும் அடிக்குறிப்பாலும் விளங்கும். இன்னம்: "இன்னம்

பாலிக்கு மோவிப் பிறவியே " (தே. திருநா.) 298. பாவடி - பரந்த அடி. 299. உளையீர் - வருந்தும்படி கூறீர். மதுகரம் - வண்டு. (உரை) வளவி - கலந்து; "கிளவி தேனினு மமிழ்தினுங் கிளைத்தவள் வளைத்தோள், வளவி யுண்டவன் வருந்துமென் றுலது வருந்தோ" (கம்ப. கார்காலப். 50.)

(உரை) திருமால் அன்னவடிவமாகி வேதங்களை அருளியது: "அன்ன மாய் முன்னொருகா லறம்பயந்த வறனும் நீ" (தொல். செய். 146. பேர். மேற்.) "அன்ன மாகி யருமறைக ளருளிச் செய்த வமலனிடம்", "அன்ன மாகியன் றருமறை பயந்தவனே" (பெரிய திருமொழி, 5. 1 : 9, 3 : 8.) வண்டைக் கூறியது: கங்கையின் நீரினுள்ளே நாட்டிய கழுவை வீமனுக்குக் குறிப்பித்தற் பொருட்டுக் கண்ணபிரான் அதன்மேல் வண்டாக இருந்து சுற்றிய கதையைக் கூறினுமாம்; "வேறொரு பகற்கழு நிரைத்து வீமனை, டாறுபாய்ந் திருவரு மாடும் வேலையில், தேறலான் வஞ்சகந் தேறி வண்டினால், ஏறினன் கடந்தரி யேறு போன்றுளான்", "பொங்கழற் சிந்தைச் சுயோதனன் கங்கைப் புனல்வினை யாட்டிடைப் புதைத்த,வெங்கழு முனையில் விழாமலோ ரளியாய் வீமனுக் காருயி ரளித்தாய் (வி. பா. வாரணா வதச். 10, 17 - ஆம் போர். 9); "தண்டுஞ் சிவிகையும் பாய்மாவும் பொன்னுந் தமிழ்க்குதவும், கண்டன் புகார்வரைக் காரிகை யேகழு நீரின் முனம், உண்டுண் டெனக்குறி காட்டியன் றைவர்க் குயிரளித்த, வண்டுண் டுமிழ்ந்ததன் றேவணங் கேயிந்த வையகமே" (குலோத். கோவை, 390.) கன்னனுக்குச் சாபமுற வண்டாய்த்துளைத்த வரலாறு மஹாபாரதம், கர்ணபர்வம் 36-ஆம் அத்தியாயத்திற் காணப்படும்.

அரிவைப் பருவத்தாளொருத்தி (262) மாலைமங்கலம் பாடிவந்த விறலி யர் (264) பெருமாள் பவனிவரும் நாள் நாளையென (262—3) இரவு நீடு பருவரல் எய்திய வைகறைக் காலத்திலே ஒப்பித்தெழுந்து (267) செய் குன்றிலிருந்து சிலாதலத்திலிருந்து பொழுதுபோக்கி (271—5) அணி, ஆடை முதலியன தலைவனுக்கு உவமை கோடற்றன்மையாக அப்பவனியிலே வெளிப்பட்டு (279—86) அவன் அருள் செய்யாமல் களிறு அகலவிட்டது கண்டு (289) மெலிவொடு வைகல் முற்றப் புறங்கொடுத்தாள் (293); பாங்கிய ரும் (292) அன்னமுதலானவையுடனே கூறுவார் போல (297—9) 'ஒரு பருவத்துத் தடுத்தோம் (211—6); ஒரு பருவத்து உளையக் கூறினேம் (221); வேந்தர் கோனுயிருந்தும் இவையிற்றுக்கு அஞ்சான் (296); இதற்கு எல்லை யாது'என (299) ஆர்வத்துக்கு மாற்றாக இளிவரல் வரக் கூறினர் (300) எனக் கூட்டுக. பொற்றொடிக்கும் (296); உம்மை, இழிவு சிறப்பு. அன்னங்காள் நீர் சென்றுஅரற்றீர் என்ற கருத்து, நீ முன்பு கூறிய வேத நெறிக்குப் பிழை காண் இது என்றவாறு. வண்டைக் கூறினர், பாஞ்சாலி குழல்முடிப்பித்த வினை முடிவு கருதி; கன்னனுக்குப் பரசுராமன்சாபமுற வண்டாய்த் துளைத்தலிற்போலும்.

(பி - ம்) 297. 'சென்றறையீர்' 298. 'மால்யானை' 'வாவிப்போய்' 299. 'வரவழையீர்' 300. 'என்னே' 'தன்னே வவற்றெதிர் சாற்றினுள்'

## தெரிவை

301. பொருவி லொருத்தி புறங்காக்கு மாதர்
இருவி லிடைநின் றிறைஞ்சித் - திருவுலாப்
302. போதும் பெருமாள் புகுது மளவுமிங்
கியாதும் பயிலா திருத்துமோ - சூதாடேம்

(ப - ரை) 301—2. அரிவைப் பருவத்துக்குப் பின்னராகிய (300) தெரிவைப் பருவத்தாளொருத்தி புறங்காவலான மாதரிலே சிலர் இரண்டு விற்கிடைக்கு அப்பாலாக நின்றிறைஞ்சி, 'திருவுலாப்போதும் பெருமாள் நம் மறுகு புகுதுமளவும் இவ்விடத்து யாதொன்றுடனே பொழுதுபோக்காமல் இருக்கக்கடவேமோ' என்று வினவச் 'சூதாடேம்' என்று அவ்வினாவிற்கு உத்தரம் கொடுப்ப.

(கு - ரை) 301. பொரு இல் - ஒப்பு இல்லாத. வில்விடை, நின்றிறைஞ்சுதல் : "ஒளித்தறை தாழ்கோத் துள்ளகத் திரீஇ, ஆங்கது தனக்கோரைவிலின் கிடக்கை, நீங்காது நின்ற நேரிழை தன்னை" (மணி. 4 : 88-90); "ஐவிலி னகல நின்றுங் கடிதொழு திறைஞ்சி னார்க்கு", "இருவிற்கண், பொங்க விடுதவிசி லிருந்தான் போரேறனையானே" (சீவக. 1704, 2608.) (302) சூதாடுதல் மகளிர் பொழுதுபோக்குள் ஒன்று; "தொடையலங் கோதை சோரப் பளிக்குநாய் சிவப்பத் தொட்டுப், படைநெடுங் கண்ணார் வட்டாட் டாடிடம் பலவுங் கண்டார்" (கம்ப. மிதிலைக். 17.)

(பி - ம்) 301. 'றிறைஞ்சத்'

303. பந்தா டுதுநாம் பசும்பொற் குழைசென்று
வந்தாடு கண்ணாய் வருகென்று - சந்தாடும்
304. கொம்மை வருமுலையுந் தோளுங் குறியாதே
அம்மென் மருங்குல்பார்த் தஞ்சாதே - தம்முடனே
305. கொண்டா ரருகிருந்த பாணருங் கோடியரும்
கண்டா ரெவருங் கடுகினார்—மண்டி

(ப - ரை) 302-5. 'பசும்பொற் குழையளவும் சென்று வந்து காம நாடகம் ஆடுங்கண்ணாய் ! சூதாட வேண்டா; பந்தாடக் கடவோம்' என்று அவர் கூறப், பந்தெடுத்து வருகவென்று தலைவிகுறிப்பாற்கூற நிலைமை கருதினார் அருகிருந்த பாடற்பாணரும் ஆடற்கோடியரும் சந்தனச் சேறுடும் அழகிய பெரிய முலையும் தோளும் பாரமென்று குறியாதே அழகிய மெல்லிய மருங்குலைப் பார்த்து அதன் மென்மைக்கு அஞ்சாதே தம்முடனே பந்தாடுதலை உட்கொண்டாளென்று கருதினார். பந்தாடுதுமென்ற யாவரும் பந்தாடுதலிலே விரைந்தார்.

(கு - ரை) 304. கொம்மை - வட்டமெனினுமாம். கோடியர் - கூத்தர்; "கோடியர் தலைவ கொண்ட தறிந" (பொருந. 57.) 305, மண்டி - விரைந்து

(பி - ம்) 304. 'வனமுலையுந்

306. எடுத்தா ரெடுத்தன யாவு மெவரும்
கொடுத்தா ரொருதானே கொண்டாள்—அடுத்தடுத்து

(ப - ரை) விரைவாலே முத்தின் பந்தும் அம்மனையும் கலந்தெடுத்தார்; எடுத்தன யாவும் யாவர்க்குங் கொடுத்தார். பந்தாடல், அம்மானையாடல் என்ற இரண்டுக்கும் இவள் ஒருத்தி; இவளுக்கு நிகருண்டோ வென்னில் மீண்டும் இவள்தானேயென்று முன்னர்ப் பாவைக் கூத்தில் வருத்த தன்மை தெரியக்கொண்டாள்.

(கு- ரை) அம்மனையையும் உரையில் வருவித்துக் கூறியது இனம் பற்றி. (உரை) ஒருத்தி - இணையற்றவள். இவளுக்கு......இவள் தானே: இது பொது நீங்குவமை; தண்டி. 32. பாவைக்கூத்து - திருமகள் அவுணர் போர்க்கோலம் நீங்கும்படி பாவை வடிவங்கொண்டு ஆடியது; "செருவெங் கோல மவுணர் நீங்கத், திருவின் செய்யோ ளாடிய பாவையும்" (சிலப். 6 : 60–61.) முன்னரென்றது இவள் திருமகளாக இருந்த காலத்தை.

(பி - ம்) 'யாவையும் யாரும்' 'யாவு மெவர்க்கும்' 'கொடுத்தாள்'

307. முன்ன மெறிபந்தின் மும்மடங்கு நான்மடங்
கின்ன மெறிய வருகென்றாள்—அன்னம்

(ப - ரை) 'பந்தைப் பந்தடைவிலே யெடுத்து அம்மனையை அம்மனை அடைவிலே எடுத்து முதற்பாடெறிந்து ஆடுவதாகச் சொன்ன பந்து நீங்கள் விரகு செய்து எறிந்த மும்மடங்கான அம்மனை நான்மடங்கும் இன்னம் எறிய எறியக் கொண்டுவருக' என்றாள்.

(உரை) முதற்பாடு - முதலில்; இது பிற்பாடு என்பதுபோன்றதோர் சொல்; சிலப். 13 : 1.

308. அடியு மிருகையு மம்புய மென்று
படியு மொழுங்கிற் பயில—முடியும்

309. தொடையிடை போய சுழல்கூந்தற் பந்தர்க்
கிடையிடை நின்றகா லேய்ப்ப—அடைய

310. விழுந்தன பார்கடவா வாறுபோன் மேற்போய்
எழுந்தன கைகடவா வென்னக்—கொழுந்தளிரால்

(ப - ரை) 308-10. அம்மனையும் பந்தும் ஆடியநெறி கூறுகின்றார். பலபந்து ஆடுவாள் கையெல்லையும் காலெல்லையும் கடவாமல் ஆடியது என்போலு மென்னில் அன்னங்கள் (307), ஒழுங்காக உயரமலர்ந்த தாமரையிரண்டினும், தாழ மலர்ந்த தாமரை யிரண்டினும் படியுந் தன்மை போலப் பயிலத், தழைய முடிந்த கழுநீர்ப் பூந்தொடை இடையிடையே கால்போலத் தூங்கப், பவுரியிற் சுழலும் கூந்தல் பந்தரையொப்ப, குழலெல்லையுஞ் சென்ற முத்தின் அம்மனையும் பந்தும் பந்தர்க்கு இடையே முத்தின்கால் கொடுத்ததை யொப்பக் கலந்துதோன்ற விடுத்த பந்து அடைய விழுந்தன பாரெல்லை கடவாத நெறிபோல, விண்கொளா வம்மனை மேற்போய் எழுந்தன கூந்தற் பந்தரெல்லையைக் கடவாவென்ன.

(கு - ரை) 308. பந்துக்கும் அம்மனைக்கும் அன்னம் உவமை. அம்புயம் - தாமரை. 309. தொடை - மாலை. கால் - பந்தற்கால். கூந்தலுக்குப் பந்தலும் மாலைக்குக் காலும் உவமை. அடைய - முழுவதும். (உரை.) பவுரி - கூத்து.

(பி - ம்) 309. 'தொடையு மிடைபோய்ச் சுழல்கூந்தற்'

311. ஏற்றுதி விண்கொளா வம்மனை யெம்மனை
ஆற்றுதி யீதிங் கரிதென்னப்—போற்றரும்

312. கையோ பதயுகமோ கண்ணோ கடுகினவை
ஐயோ வறித லரிதென்னப்—பொய்யோ

313. திலக நுதலிற் றிருவேயென் றோதி
உலகு வியப்பவென் றோத—அலகிறந்த

(ப - ரை) 311-3. கொழுவிய தளிர்போலுங் கையாலே (310) விண்கொளா அம்மனை ஏற்றுதி; மண்கொள்ளாத பந்து ஆற்றுதி; இந்த ஆடல் தேவவுலகத்து உண்டாயின் தெரியாய். இவ்வுலகிற் காட்சி அரிதென்னப் பாணர் போற்ற, ஆடற்பொருநர் கொழுவிய தளிராலே அரிதாக்ச்செய்த கையோ, பதயுகமோ, கண்ணோ தம்மில் விரைந்தவை இன்னவென்று தெரியாது; விடாமல் ஆடலிற்பயின்று போதுகிற தன்மை ஆடற்றுறை வல்லோர்க்கும் அறிகை அரிதென்னப் போற்ற, பந்தாடுதுமென்று மாறுபட்ட புறங்காவல் மாதரெல்லாரும் பாவைக்கூத்துக்குத் திலகநுதலையுடைய திருவே யுள்ளது, வேறில்லையெனப் பதினோராடல் வகுத்தவன்றே தேறினோர் வியப்பது பொய்யன்றே என்று கூற. ஐயோவென்பது மூவகையோர் தீராக் குறிப்பு.

(கு- ரை) 310. தளிர்-தளிர்போன்ற கை. இங்கே கூறிய அம்மனையை 305-ஆம் கண்ணியில் வருவித்துரைத்தார். எம்மனை - எம்முடைய தாய்; விளி. 312. பதயுகம் - இரண்டு கால்கள். ஐயோ : வியப்பின்கண் குறிப்பு என்னலுமாம்; 'ஐயோவென்றது உவகைக்கண் வந்தது' (சிற். 384, பேர்); "ஐயோவிவன் வடிவென்பதொ ரழியாவழ குடையான்" (கம்ப. கங்கைப். 1.) (உரை) பாணர் முதலிய மூவரும் தாம் அறிந்தவற்றைப் புகழ்தல் சிறுபாண். 207-18-ஆம் அடிகளை நினைப்பிக்கின்றது. பதினோராடல் : "கடையம் மரக் காணிமரக் கால்விந்தை கந்தன், குடைதுடிமா லல்லியமல் கும்பம் சுடர்விழியாற், பட்டமதன் பேடுதிருப் பாவையரன் பாண்டரங்கம், கொட்டியிவை காண்பதினோர் கூத்து" (சிலப். 3 : 14, அடியார். மேற்.) மூவகையோரென்றது பாடற்பாணர், ஆடற்பொருநர், புறங்காவல் மாதர் என்னும் மூவகையாரையும்.

(பி - ம்) 311. 'ஏற்றுதை' 'ஆற்றுதை யீதென் றரிதென்ன', 'ஆற்றுதலீதிங்' 313. 'யென்றுன்னை' 'உலகு வியப்பரிதென் றோதி'

314. பந்தாட் டயர்ந்து பணைமுலையார் பாராட்ட
வந்தாட்டு நீராட்டு மண்டபத்து—விந்தை

(ப - ரை) அம்மனை உமையர் அறிந்து செய்ததல்லவென்பதும் இரு திறத்தாரும் ஆடலில் அமைந்ததும் தோன்ற, 'பந்தாட்டயர்ந்து' என்றார். ஆட்டு நீராட்டும் மண்டபத்திற் பணைமுலையார் பாராட்டவந்து; ஆட்டுநீர் என்பது பத்துத்துவரினும், ஐந்து விரையினும், முப்பத்திருவகை ஓமாலிகையினும் ஊறிய நீர்; "நாற்பான் மரநாவன் மாந்தளிர் முப்பழம், சீர்த்தழூத்தக் காசு துவர்", "கொட்டந் துருக்கந் தகர மகிலாரம், ஓட்டிய வைந்தும் விரை", "ஏல மிலவங்கஞ் சாதிக்காய் கற்பூரம் வேலி யிரண்டு புழுகிரண்டு - தக்கோலம், சாலுநா கப்பூ விலாமிச்சஞ் சந்தனம் - கராம்பு கத்தூரி குங்குமம் பச்சிலை, ஆர நிரியாசம் நாகணம் புன்னை, நற்கோட்ட நறும்பிசின் மாஞ்சில் அறுகு கச்சோலந்தாரம் மஞ்சள் நற்றேவதாரம், நறுங்குழ லோமா லிகை" இதனால் உணர்க. இதனுள் இரண்டு வகை யுணர்ந்து முப்பத்திரண்டு வகையும் காண்க. இவ்வகை ஆட்டு நீராட்டு மெல்லையில்.

(கு - ரை) பணைத்தல் - பெருத்தல். (உரை.) இருதிறத்தார்: தெரிவையும் அவளுடைய பரிசனமாகிய ஏனையோரும். 'ஏலமில வங்கம்' என்னும் மேற்கோள் பிழைபட்டுள்ளது.

(பி - ம்) 'மண்டபத்துள்'

315. பெருமா னனபாயன் பேரிய மூன்றும்
தருமார வாரந் தழங்க—ஒருமாதர்
316. ஏந்து துகிலொன் றுடுத்தாளோ வில்லையோ
போந்து மறுகு புகுந்தொழிந்தாள்—மாந்தளிரும்

(ப - ரை) 315-6. பேரியமான மும்முரசு முழக்கம் செவியுறலும் அணி, ஆடை, அலங்கல் முதலியன பல மாதரும் ஏந்திநிற்ப ஒரு மாதர் ஏந்தின துகிலை வாங்கி உடுத்தாளோ இல்லையோ என்று கண்டார் கூறும்படி விரைவுடன் உடுத்து மண்டபத்தை விட்டுப் போந்து மறுகிலே புகுந்து மெலிவொடு வைகல் மாறிக் காண்டல் வலித்தலின் ஒழிந்தாள்.

(கு - ரை) 314. விந்தை - துர்க்கை. 315. அனபாயன் - குலோத்துங்க சோழன் பெயர்: சேக்கிழார் இப்பெயரை மிகவும் எடுத்தாண்டுள்ளார் பேரியம் மூன்று - பெரிய மூன்று முரசுகள்; 'வீரமுரசு, நியாயமுரசு. தியாகமுரசு; மணமுரசுடனே ஏனை இரண்டு முரசு என்பாரும் உளர்', (புறநா. 58 : 12, உரை.) ஒரு மாதர் என்றது எடுத்துக் கை நீட்டுவானை; 'அவர்கள் திருக்கோயிலில் திருப்பணி யெடுத்துக் கை நீட்டுவார்', 'சித்திர சேனன் எடுத்துக் கை நீட்டுவான்' (தக்க. 88, 505, உரை); "எடுத்துக் கை நீட்டு வாளா மெழிற்பெருந் திருவாஞ் செல்வி" (திருக்குற்றாலப். தக்கன் வேள்வி. 80.) காண்டல் வலித்தல்: பு. வெ. 15.

317. தாதுந் தமனிய மாலையுந் தண்கழுநீர்ப்
போதும் பிறவும் புறம்புதையா—ஓதிக்குச்

318. சென்னி யமுனைத் தரங்கமுந் திம்புனற்
பொன்னி யறலும் புறங்கொடுப்பப்—பின்னர்

319. ஒழுங்காய சேயரிக்கண் ணூடொட்டும் மையால்
மழுங்காது கைபோய் மதர்ப்பச்—செழுங்கழுத்

320. தொன்று புனைந்த தொருசங்க மாணிக்கம்
இன்று பயந்த தெனவிளங்க—நின்றிலங்கும்

321. உச்சக் கலனணியாத் தோளிணைக் கோரிரண்டு
பச்சைப் பசுங்காம்பு பாடழிய—நிச்சம்

322. அசும்பு பொலன்கச்சி னற்றத்தே கொங்கை
விசும்பு குடிவாங்க வீங்கப்—பசுஞ்சுடர்க்

323. கோல வயிறுதர பந்தனக் கோணீங்கி
ஆலின் வளர்தளிரி னேதாகி—மேலோர்

324. இழியு மொருசாம ரேகையு முந்திச்
சுழியும் வெளிவந்து தோன்றக்—கெழிய

325, இசையின் கலாபாரம் யாப்புறு வல்குல்
திசையின் புடையடையச் செல்ல—மிசையே

326. பொறைபுரி கிம்புரி பூட்டாத் துடைதூ
சுறையு மரகத மொப்ப—அறையும்

327. சிலம்பு சுமவாத செந்தா மரைபோய்
உலம்பு குரலஞ்சா தோடக்—கலம்பல

328. தாங்கி யுலகந் தரிப்பத் தரியென்று
பாங்கிய ரெம்மருங்கும் பாராட்டப்—பூங்கே

329. ழுருவி லொளிபோ யுலகடையக் கோப்பத்
தெருவி லெதிர்கொண்டு சென்றாள்—பெருமாளும்

(ப - ரை) 317–29. தலைவியை ஒப்பனை செய்யாத காலையில் இயல்பு நலம் கூறுவார் 'ஒப்பியா மாலை' என்றார்; 'மாலை இயல்பு' என்றவின். மாந்தளிரும், பலபூந்தாதும், தமனிய மாலையும், கழுநீர்ப்போதும், பலவாகிய உத்தி வலம்புரி சூடாரத்தினம் தொய்யகம் புல்லகம் பிறவாகிய தலைக் கோலமுமாகப் புறம் மறையாத ஓதிக்குச் சென்னிவிரும்பும் யமுனை யாற்றில் ஓடும் நீர்த்தரங்கமும் பொன்னியாற்று வறண்டகாலை அறலும் ஒப்புத் தோற்றுப் புறங்கொடுப்ப; உவமையும் பொருளும் ஒப்பச் சினையொடு சினையாக மெய்யும் உருவும் கூறினார். அதன் பின்னராக ஒழுங்காகிய இயற்கை நலத்தால் தங்கள் மருநீதி தாழ ஒழுங்காகிய செவ்வரிக்கண் தனதூடே மையாலே அழகு மழுங்காமல் கைவளர்ந்து களிப்ப; இஃது இயல்பாகவுள்ள தொழிற்றன்மை கூறினார். ஒன்று புனைந்த வளவிய கழுத்து ஒப்பில்லாத சலஞ்சலம் என்னும் சங்கம் தனக்கு இயல்பாகிய முத்தைப் பயவாமல் புதுமையாக ஒரு மாணிக்கத்தை இன்று ஈன்றதென விளங்க; இதற்கு இல்பொருளுவமங்கொண்டு மெய்யுவமங் கூறினார்.

இயல்புநலம் நின்றுவிளங்க அந்நலம் மறையாத தோளணிவர்க்கம் அணியாத தோளிணைக்கு ஓர்தலுற்ற இரண்டு பசுமூங்கில் பசுமைநிறச் செவ்வியழிய நிச்சயமாக என்றார்; மூங்கிலினது நிறம் வேறுபடப் புலர்தலின் இஃது உவமையும் பொருளும் ஒத்த உவமையைப் பழித்துக் கூறினர். சாம்பூநதமென்னும் பொன்னாற்செய்த கச்சும் பிரிவான காலத்திலே முன்பே வான்வடிவான மருங்குல் ஈடேற்றமாவுள்ளதும் குடிவாங்க முலை வீங்க; இதற்கு வினையுவமங் கூறினர் வினையில் பொருட்கு வினைகூறும் என்னும் விதியால். அழகிய வயிறு உதரபந்தனமென்னும் கோள் நீங்கிப் பசுஞ்சுடர்க் கோலமுடையவாய ஆலினது தளிரினும் மெல்லிதாக; இதற்குப் பண்புகொண்டு தொழிலுவமங் கூறிற்று. தேவவுலகத்து உள்ளாரும் தங்கள் பதத்லைதவிட்டுப் பூலோகத்திலே இறங்குவமென்று சொல்லுவபோல ஒப்பில்லாத சாமரேகையும் உந்திச்சுழியுங் காட்டிக் கெழீஇ வந்து தோன்ற என்றார்; காட்சி விருப்பத்தால் நடைவிரைந்து துகில் தழைதலின் உந்தி தோன்றிய தன்மை நோக்கி; இல்பொருளுவமம் கொண்டு தன்மை கூறினர். நிறவிய கலாபாரத்தாற் கட்டப்படாத அல்குல் திசையெல்லையை முடிவுகாணக் கருதிச் செல்லுந்தன்மைபோல வளர்ந்துசெல்ல; மன அறிவு உவமத் தற்குறிப்பேற்றம் கூறிற்று. மீதே சுமையாகக் கிம்புரி பூட்டாத துடை வெள்ளிய உறையின்கட் கிடந்த மரகதம் ஒப்ப; திருவின் செல்வியென்றும் நிறம் செம்மையென்றும் முற்கூறுவார் தூசுறையும் மரகதம் என்றார், மன அறிவு உவமத்தாலே செலவும் விரைவினற் செறியும் உருவும் நோக்கி. உடுத்த ஒரு துகிலும் மெல்லிய துகிலாக்கி உரோம ஒளி நிகழ்ச்சியென்று பொருள் கூறின் உந்திச் சுழியும் வெளிவந்து தோன்ற என்பார் " இடக்க ரடக்க ரெவ்விடத்துங் கூறார், இளமையே பகருமொழிமாதர்" என மேற்கோள் கூறலின்; இது உருவுவமம். சிலம்பென்னும் சுமையைச் சுமக்கும் செந்தாமரையானது அந்தச் சுமை போனதென்றல்ல; அரிந்த குரலைக்கொண்டு விரைந்து செல்கின்றுளென்று புறங்கூறுமென்னும் அச்சமின்றி ஓடுந்தன்மைபோல விரைந்து செல்ல; பொருளைப் புகழ்ந்து சுமை ஒழிந்ததற்குமல்ல; புறங்கூறுமையும் போனதென இல்குணமடுத்து அநியமவுவமம் கொண்டு வினையுவமம் கூறிற்று. பாங்கியர் ஆபரணம் பலவுங்கொண்டு உலகம் உயிர்தாங்கி மறுமுறை தரிப்பத் தரித்தருளென்று எம்மருங்கும் பாராட்டத் தெருவில் எதிர்கொண்டு, நின்ற உயர்ந்தோர் உள்ளம் அடைய ஒரு தன்மையாகக் கேசாதி பாதத்து எல்லையளவுங் கூறிய உவமை சென்று கோப்ப வழிச் சென்றுள்.

(கு - ரை) 317. தாது - மகரந்தப்பொடி; இதனைக் கூந்தலில் அணிதல் இயல்பு; " அலமரு திருமுகத் தளகத் தப்பிய, செம்பொற் சுண்ணஞ் சிதர்ந்த திருநுதல் " (பெருங். 1. 33 : 119-20); " அளிநீ டளகத்தி னப்பிய தாதும்" (சிற். 122.) தமனியமாலை - பொன்னரிமாலை; " செண்ணச் சிகழிகைப் பின்னிடை சேர்ந்த, பொன்னரி மாலை", "மின்னிருங் கூந்தன் மேதகப் புனைந்த, பொன்னரி மாலையை", " நன்னுதன் மாதர் பின்னிருங்

கூந்தற்; பொன்னரி மாலாய் பொருளிலே யென்றும்" (பெருங். 1. 40 : 39-40, 349-50, 2. 19 ; 75-6.) ; சீவக. 2528, 2663.

318. ஓதி - கூந்தல். சென்னி - சோழன். யமுனைத்தரங்கம் - யமுனை யாற்றின் அலை; இது கரிய நிறமுடையதாதலின் கூந்தலுக்கு உவமை கூறப்பட்டது. பொன்னி - காவிரி. அறல் - கரிய நுண்மணல்; காவிரி சோழனுக்குரிய ஆறுதலின் அதன் மணலைக் கூந்தலுக்கு உவமை கூறினர். "யானயந் துறைவோ டேம்பாய் கூந்தல், வளங்கெழு சோழ ருறந்தைப் பெருந்துறை, நுண்மண லறல்வார்ந் தன்ன" ((குறுந். 116 : 1-3.) 319. சேயரிக்கண் - சிவந்த அரிகளையுடைய கண். மையால் மழுங்காது என்றது மைதீட்டப்படாமையைக் கூறியது. 320. ஒன்று - மாணிக்க அணி. 321. உச்சக்கலன் - உயர்ந்த ஆபரணங்கள். பச்சைப் பசுங்காம்பு - மிகப் பசுமையான மூங்கில். பாடு - பெருமை. நிச்சம் அழிய என் இயைக்க. 322. அசும்புதல் - துளித்தல். அற்றம் - நீக்கம். விசும்பு : இடைக்கு உவமை யாகுபெயர். 323. கோள் - குற்றம். ஐதாகி - மெல்லியதாகி. 324. சாம ரேகையென்றது உரோமாவலியை. இசையின் - ஓசையையுடைய (232-3). 325. கலாபாரம் - மேகலாபாரம். அல்குல்.........செல்ல : "மிசையகன் றுயரும் நகின்மருக்குல்குடி யடிபறிந்ததழ விடுமெனத், திசையகன் றளிவு மகனிதம்பதட முடையமாதர்கடை திறமினோ" (தக்க. 29.) 326. பொறை - பாரம். கிம்புரி - குறங்குசெறி யென்னும் ஆபரணம்; சிலப். 6 : 86. தூசு - உடை. அறையும் - ஒலிக்கும். 328-9. பூங்கேழுரு - பூவையொத்த நிறத்தையுடைய வடிவம்,

(உரை.) ஒப்பனை - அலங்காரம். "மாலையியல்பு" (தொல். உரி. 15.) உத்தி - சீதேவி. வலம்புரி - வலம்புரிச்சங்கு வடிவாகச்செய்த தலைக்கோலம். சூடாரத்தினம் - முடிமணி ; "முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி" (முருகு. 84); வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னி" (புறநா. 150 : 6.) தொய்யகம் - தலைப்பாளை. புல்லகம் - தென்பல்லி வடபல்லி யென்பன; உத்தி......புல்லகம்: சிலப். 6 : 106-8. சென்னி விரும்பும் யமுனையென்றது சோழனைக் கண்ணபிரானாக நினைந்து கூறியது. சினையொடு சினை என்றது கூந்தலுக்கும் யமுனையின் அலையையும் காவிரியின் அறலையும் உவமை கூறியதுபற்றி. மெய்யும் உருவுமென்றதுநெறிப்பும் கருநிறமும்பற்றி; மெய் - வடிவு; உரு-நிறம். தொழிற்றன்மை : தன்மையணியின் வகையுள் ஒன்று ; தண்டி. 29. இல்பொருளுவமமென்றது சங்கு மாணிக்கத்தை ஈன்ற தென்பது பற்றி. மெய்யுவமம்-வடிவுபற்றிய உவமம். சாம்பூநதம்-நால்வகைப் பொன் னுள் உயர்ந்தது ; "பொன்னுக்குச் சாம்புநதம்" (திருவள்ளுவமாலை, 36.) வான் - ஆகாயம். வினையுவமமென்றது விலக்குதற்றொழில் கூறியதுபற்றி. வினையில் பொருட்கு வினை கூறுதல் : தொல். உவம. 2, பேர். பண்பு - பசுமைநிறம். தொழிலுவமம் என்றது மெல்லியதாதல்பற்றி. சாமரேகை - கரிய மயிரொழுக்கு. நிறவிய - நிறத்தையுடைய. தற்குறிப்பேற்றமென்றது இயல்பாக வளரும் அல்குலைத் திசையெல்லை முடிவு காணக்கருதிச் செல்லுவதாகக் கூறியதுபற்றி. "இடக்கரடக்கர்" என்னும் மேற்கோள்

இன்ன நூலில் உள்ளதென்று தெரியவில்லை. அநியமவுவமை - நியமித்த வுவமையை விலக்கிப் பிறிதும் இப்பெற்றியன ஆம் என்றல்; தண்டி. 32.

(பி - ம்) 319. 'ஊடேட்டும்' 'ஊடொழுகும்' 321. 'உச்சங் கலனணி மாத் தோள்' 'புதுக்காம்பு' 323. 'ஆல விளந்தளிரி னேதாக' 324. 'மொருகாம', 'மொருரோம' 'சுழியு மெளிவந்து' 'கெழீஇய' 326. 'பூட்டா துறைதூ சுறையில்' 'தூசுறையுண் மரகத' 227. 'புனையாத்' 'மரைப்போது' 328. 'இனியாந் தரிப்ப தரிதென்று' 328-9. 'பூங்கோ ளுருவில்'

330. கொற்றக் குடைக்கீழ் வடமேருக் குன்றனைய
வெற்றிக் களியானை மேல்வந்தான்—பற்றி

(பூ - ரை) உம்மை: (329) சிறப்பு.

(கு - ரை) யானைக்கு மேருக்குன்று உவமை: 82.

331. இருவருந் தம்மி லெதிரெதிர் நோக்கா
ஒருவ ரெனவேட்கை யொத்தார்—குருசில்

(ப - ரை) 331. தலைவிமேல் தலைவன் நோக்கம்பற்றி, தலைவன்மேல் தலைவி நோக்கம்பற்றி நோக்கிய காலையில் பெண்பாற் கைக்கிளை கூறிய காண்டல் வலித்தல் ஆண்பாற்கும் ஏற்று ஒரு தன்மையர் ஆயினரென்று கண்டோர் கூறும்படி வேட்கை யொத்தார். வேட்கை யென்றது பருவக் கைக்கிளையை; இங்ஙனமன்றி அநுராகமெனில் திணை வழுவாம்.

(கு - ரை) நோக்கா - நோக்கி. வேட்கை யொத்தார் என்றது இருவயின் ஒத்தல் என்னும் துறை கூறியபடி. "ஒரு வயிற்போல வுள்ளழி நோக்கமொ டிருவயி னொத்தலி திறந்த பின்னர்", "இருவயி னொத்த வியற்கை நோக்கமொடு ஒருவயி னொத்த வுள்ள நோயர்" (பெருங். 1. 32: 48-9, 3. 7: 90-91.) அநுராகம் - ஒத்த அன்பு; இஃது ஐந்திணைக்கு உரியது. அதனைக் கைக்கிளைப் பொருளதாகிய உலாவிற் கூறின் திணை வழுவாம்.

(பி - ம்) 'நோக்கி'

332. மறந்த கடல்கடைய வந்தாண்மே லன்பு
சிறந்த திருவுள்ளஞ் செல்லச்—சிறந்தவள்

333. ஆக னகத்திருந்தா ளாகத் திருவுள்ளக்
கோக னகத்திற் கொடுசென்றான்—நாகிள

(ப - ரை) 332-3. குருசில் (331) மனுகுலத்தில் மறந்த திருப்பாற் கடலை முன்பு கடைய வந்தவன் இவனெனக்கருதிச் சிறந்த திருவுள்ளம் இவன்மேற்செல்ல இயற்கை நலம் சிறந்தவள் தனது ஆகமாகிய மலையிலேயிருந்து உவமையற்றானெனக் கருதித் திருவுள்ளமாகிய கோகனகம் இருப்பாகக் கொடுத்து உட்கொண்டு போனான்.

(கு - ரை) 332. மறந்த பாற்கடல் என்றது இவன் திருமாலான காலை யிற் பள்ளிகொண்டதை நினைந்து கூறியது; "எறிபாற் கடற்கொள்ளும் நின்துயி றந்தரு ணீயென்பார்" (220.) பாற்கடலைக் கடைந்தவன் முன் பிருந்த ஒரு சோழன்; "தோளிணையால், கோழியிற் சோழ குலத் தொருவன் முன்கடைந்த, ஆழியிற் கொண்ட வரம்பையரும்" (இராசராச. 71-2.)

333. ஆகம் நகம் - மார்பாகிய மலை. கோகநகம் - தாமரை.

(உரை) உவமையற்றாள் என்றது மலையில் இருந்த தன்மையால் பிற மகளிர்க்கு உவமிக்கப்படுதல் நீங்கினாள் என்பது கருத்து.

(பி - ம்) 332. 'திருநோக்கம்' 'செய்து' 333. 'ஆக நகத்திருப்பா ளாக' 'கொடு வந்தான்'

334. நவ்வி மடநோக்கான் ஞாலத்தை யோரடியால்
வவ்வி யிருதோளில் வைத்தமால்—செவ்வி
335. முருகு கமழ முகந்து முகந்து
பருகு மடமகளைப் பாரா—அருகு
336. மடுத்து முயங்கி மயங்கிய தாயர்
எடுத்து மலரணைமே லிட்டார் - அடுத்தொருவர்

(ப - ரை) 334-6. இளைய (333) பெடைமான்போல மருண்ட நோக்கத் தால், முன்னர் ஞாலத்தை ஓரடியாலே வௌவிக்கொண்டு இருதோளில் வைத்த மாலுடைய செவ்வியைப் பருவக் கைக்கிளைக்கு ஏற்ப மணங்கமழ முகந்துகொண்டு முகந்துகொண்டு பருகும் மடப்பத்தையுடைய மகளைப் பார்த்து இவள் கண்ணாற் செவ்விபருகும் தன்மையும் தலைவன் தலையளி செய்த தன்மையும் உணர்ந்து அருகுசென்று முயங்கினாலொழிந்து இவள் வேட்கைதெளியாதெனக் கருதித் தாயர் மயங்கிய மகளையெடுத்து மல ரால் செய்த அணைமேலிட்டார். இட்டாரென்றார் ஒருணர்வின்மை நோக்கி.

(கு - ரை) 334. நோக்கால் பருகும் என இயைக்க. நோக்கினால் அழகைப் பருகுதல்: "முருகுவார் கூந்தலார் மொய்த்தலர்ந்த கண்ணாற், பருகுவார் போல்வீழ்ந்து பார்ப்பார்" (120.) 335. முகந்து முகந்து என்ற அடுக்கு இடைவிடாமைபற்றி வந்தது. பாரா - பார்த்து. 336. மடுத்து முயங்கி - சேர்த்துத் தழுவி.

(பி - ம்) 335. 'மடமானைப்' 336. 'மடுத்து மயங்க முயங்கிய'

337. கொய்யாத கற்பகப் பூமாலை கொண்டைக்கும்
நெய்யாத பொற்றுகி னீவிக்கும்—செய்யாத
338. தொங்கற் றுளைக்கோவை யல்குற்குஞ் சூழ்கனகத்
துங்கப் பணிவலையந் தோளுக்கும்—கொங்கைக்குப்
339. பொன்னிப் புகாரிற் பொலன்குழம்பும் வல்லத்திற்
கன்னிப் பனந்தோடு காதிற்கும்—சென்னி

340. அளிப்பக் கொணர்ந்தனம்யா மன்னமே யென்று
தெளிப்பச் சிறிதே தெளிந்தாள்—கிளிக்கிளவி

(ப - ரை) 337-40. அடுத்து ஒருவர் (336) கொய்தற்கு அரிதான கற்பகப்பூவாற் செய்தமாலை கொண்டைக்கும், நெய்தற்கு அரிதான பொன்னாற் செய்த துகில் (இளிவந்த தன்மை) துடைக்கும், துளையும் கோவையுஞ் செய்யாத தெய்வவுடை அல்குற்கும், அத்தன்மையாகச் சூழ்ந்த பாப்புச் சுருள் தோளிற்கும், புனிதமான காவிரியாற்று அகிலும் சந்தும் தம்மிற் றேய்ந்து புகார் முகத்திற்செறிந்த குழம்பு கொங்கைக்கும், வல்லத்தில் இளைய பொற்பனைக் குருத்தாற் செய்த தோடு காதிற்கும், சோளேசன் அளிப்ப யாங்கள் வழிபாடு கூறிக்கொண்டு வந்தேம், அன்னமே என்று பாணரும் கோடியரும் தெளிவிப்ப அதுகொண்டு நிகழ்ந்த பெருமயக்கம் சிறிது ஒழியத் தெளிந்தாள் கிளிபோலுங் கிளவியென்று வாயில் வகையோர் கூறியதென்க.

கோடியரும் பாணரும் யாம் கொணர்ந்தனம் என்னுங் குறிப்பு நுமக்கு இன்றியமையாத ஆயவெள்ளத்தார் இராசராசனை ஒரு பவனியிலே தடுத்தும், ஒரு பவனியிலே நும்மை இகழ்ந்து கூறியும் நுமக்கு உறவுபோல் பகை செய்தாரெனத் தம் வழிபாடு இறைச்சிப் பொருள் கொண்டது காண்க. பாணரும் கோடியரும் என்ற உம்மை (304) எச்சவும்மை. சிறிதொழியத் தெளிந்தாள் என்ற குறிப்பு (340) வந்த வகையில் ஆரமாலை பெருமை நோக்கிப் போலும். திருவுள்ளக் கோகனகத்திற் கொடுசென்றான் என்ற வினை, கற்பகமாலையும் பொற்றுகிலும் துளைக்கோவையும் பணிவலயமுமென்னும் பெயரொடு முடிந்து தலைவன் குறிப்பு விளக்கியவாறு காண்க. மெலிவொடு வைகிய தன்மை உணர்த்துவிப்பார் புறங்காவல் மாதரிலே சிலர் பவனி வருமளவும் ஒன்றுடனே பொழுதுபோக, குறை என்னென்று வினவிச்சூதை மறுத்துப் (301) பந்தாட்டில் ஏற்பித்து (304) விரைவினாலே முத்தின் பந்தும் அம்மனையும் கலந்தெடுத்துக் கொடுப்ப (307) இவள் மெலிவறிந்த பாணருங் கோடியரும் அவர் வினைகண்டு கலந்து (306) அம்மனையும் பந்தும் ஆடிய பகுதியும் வியந்து (314) புறங்காக்கும் மாதர் ஆட்டுநீர் ஆட்டிய எல்லையிலே (315) தலைவன் பவனிவரக் (316) கைக்கிளை விளங்க விரைவுடன் வருகாலையில் (317) ஒப்பியா இயல்பிற்குக் கண்டோர் உவமைகூற மறுகிற் புகுந்து காண்டல் வலித்தல் ஒழிந்து (316) உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்து மெய்யுறு புணர்ச்சி பெருமை யுணர்ந்து (335) தாயர் மலரணைமேல் இட்டார் (336) ; பாணரும் கோடியரும் (305) கற்பக மாலைமுதல் தோடு இறுதியாக (337-8) அரசுரிமைக்கு வேண்டுவன நுமது ஆயவெள்ளம் போலப் பெறுதவழிக் கூறுமல் தழையக் கூறிக் கொண்டு வந்தோமென்று அரசுரிமையான ஆத்திமாலை பெறுததுகொண்டு சிறிதொழியத் தெளிந்தாள் என (340) வாயில் வகையோர் பவனிகண்டு கூறினர் எனக் கூட்டுக. "அத்தொழிற் கிடையிடை யம்மனை யாடியும்,

அவ்வகைக் கழங்காடியும்'' என்று கொங்கவேள் கூறலின் அம்மனை உடனுடல் ஆயிற்று. ஒப்பியா மாலையான தெரிவை முற்றிற்று.

(கு - ரை) 337. கொய்யாத கற்பகமாலை யென்றது மாலையாகவே பூத்தலின்; "பாடுவண் டிமிரா பன்மரம் யாவையும், வாடா மாமலர் மாலைக டுக்கலின்'' (மணி. 3 : 49-50.) நெய்யாத பொற்றுகில் : தெய்வத்தன்மையால் நிருமிக்கப்படுதலின் இவ்வாறு கூறினர். 338. துனைசெய்யாத என மாறிக் கூட்டுக. பணிவலையம் - பாம்பு வடிவமாகச் செய்யப்படும் தோள் வளை. 339. பொலன் குழம்பு - பொன் போன்ற நிறமுடைய சந்தனக் குழம்பு. வல்லம் ; தஞ்சாவூருக்கு அருகிலுள்ளது ; இது பழைய காலத்தில் பெரிய நகரமாக இருந்தது ; "மாரி யம்பின் மழைத்தோற் சோழர், வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை'' (அகநா. 336 : 20-21.) "வல்லத்தேற்ற தெவ்வர்'', "தெவ்வர் வானகமேறவல்லத்து வென்றான்'' "வல்லத்து வென்ற அணிநிற வேன்மன்னன்'' "உலம்புரிதோண் முன்ன ரோடவல்லத் தட்டவருரிமை, நலம்புனை கோதையர்க்கல்லல் கண்டான்'', "அணிநிற மால்பக டுந்திவந் தார்வல்லத் தன்றவியத், துணிநிறவேல் கொண்டகோன்'', "வல்லத் தமரழித்த, கறையா ரிலங்கிலை வேன்மன்னன்'', "வல்லத்துப் புல்லாக், கோவுந்துமியவை வேல் கொண்டகோன்'', "வல்லத்துத் தென்னற்கு மாறெதிர்ந்து, விண்டார்'' (பாண்டிக் கோவை) ; "சுடர்தோய் புரிசை, வல்லத்தமர் வென்றவாணன்'' (தஞ்சை. 251.) கன்னி - இளமை (உரை) 'அத்தொழிற்கு......ஆடியும்' என்ற பகுதி கிடைத்த பெருங்கதைப் பகுதியுள் காணப்படவில்லை.

(பி - ம்) 338. 'கொங்கத் துணைக்கோவை'

## பேரிளம்பெண்

341. மற்றொருத்தி செந்தா மரைமலர்மே லென்னுடனே
செற்றொருத்தி வாழு மெனச்செறுவாள் - சுற்றவும்

(ப - ரை) தெரிவைப் பருவ வினைமாற்றுகிய பேரிளம்பெண் என்னும் பருவத்தொருத்தி, உலகப் பெண்தன்மைக்கு ஒப்பிலா ளொருத்தி யென்று கூறும் திருமகளென்னும் பெண் தன்தன்மை யுணர்ந்து தாமரைமேலிருந்து யாம் என்ன பயன் பெறுகின்றோம் எனத் தன் நெஞ்சுடனே வெறுத்து வாழுமெனச் சிலர் முகமன் கூற அதற்குப் பொருள் ஆராய்ந்து கூறினீர் என்று அவரை முனிவாள் ; முனிந்த கருத்து யாதெனின் தாமரை மலர் மேலிருந்து முயன்ற தவப்பயனன்றே மநுகுலேசனை சோழேசன் அரசுரிமையை அடைய நாம்பெற்றதென்பதும் இருவர் திருமாதர் இல்லை யென்பதும் குறித்தறியாது கூறினீர் என்பது. முகமன் ஒழியச் செந்தாமரைமேல் ஒருத்தி செய்கை இயற்கையாக அணிகலத்தாளாய் ஒரு பருவத்துக்கு அடைத்த ஒழுக்கமொன்று மறிவாள் ஏழ்பருவத்து ஒழுக்கமும் அறியாளென்று பொறுமல் முகமன் கூறினரைச் செறுவாள். உவமையை இழித்துப் பொருளை யுயர்த்தது.

(கு - ரை) மலர்மேல் என் - மலர்மேலிருந்து என்ன பயன்? உடனே என்பதற்கு நெஞ்சு என்ற சொல் வருவித்துரைத்தார். (உரை) மற்று வினை மாற்றுப் பொருளது; தொல். இடை. 14. உவமை : திருமகள். பொருள் : பேரிளம் பெண்.

342. தெட்டுத் தசும்பசும்பு தெங்கி னிளம்பாளை
மட்டுத் தமனிய வள்ளத்து—விட்டு
343. மறித்து வயிர மடலொன்றின் வாக்கித்
தெறித்து ஞிமிறோப்பிச் செவ்வி—குறித்துக்கொண்
344. டேந்தி முகம னியம்பி யிருந்தொரு
காந்தி மதிவதனி கைக்கொடுப்ப—மாந்தி
345. குதலை குழறிக் குயிற்குங் கிளிக்கும்
விதலை யுலகில் விளைத்து—நுதலை
346. வியரா லலங்கரியா வேந்தன் கொடுமை
அயரா வெளிவிடா வஞ்சாப்—பெயரா

(ப - ரை) 342-6. தெங்கிற் சூழக்கட்டிய தசும்புதோறும் மாறுநீர் இளம்பாளை மட்டு முற்றின பருவத்தே தசும்பினின்றும் பொன் வள்ளத்திலே விட்டு வள்ளத்தினின்றும் மீள வைர மடலிலே வடித்து மதுத்தான் விரும்பும் கடவுட்கு நிவேதித்து வண்டு வீழாமலோட்டிச் செவ்வி முகிராமற் குறித்துக்கொண்டு காட்சிக் கினியாளொருத்தி, தனது கரத்தேந்தி முகமன் கூறி இரந்துகொண்டு மதிபோலும் வதனிகையிற் கொடுப்ப வாங்கி அருந்தி மது மயக்கத்தாலே யாழுங் குழலுமியையா மொழி குதலையுமாய் அதிலே குழறுதலுமுடைத்தாய்க் குயிற்கும் கிளிக்கும் யாம் இவை கற்கவேண்டுமென்னும் விருப்பத்தினை விளைத்து வியராலே நுதலை அலங்கரித்து. குதலை - எழுத்தில் கிளவி. குழறுதல் - சொல்லில் கிளவி. மதுமயக்கம் வாக்கினும் மனத்தினும் காயத்தினும் ஒக்க நிகழ்ந்தவாறு காண்க.

(கு - ரை) 342. தசும்புதெட்டு - கலயங்கள் கட்டிய. அசும்புதல் - துளித்தல். மட்டு - கள். தென்னம்பாளைக் கள்ளையுண்ணல் : "ஊறவிளம் பாளை யுச்சிப் படுகடும், தேறல் வழிந்திழிந்த செவ்விக்கண்" (விக்கிரம. 312); "கொலையு முண்டோ கொழுமடற் றெங்கின், விளைபூந் தேறலின் மெய்த்தவத் தீரே" (மணி. 3: 98-9.) தமனிய வள்ளத்து - பொற்கிண்ணத்து.

343. மறித்து - மறுபடியும். வயிரமடல் - வைரத்தாற் செய்யப்பட்ட கள்ளுண்ணும் கருவி; "வாக்கி மடனிறைத்து வண்டு மதினுரையும், போக்கி" (விக்கிரம. 313.) தெறித்து - நகத்தால் தெறித்து; "வருந்திச் சிறு துள்ளி வள்ளுகிரா லெற்றி, அருந்தித் தமர்மே லயர்ந்தாள்" (விக்கிரம. 314.) ஞிமிறு ஓப்பி - வண்டுகளை ஓட்டி; "தேன்கவர் வோப்பித் திருநுதல் சுருக்கிப், பூநறுந் தேறல் பொலன்வள்ளத் தேந்தி" (பெருங். 1. 35 : 176-7.) 344. முகமன் - உபசார வார்த்தைகள். காந்தி-காட்சிக்கினியொளொருத்தி. மதிவதனி யென்றது பேரிளம்பெண்ணை. 345. விதலை - நடுக்கம். கள்

ளுண்டலால் நுதல் வியர்த்தல் : "வெவ்வா ணுதலும் வெயரரும்ப" (விக்கிரம 320) ; "வடித்தவெங் குருதிவேல் விழிக்கு மாதர்மெய், பொடித்தவேர் புறத்து நறவம் போன்றவே" (கம்ப. உண்டாட்டு. 22.) உரை. மது விரும்பும் கடவுள் : வாருணித் தெய்வம். குதலை : சீவக. 181, உரை.

(பி - ம்) 343. 'குமிரேச்சி' 344. 'ஏந்து முகமன்' 346 'வெளியிடா'

347. அருகிருந்த பாணனை நோக்க அவனும்
குருசில் வருதமரங் கூறப்—பரிபுரக்

(ப - ரை) 347. பருவக் கைக்கிளை கனவின் அரற்றலாதலின் அதற்கொப்ப வேந்தன் கொடுமைச் செய்தியை நினைந்திருந்தமை தோன்ற முகமன் கூறினை முனிந்து மதுமயக்கத்தாலயர்த்து வெளிவிட்டு அஞ்சியென வினையெச்ச முற்றாக்கி அந்நினைவைப் பெயர்த்தளிப்பக் கொணர்ந்த பாணனை முகம் பார்ப்ப அவனும் ஆத்திமாலை பெருதது உணர்ந்து 'பெருமாள் பவனி எழுந்தருளுகின்றார் ; அத்தமரம் இத்தமரம்' எனக்கூற.

(கு - ரை) தமரம் - முழக்கம். பரிபுரம் - சிலம்பு. உரை. கனவினரற்றல்: பு. வெ. 15. வினையெச்சமுற்று என்றது அயரா என்பது முதலியவற்றை.

348. காலு நிதம்பமுங் கையுந் திருக்கழுத்தும்
கோலு மதாணிக் குலமெல்லாம்—மேலோன்
349. குரகத மேழு முழுகிக் குளிப்ப
மரகத சோதி வயங்கப்—புருவ
350. இடைபோய்க் குமிழின் மலர்வந் திறங்கப்
புடைபோய்க் கருவிளை பூப்ப—விடையாக
351. ஏக முருக்கு மலர விளம்பாளைப்
பூக மிடறு வரப்பொதிய—போகப்
352. பெரும்பெருந் தெங்கிளநீர் தாழ்ந்து பிறங்கப்
பரும்பெருங் காம்பு பணைப்ப—விரும்பிய
353. நறுந்துணர் மாந்தளிர் வார்ந்து நளியக்
குறுந்தொடிக் காந்தள் குலைப்பச்—செறிந்து
354. சலித்துத் தனியிள வஞ்சி தளரக்
கலித்துக் கதலி கவின—ஒலித்தே
355. அளிக்குஞ் சகோரமு மன்னமு மானும்
களிக்கு மயூர கணமும்—விளிக்கும்
356. புறவுந் தொடர்ந்துடனே போத வவையே
பிறவு மினமென்று பெட்பச்—சுறவுயர்த்தோன்
357. காலை புகுந்து கரப்ப தொருபசும்பொற்
சோலை யெனவந்து தோன்றினாள்—ஞாலத்தோர்

(ப - ரை) 348-57. தலைவன் பவனி வரவுக்குப் பாணன் வாயிலாக மயக்கந் தெளிந்து உருவுவமைக்கு ஏற்பவந்து மறுகிற் றோன்றினளெனக் கூட்டுக. பரிபுரத்தையுடைய (347) காலும் நிதம்பமும் கையுந் திருக்கழுத்தும் கோலிக்கொண்ட பேராபரணமெல்லாம் தேர்மேலானன பருதி தேரிற் பூண்ட குரகதமேழின் உருவமும் புதையும்படியான மரகதமணி ஒளி நிறம் பெற விளங்க; இதனால் உருவுவமம் வந்தது. சோலைக்கொடிகளிலே நிற்கும் குமிழிடத்து மலர் வந்து உண்டாக, அதன் புறத்திலே கருவிளை படர்ந்தது தொடுப்பக், கருவிளை படர்ந்த குமிழுக்கு நடுவாக நிறத்துக்கு ஒப்பற்ற முருக்கு மலர, இளம்பசுங்காய் தொடுத்த பாளையைப் பூகமிடற்றிலே வரப்பொதிய, உயர வளர்ந்த பெருந்தெங்கினிடத்திலே பருவவிளநீர் தழைந்து விளங்கப், பருமையும் பெருமையும் உளதாக மூங்கில் இளையெழ, மாக்கள் வண்டு விரும்பும்படி பூங்கொத்தும் தளிரும் ஒழுங்குபடச் செறியக், குறிய தொடிகளையுடைய காந்தளம்போது கட்டவிழத், தனித் தனியே இளைய வஞ்சிக்கோடு தழைத்த மெல்லிய தென்றற் காற்றிலே அசைந்து தளர்வெய்தக், கெழுமுதல் உற்றுக் கதலி அழகுபெற, ஆரவாரத்துடனே புறவும் சகோரப்புள்ளும் பூவையும் மானும் மயூரகணமும் தம் துணையுடனே தொடர்ந்துகூட உலாவப் பொழிலிற் சோர்வான புள்ளும் மாவுமாகிய பிறவும் பொழிலின் நிலைமைகண்டு தம் இனமானவை தருதலை விரும்பிச் சுறவுக்கொடியை யுயர்த்த காமன் காலையான வசந்த காலம் புகுந்து கரந்திருப்பதொரு சோலை; இவையிற்றாலே காலம் வெளிப்படுத்தின தன்மைபோல மரகதமணியினது பசுத்த நிறஞ் சிவப்பக், குமிழினது மலர் இரு புருவநடுவே வந்து தாழப், புறவிதழ் பற்றுவிட்ட கருவிளம்பூப் போலும் கண்கள் இருபுறமும்போய் மலர்ச்சிதர, மேற் கூறுவதான கழுத்துக்கும் கண்ணுக்கும் நடுப்பட்டவிடத்திலே ஒப்பற்ற முருக்கிதழ் போலும் அதரம் மலர்ச்சிபெற, இளம்பசுங்காய் தொடுத்த பூகம் மிடறு ஒப்புவர மரகத உட்கட்டுடனே கழுத்து விளங்கப், பெரிய தெங்கினது பரிய இளநீர் ஒப்புத் தாழ முலைதழைந்து விளங்கப், பெருமைக்கும் வளர்ச்சிக்கும் இளமூங்கில் ஒப்பழியத் தோள்கள் பணைப்பெய்த, வண்டு விரும்பும் பூங்கொத்தும் மாவினது தளிரும் ஒழுங்குபடக் குழலிற் செறியக், காந்தள்போலும் அங்குலிகளின் இறைத்தொடி நிலைகுலையப் பூரிப்ப, முலையுந் தோளும் பாரம் செறிந்து தனிமையுற்று வஞ்சிபோலும் இடைதளரக், கன்னிக் கதலிபோலும் குறங்கு அழகுபோதக், கூட்டக் குறிப் புணர்ந்த சகோரமும் அன்னமும் மானும் களிக்கும் மயூரத்திரளும் தமது துணையை அளிக்கும் தன்மையவாயும் ஒன்றையொன்று தொடர்ந்து உடன் போத எண்ணி எண்ணாத பிறவுமான வண்டுங் குயிலும் மாடப்புறவும் முதலாயின தமக்கு இனமென்று விரும்ப நடந்துவந்து தோன்றினளெனக் கூட்டுக.

(கு - ரை) 348. மதாணி - பதக்கம்; "படலசூடி காகோடி பணிமதாணி மார்பாளே" (தக்க. 105.) 349. குரகதம் - குதிரை. முழுகிக் குளிப்ப என்றது குதிரைகளின் நிறம் பச்சையாதலின். தலைவியின் அவயவங்களை

உருவகத்தாற் கூறுகின்றார். 351. இளம்பாளைப் பூகத்தைச் சொல்லியது கழுத்தில் மரகதத்தாலான ஆபரணத்தை அணிந்தமைபற்றி. 352. பணைப்ப-பெருக்க. 353. நளிய - செறிய ; உரிச்சொல். 354. கதலி : துடை. 355. மயூரகணம் - மயிலின் தொகுதி. விளிக்கும் - தம் இனத்தை அழைக்கும். 356. சுறவுயர்த்தோன் - சுறுமீனைக் கொடியிலே மேம்படுத்திய மன்மதன் ; "மீனே றுயர்த்த கொடிவேந்தனை" (சீவக. 6.) 357. காலை என்றது இங்கே பொழுது என்னும் பொருளது. (உரை) மரகத உட்கட்டு - கழுத்தி லணியும் ஆபரணம்.

(பி - ம்) 349-50. 'புருவத் திடைபோய்க்' 350. 'திலங்க', 'திறங்கி', 'திறைஞ்சி' 351. 'மோகப்' 352. 'பெருந்தெங்கிளநீர் தழைந்து', 'தெங்கிள நீர்கள்' 'விரும்பும்', 'விரும்பி' 353. 'வந்து நலியக்' 'குலையச்' 354. 'தளிர்ப்பக்' 356. 'உறவென்று' 357. 'தொருபசுஞ்'

358. தெய்வப் பெருமாளுஞ் சேவடி முன்குவித்துக்
கைவைத்து நின்றவளைக் கண்ணுற்றான்—தையல்

(ப - ரை) குவித்த ஒருகைதன்மேல் ஒருகை வைத்தல் தலை மகளிர் தொழும் பகுதி. தொழுது நின்ற தலைவியைக் கருதிப் பார்த்தலை யுற்றான்,

(பி - ம்) 'சேவடிமுன் கைகுவித்து'

359. வெருவமுன் சூர்தடிந்த வேளே நயக்கும்
பருவமு மார்பிற் பணைப்பும்—புருவமும்
360. செந்தா மரைக்கண்ணும் மாமேரு வைச்சிறிய
பந்தாகக் கொள்ளும் பணைத்தோளும்—உந்தியும்
361. உய்ய விருகாது மூக்கு முடுபதியை
நைய வெறிக்கு நகைநிலவும்—செய்ய
362. பவளத் துவர்வாயும் பாதாம் புயமும்
கவளக் களிற்றெளிதிற் கண்டு—குவளைக்

(ப - ரை) 359-62. கண்ணுற்ற தலைவனைக் கவளக்களிற்றிலே எளிதாகக் கண்டு அரிதாகக் கனவிற் கண்டவன் செய்த கொடுமையைக் கருதித் தையல் வெருவுதலுற்று எளியவனே என நயக்கும் பருவச் செவ்விநிறமும் ஊழிமுடிவில் பூமகளையும் நாமகளையும் உய்தற்கு இடமாகக் கொடுக்கும் உந்தியும் காதும் முதலான அவயவச் செவ்வியைக் களிற்றின் எளிதிற் கண்டெனக் கூட்டுக.

(கு - ரை) 359. சூர்தடிந்த - சூரபதுமனைக் கொன்ற ; தடிந்த என்றார் அவன் மாமரமாக நின்றமைபற்றி. வேளே : ஏகாரம் சிறப்பு. 360. மேரு பந்தாதல் : "காவன் மலையேழுங் கந்துகமோ" (152.) 361. உடுபதி - சந்திரன். 362. கவளக்களிறு - தான் விரும்பும் கவளம் பெற்று வளர்ந்த களிறு; சிந். 33, பேர். (உரை) அரிதாகக் கனவிற் கண்டவனென்றது

இப்பருவத்துக் கைக்கிளை கனவினாற்றுதல் என்பதனை நோக்கி. பூமகளையும் நாமகளையும் உய்விக்கும் உந்தி என்றது பூமிதேவியையும் அவளைப் படைக்கும் பிரமதேவனையும் தம்முள் அடக்கிக் கொள்ளுதல்பற்றி.

(பி - ம்) 359. 'வியக்கும்' 'மார்பும்' 360. 'பணைக்கரமும்' 361. 'வடிகாதும்' 'வருள்காதும்' 362. 'பாராள்புயமும்' 'கவளக் களிற் றெதிர்', 'களிற்றினெதிர் கண்டாள்'

363. கருநெடுங் கண்களிப்ப வுள்ளங் களிப்பப்
பருநெடுந் தோளும் பணைப்ப—ஒருநின்
364. சிலம்புகளோ ரேழுஞ் சென்றடைந்து நோலேன்
அலம்பு கடலேழு மாடேன்—வலம்புவனம்
365. ஏழுஞ் செலவயரே னெங்கோவே நின்குடைக்கீழ்
வாழுந் திருவெனக்கு வாய்க்குமே—தாழி

(ப - ரை) 363-5. மது மயக்கத்தால் உண்கண்ணும் உள்ளமும் களிப்பத் தோளும் பணைப்பெய்த வேந்தன் கொடுமையைப் பார்த்துச் சிலம்புகளோரேழும் விசயமடந்தையைப்போற் சென்று தவஞ் செய்யேன்; திருவின் செல்வியைப்போல ஏழுகடலுஞ் சென்று நீராடேன்; நிலமகள்போல நின் மரபிற் றலைவனை வெய்யோற்கு இடமாய ஏழு புவனமும் வலஞ்செய்ய விரும்பேன்; எம்முடைய கோவே! நின்குடை நிழற்கீழ் வாழும்படியாக நின்மாலை புனை செல்வம் வாய்க்குமேயாமாகில் யானது செய்யவல்லேன்; அது செய்தால் இவளுக்கு ஆத்திமாலை கொடுக்க வேண்டுமென்கிறதைப் பற்றறச் செய்கின்றாயல்லவே என்றென்று கூறி அது வாய்க்குதல் அல்லவென்று கனவிற் செய்த கொடுமையை நினைத்து.

(கு - ரை) 364. சிலம்பு - மலை. நோலேன் - தவஞ்செய்யேன். அலம்புதல் - ஒலித்தல். மலைகளில் தவஞ்செய்தலும் கடலாடுதலும் சோழனை யடைதற்குரிய உபாயங்கள்; "மலையி னலைகடலின் வாளரவின் வெய்ய, தலையிற் பயின்ற தவத்தால் - தலைமைசேர், அம்மாதர் புல்லு மபயன் புயம் புணர, எம்மா தவம்புரிந்தோம் யாம்" (தண்டி. 58, மேற்.) 365. புவனமேழும் வலமாக வருதல்; "குணகடல் பின்ன தாகக் குடகடல், வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப, வலமுறை வருதலு முண்டென்று" (புறநா. 31 : 13-5.) ஏழுமலை, ஏழுகடல், ஏழுபுவனம். 150-52; "எழுகடலெழுகிரி யெழுபொழி லெனவிவை சுற்றிய பற்றுளா" (குலோத். பிள்ளைத். 36.) (உரை.)விசயமடந்தை - துர்க்கை. நின்மாலை என்றது ஆத்திமாலையை.

(பி - ம்) 363. 'கருநெடுங் கண்ணு முளமுங் களிப்ப'

366. முடைதழுவு தோளும் முலையுந் தழுவ
விடைதழுவு தாமரைக்கை வீரா—கடகரியைக்

367. கைதழுவிக் கோரத்தைக் காறழுவி நின்புலியை
மெய்தழுவிக் கொள்ள விடுவாயோ—மொய்திரைசூழ்

(ப - ரை) 366-7. 'தாழிபோல' (365) முடைமணம் தழுவும் தோளும் முலையுமுடைய கோவியமாதரைத் தழுவுதற்கு விடையைத் தழுவிய தாமரைக் கைவீரனே' என்று விளித்து 'நினது ஏற்றுனையாய்க் கைவலியையுடைய யானையைக் கைதழுவி, நின்குலமுதற் றுரகமாய்க் கால்வலியையுடைய கோரத்தைக் காலைத்தழுவி, நின்மாற்றார் மனமழியத் தாவும் மெய்வலியை யுடைய புலியை மெய்யைத்தழுவி நின்குடைக்கீழ் வாழும் செல்வம் கைக் கொள்ளக் கடவேன்; இவையிற்றை ஏவிக் காணவல்லையோ; அது செய் கின்றுயல்லவே.'

(கு - ரை) 365. தாழி - தயிர்த்தாழி. 366. முடை - பாலின் நாற்றம்; "முடைக்கை யெதிர்க்குரவை கோத்தாய்" (252.) விடைதழுவியது நப் பின்னையின் பொருட்டு; 252-3. கடம் - மதம். 367. கோரம் - சோழனது குதிரையின் பெயர்; "ஆரந் தழுவுந் தடந்தோ ளகளங்கன், கோரந் தொழுத கொடிக்கு" (தண்டி. 39, மேற்.)

(பி - ம்) 365. 'தாழ்வின்', 'தாழும்' 366. 'முடைதவழும்' 'முடைதழுவு நாடன் முலையுந் தழுவ' 367. 'விடுவையோ'

368. ஞால மறிக்கவும் நாயக நின்புகல்விற்
கால வுததி கலக்கவும்—சால
369. வருந்தா வகைவருந்த வாழி பெயரும்
பெருந்தேவி யார்க்குப் பெறலாம்—திருந்திய
370. குந்த மொசித்ததுவுங் கொற்றத் திருத்தோளால்
வந்த விடையேழு மாய்த்ததுவும்—முந்துறக்
371. கோவிய மாதர்க்கே யுள்ளங் குறைகிடந்த
ஆவியே மாதாக வஞ்சுமே - ஓவிய

(ப - ரை) 368-71. நீ நாயகமானபடியாலே ஊழிவெள்ளஞ் செறியப் பட்டு வசுந்தரைக்கு ஆதாரமான ஞாலத்தை எதிர்முகமாக்குதற்கு மச்சாவ தாரமாய் வெள்ளத்தைத் தடுக்கவும், நினது புகலாய் ஒளிகாலப்பட்ட திருப் பாற்கடலென்னும் அவ்வுததியை மலையும் பாம்பும் மதியும் கொண்டு கலக்க வும், திருவின் செல்வியும் வசுந்தரையும் நின்னைப் பிரிந்து வருந்தாவகை அவ்வாழியிலே புரியும்படி நீ வருந்தலால் அவர் நினக்குப் பெருந்தேவிய ராதலின் அத்தன்மையரானவர் தோளினும் மார்பினுங் கண்டிருப்பக் குருந்தமேறி அதன் கோடுகளை முறித்ததும், வலிபொருந்திய திருத் தோளாலே விடையேழுந்தழுவி மாய்த்ததும், திருந்திய கோவிய மாதர்க்கே யல்லவோ? எப்பிறப்பினும் நின்மேல் அன்புசென்று அந்தக் குறை முடிக்கக்கிடந்த ஆவி எம்மளவு இன்றுதாக அழுந்துற அஞ்சுமேயென்று அவன் கொடுமை வெளியிட்டு. திருந்திய கோவிய மாதர் என்றுர், நீர் மண் காவாமை குறித்தென்க. கோவிய மாதர்க்கே யென்றும் நின்னைக் கருணை

கரன் என்றும் கூறியது விரகத்தாரிடத்து அருள் செய்வை யென்றுமிருக்கும். அவர்கள் பெண்தன்மைக்குப் பிழைசெய்தார் என்பது நோக்கியும். பெருந்தேவியர் தம்மளவிற் செய்த நன்றி மறவாராதலின் இது செய்ய லாயிற்றென்று இறைச்சிப் பொருண்மை சுட்டிற்று.

(கு - ரை) 368. ஞாலம் - பூமிதேவியை. மறிக்க - வெள்ளங் கொள்ளாமல் தடுக்க. புகல் - இருப்பிடம். வில் கால்அ உததி - ஒளியை வீசுகின்ற அந்தப் பாற்கடல். 369. பெயரும் - நினக்குத் தேவியரென்ற பெயரையும். பெருந்தேவியாரென்றது பூமிதேவியையும் திருமகளையும். 370. குந்தம் - குருந்தமரம்; "மாதர்புடை, வைகுந்தமேற் கொண்டிருந்தோர்", "சாகைக் குந்தத்துத் துகிறுக்கி மாதர் தமைநகைத்தாய்" (திருவரங்கத்தந்தாதி: 62, 80); "குருந்த மொசித்தஞான் றுண்டால்" (தொல். புறத். 5, ந. மேற்.) "குருந்த மொன்றொசித் தானொடு" (பெரியாழ்வார். 4, 4 : 7.) 371. கோவிய மாதர்க்கே; ஏகாரம் பிரிநிலை. (உரை) மலையும் பாம்பும் மதியும் முறையே மத்தும் கடைகயிறும் தம்பமுமாகக் கொள்ளப் பட்டன; "வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக், கடல் வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு கலக்கினையே" (சிலப். ஆய்ச்சியர் குரவை); "பைம்பொன் மால்வரை மத்தினிற் பணிவடம் பிணித்திட், டும்ப ரானவர் தானவ ருடன்கடைந் திடவே, தம்ப மானது மன்றியத் தழல்விடந் தணிய, அம்பு ராசியி னாரமு துடனவ தரித்தோன்" (வி. பா. குருகுலச். 4.) தோளினும் மார்பினும் என்றது பூமிதேவி தோளிலும் திருமகள் மார்பிலும் இருத்தல்பற்றி. விரகத்தார் - பிரிவுடையவர். அவர்களென்றது கோவிய மாதரை. இறைச்சிப்பொருள்: "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே" (தொல். பொருள். 35.)

(பி - ம்) 368. 'ஞால மடக்கவும் நாயகநீ நின்புலரிக்' 371. 'கோவியர் மாதர்க்கே யென்றும்' 'ஆவியே மாதர வஞ்சுமே' 'ஆவி யமர்தர வஞ்சுமே'

372. சேரன் சிலையினுஞ் சீரிதே சென்றொசிய
மாரன் சிலையை வணக்காயால்—சேரன்றன்
373. முன்றிற் பனைதடிந்தாய் முட்டா திரவொறுக்கும்
அன்றிற் பனைதடித லாகாதோ—கன்றி
374. மலைக்குஞ் செழியர் படைக்கடலை மாய்த்தாய்
அலைக்குங் கடன்மாய்த் தருளாய்—மலைத்தவர்
375. தங்கள் புகழ்நிலவை மாய்த்தா யரிமரபிற்
றிங்களின் றண்ணிலவு தீராயால்—பொங்கொலிநீர்த்
376. தெம்முனை யாழ்தடிந்தா யெங்கள் செவிகவரும்
எம்முனை யாழ்தடிந்தா லென்செய்யும்—செம்மணியின்
377. செஞ்சோதி சிங்களத்து மாற்றுவாய் செக்கரின்
வெஞ்சோதி கண்டால் விலக்காயால்—வெஞ்சமத்துக்

378. காதி விடைபண்டு காடவன் முன்றடிந்தாய்
வீதி விடைதடிய வேண்டாவோ—யாதுகொல்

(ப - ரை) 372-8. பதினெட்டு மலையரணையுடைய சேரன் போர்த் தொழிலொழிய அவன் கொடியில் வில் முறிந்து போய்விட்டது ; நின் நிழல் வாழும் எங்களை வினைசெய்கின்ற மாரன் சிலையைத் தாழ்வியாய் ; நீ முறித்த வில்லினும் சீருடைத்தேயென்று கருதின் சீரிதும் அல்லவாகையால் இதற்குக் காரணம் யாதுகொல்? சேரனுக்குப் போர்க்கண்ணியொடு மலைதற்கு முன்றிலில் நின்ற பனையைத் தறித்தாய் ; நின்மாட்டு அன்பு நீங்காத எம்மை இரவில் ஒரு மாத்திரைப்பொழுதும் ஒழியாமல் ஒறுக்கும் அன்றிற்கு இடமான பனையைத் தறிக்கலாகாது என்றிருக்கிற காரணம் யாது கொல்? கன்றி மாறுபட்ட செழியர் படைக்கடலை மாய்வித்தாய் ; எம்மை அலைக்கும் கடலை மாய்த்தருளாய் ; இதற்குக் காரணம் யாது கொல்? மாறுபட்ட அரசர் புகழ்நிலவை மாய்த்தாய் ; நினக்குப் பகைவனுனவன் மரபீற்றிங்களிடத்துக் குளிர்ந்த நிலவை மாய்வியாமையது காரணம் யாது கொல்? தண்ணிலாவென்றது இகழ்ச்சிக் குறிப்பு. பொங்கி ஆரவாரிக்கிற கடலிடத்து உளதாய் நிற்குப் பகையாகிய யுத்தம் செய்யும் சிங்கள ராசாக்களுடைய வெம்மையும் முனையுமுடைய யாழைக் கெடுத்தாயே ; எங்கள் செவிப்பயனைக் கவர்ந்துகொள்ளும் யாழை எம்முன் தடிந்தால் என்ன செய்யும் ? தான் அது செய்யாத காரணம் யாது கொல் ? சிங்களதேசத்துச் சிவந்த செம்மணியின் சிவந்த சோதிகொண்டு கண்டோர் உயிருண்டலை மாற்றினுய் ! செக்கரிடத்து வெஞ்சோதி எம்மைக் கொலைசெய்தல் கண்டால் விலக்காயால். அதற்குக் காரணம் யாது கொல் ? வெய்ய போர்க்களத்திலே காடவர் கொடியாடையில் விடையை மாறுபட்டுக் கெடுத்தாய். எம்மைக் கருதி வினைசெய்கிற வீதி விடையைத் தடிய வேண்டாதது காரியமோ வென்னில் அல்ல. அது செய்யாத காரணம் யாது கொல்? பொங்கொலி நீர்த் தெம்முனை : இராவணனுக்கோ ராகுபெயர்.

(கு - ரை) 371. ஓவிய - ஒழியும்பொருட்டு ; வினையெச்சம். 372. சேரன் சிலையை வணக்கியது : "ஏறடர்த்து வின்முருக்கி" (தண்டி. 49, மேற்.) மாரன்சிலை - மன்மதனுடைய வில்லாகிய கரும்பு. 373. முன்றிற்பனை - முற்றத்தேயுள்ள காவல் மரமாகிய பனை. பகையரசருடைய காவல் மரத்தை வெட்டுதலும் அதனுல் முரசு முதலியன செய்தலும் புறத்திணை மரபு ; "பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின், கடியுடை முழுமுத றுமிய வேஎய், வென்றெறி முழங்குபணை செய்த", "கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை" (பதிற். 11 : 12 - 4, 17 : 5) ; "பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின், முழாரை முழுமுத றுமியப் பண்ணி" (பதிற். 5-ஆம் பதிகம். 13-4) ; "கடம்பறுத் தியற்றிய பண்ணமை முரசு" (அகநா. 347 : 4-5.) முட்டாது-குறையாமல். அன்றிற்பனை - அன்றிலையுடைய பனைமரம் ; "பெண்ணைமேல், பின்னுமவ் வன்றிற் பெடைவாய்ச் சிறுகுரலுக், குன்னி யுடலுருகி நையாதார்" (பெரிய

திருமடல், 42-3.) கன்றி - விரோதத்திலே அடிப்பட்டு. 374. செழியர் - பாண்டியர். கடலோசை மகளிருக்குத் துன்பந்தரும்; "அறைகடலி னிசையுடனே யண்டர் வேயி னும்பலிசை செவிகவர வந்தி மாலை, நிறை மதியி னிலவென்னும் நெருப்புப் பட்டா னேரிழைநின் றாற்றுவளோ" (சிலாசாஸனப் பாட்டு.) மலைத்தவர் - மாறுபட்ட பகைவர், 375. அரிமரபு - பகைவருகிய பாண்டியன் மரபு. பாண்டியர் குலமுதல்வன் சந்திரனென் பது: "செருமாண் டென்னர் குலமுத லாகலின்", "தென்னவன் குலமுதற் செல்வன் றோன்றி", "மாலைத் திங்கள் வழியோ னேறினன்" (சிலப். 4 : 22, 13 : 18, 27 : 138.) அரிமார்பின் என்ற பாடத்துக்கு அதனைச் சந்திரனுக்கு அடையாக்கித் திருமாலின் மார்பிற் றோன்றிய சந்திரன் என்று கொள்க; "கரியவன் மனத்தினுதி தனை" (சிலப். 6 : 37, அடியார். மேற்.) "எங்கண் மாதவ னிதயமா மலர்வரு முதயத், திங்கள்" (வி. பா. குருகுலச். 1.) 376. தெம்முனை யாழ் தடிந்தாய் - கொடிய இலங்கையரசனது வீணைக்கொடியை அழித்தாய்; "காண்டகு நீண்ட வீணைக், கொடிப்பற்றி யொடித்துயர் வானவ ராசி கொண்டான்" (கம்ப. சடாயு வுயிர்நீத்த. 107). "ஊழிபல வந்துபகை மேழி யையும் வீணையையு முற்றுமிடை சுற்று மொருவால்" (குலோத். பிள்ளைத். 64) 377. சிங்களத்திலுள்ள மணியை அழித்தது: "காவ லிலங்கை விலங்கல் கிழித்திருள் கான்மணி கைப்படவும்" (குலோத். பிள்ளைத். 43.) செக்கர் - செவ்வானம். 378. காதி - மாறுபட்டு. விடை - காளை எழுதிய கொடி. காடவன் - பல்லவன். "விடை வெல்கொடி வேல் படை முன்னுயர்த்த, பண்புடைப் பல்லவர்கோன்" (பெரியதிரு. 2. 9 : 6) "மீளிவன் கொடிவிடை வேந்தர் மார்பினும், தோளினுந் தீட்டிய தொண்டை மன்னவா" (சிலாசாஸனப் பாட்டு.) வீதிவிடை - வீதியிலே செல்லும் காளை; அதனுடைய மணியோசை பிரிந்த மகளிருக்குத் துன்பம் செய்யும்; "உரவுரு முரறு மரையிரு ணடுநாள், நல்லே றியங்குதோ றியம்பும், பல்லான் றொழுவத் தொருமணிக் குரலே" (குறுந். 190 : 5-7); "விடைமணி யோசை விளைத்தசெவிப் புண்ணின், புடைமணி யோசைப் புலர்ந்தேன்" (விக்கிரம. 295.) (உரை.) பதினெட்டு மலையரண்: விக்கிரம. 17; இராசராச. 21; "மகோதை மதிற்கதவம் பறிப்ப வெழிற்பதி னெண் சுர மும்பொடி யா மடி யப்பெயரும், பண்டித சோழன் மகற்கு மகன்பெறு மன்னவர் மன்னவனே", (குலோத். பிள்ளைத். 42.) நீ முறித்த வில்லென்றது சீதையின் பொருட்டு முறித்த வில்லை; "மாதை, ஒறுக்கு மிதிலை யொருவில்லைத் தொல்லை, இறுக்கு மவனிவ னென்பார்" (116) போர்க்கண்ணியோடு தமக்குரிய அடையாளப் பூவையும் சூடுதல்: "குடுமி களைந்த நுதல் வேம்பின் னொண்டளிர், நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து" (புறநா. 77 : 2-3.) கண்டோர் உயிருண்ணும் மணி: 145.

(பி - ம்) 372. 'திண்ணிதே' 'வணக்காயோ' 373. 'இராவொறுக் கும்' 'பனைகடிய லாகாதோ', 'பனைதடிந்தா லாகாதோ' 374. 'மலைத் தலைவர்' 375. 'தீர்த்தாய் தனிமரபில்' 'றண்ணிலவைத்' 'பொங்கு

திரை வெம்முனை' 376. 'யாழ்தடிய வேண்டாவோ' 376. 'செம்மை யின் செஞ்சோரிச்' 'மாற்றுநெய்' 378. 'விடை முன்பு' 'கடிய'

379. வன்பல் லவந்துகைத்த வாட்டானை யின்றிந்த
மென்பல் லவந்துகையா மேம்பாடு—தன்பூங்
380. கருப்புச் சிலைகொண்டு மோதுங் கழுத்திற்
சுருப்புநாண் புக்கழுந்தத் தூக்கும் - நெருப்புமிழ்

(ப - ரை) 379-80. வலிய பல்லவ தேசத்தை அழகழிய நெருங்கும் வாட்படையையுடைய தானை வந்து காமன் வில்லான இக்குவின் மெல்லிய பல்லவத்தைத் துகையாத மேம்பாடு யாது கொல்? காமன்றன் வினையறி யாமை போலும்; காமன் தனது கருப்புச்சிலைகொண்டு எம்முயிர் அழிய மோதும்; கழுத்திற் சுருப்புநாண் உட்புக்கு அழுந்தக்கட்டித் தூக்கும்.

(கு - ரை) 379. பல்லவனைவென்று நட்பாக்கியது: "கடியுரணச், செம்பொற் பதணச் செறியிஞ்சிச் செஞ்சியர்கோன், கம்பக் களியானைக் காடவனும்" (விக்கிரம. 79 - 80.) பல்லவம் - இங்கே மாந்தளிர்; "உலைக் கனலிற்கருங்கொல்லன் சிறுகுறட்டாற் றகடுபுரிந் துருக்கி மாரன், கொலைக் கணைகள் சமைப்பனபோற் குயிலலகாற் பல்லவங்கள் கோது மாலோ"* (வி. பா. வசந்தகாலச். 2.) உரை. காமன் வினையறியாமை தலைவன் தொழில் மோதும்: முற்று. சுருப்புநாண் - வண்டாகிய நாண்.

(பி - ம்) 379. 'வன்பல்லவன் றுலைத்த, 'வன்பல்லவன்றுவைத்த', 'வன்பல்லவம் பகைத்த' 'மேம்பாடென்' 'மென்பூங்' 'தண்பூங்' 380. 'புக்கழுத்தித்'

381. அப்புக் கழுவேற்று மாருப் பெருங்கோப
வெப்புப் படுத்தெங்கண் மெய்யுருக்கும்—தப்பா
382. உடல்பிள வோட வொருதேரிட் டூரும்
அடன்மகர போசன மாக்கும்—விடுதூதால்
383. அக்கால தண்ட மகற்றி யுலகளித்தாய்
இக்காம தண்ட மெளிதன்றே—மைக்கோல
384. வண்ண வளர்ந்த மகரா லயமறந்த
கண்ண வகங்கன்போர் காவாயேல்—மண்ணுலகில்
385. எப்படி யாவா ரிளம்பிடியா ரென்றென்று
மைப்படியுங் கண்ணாள் வருந்தினாள்— இப்படியே

(ப - ரை) 381-5. காமக் கனலிலே பொறியைச் சிங்கம் (380) அம் பாகிய கழுவை மருமத்துச் செருகும்; ஆறாத கோபமாகிற நெருப்பை விளைத்து எங்கள் மனத்திண்மையையும் உருக்கா நிற்கும்; தப்பாமல் உடலம் பிளவோடும்படி ஒப்பற்ற தென்றற் றேரிட்டு ஊரும்; வெற்றிபொருந்திய கொடி மகரத்துக்கு எமது ஆவியைப் போசனமாக்கும்; ஏவவிடப்பட்ட தூதாலே அக்கால தண்டத்தை அகற்றி முன்னம் உலகளித்தாய்;

எம்மளவில் காமதண்டம் அகற்றி எம்மை அளித்தல் உனக்கு எளிய காரியமல்லவே 'என்று வேந்தன் கொடுமை கருதி அஞ்சி, 'மைத்த மேகம் போலும் வண்ணனே! கண்வளர்ந்த மகராலயம் மறந்த கண்ணனே! அநங்கன்போர் நீ காவாயாகில் இளைய பிடிபோல்வார் மண்ணுலகில் எப்படித்தான் ஆவிபுரந்து ஈடேறுவார் இவ்வினைக்கு' என்று மைப்படியுங் கண்ணுள் வருந்தினளெனக் கூட்டுக.

(கு - ரை) 381. அப்புக்கழு - பாணமாகிய கழுக்கள். மெய் - மனத் திண்மை. உடல் பிளவோட - உடலைப் பிளக்கும்படி; "வெற்பும் பிளவோட வொலித்தனவால்" (தக்க. 213.) தூதால் காலதண்டம் அகற்றியது: இவ்வாறு தூது அனுப்பியவன் சுரகுரு; "சுரகுருவின் றூதாகி யமன்பாற் செல்வோன்" (கலிங்கத். 157); "மாகத்துக், கூற வரிய மனுக்கொணர்ந்து கூற்றுக்குத், தேற வழக்குரைத்த செம்பியனும்" (விக்கிரம. 6-7.) "கௌவை, எழக்குரைக்கும் பேழ்வா யிருங்கூற்றுக் கேற்ப, வழக்குரைக் குஞ் செங்கோல் வளவன்" (5-6.) 383. காமதண்டம் - மன்மதனால் விளையும் தண்டனை. மை - மேகம். 384. வளர்ந்த மகராலயம் - பள்ளிகொண்ட திருப்பாற்கடல். (பி - ம்) இளம்படியார்: "இளம்படி யிவளுக் கென்னினைந் திருந்தா யிடவெந்தை யெந்தை பிரானே" (பெரியதிரு. 2 : 7 : 2.) உரை. மருமம் - உயிர்நிலை.

(பி - ம்) 381. 'ஆரு வருங்கோப' 382. 'பிளவாக', 'பிளவேற' 'வொருதே ருருட்டும்' 384. 'கண்ணூர் வருந்தினர்'

386. தையலார் பொற்றேரைகைச் சாயலார் கையகலா
மையலார் போலராய் மன்றேற—வையம்

387. பெருகுடையா நீரேழும் பாரேழும் பேணும்
ஒருகுடையான் போந்தா னுலா.

(ப - ரை) 386-7. பருவந்தோறும் கூறிய இப்படியிலே அழகான பொன்னாற் செய்த மயில்போலும் சாயலார் கையகலா மையலையுடைய பெருந்திணையாரைப் போலே பிறர் அலர் கூறுந் தன்மைத்தாகக் கூறி மன்றேறக் காட்சியே கைம்முதலாகக் கலவியின்றி ஒருதலை வேட்கையிற் புலம்பும் மடவார் பலர், இளைத்து வருந்துவார் பலர் விளங்க வையத்துக்குப் பெருகு உடையா நீரேழும் உடுத்தற்கமைந்த பாரேழும் பேணும் ஒரு குடையான் உலாப் போந்தானென வாயில் வகையிற் பவனி கண்டோர் கூறினரென்பது. கனவு இப்பருவத்துக் கூரு திருக்க, கனவிற் செய்த கொடுமை என்று உரையிற் கூறியது யாதென்னில் மது மயக்கத்திலே கனவு நிகழுமென்பது முன்னர்க் கூறிய உலாவிற் கூறினாராதலின். வெளிப்படக் கூறாமல் கூட்டம் நிகழ்ந்தவாறு தோன்றவும் பருவப் பொருண்மை பற்றியும் குதலை குழறியெனக் (345) குறிப்பாற் கூறுதலின் கொடுமை யென்னும் ஒரு பொருள் நுதலிப் பருவத்துப் பொருண்மை முற்ற முடித்தவாறு காண்க.

தெரிவைப் பருவத்துக்கு அயற்பருவமாகிய பேரிளம்பெண் ஒருத்தி பெண்தன்மை கண்டு பொருளொடு பொருளுவமம் செய்து மறுத்து முகமன் கூற அவரை முனிந்து முற்பருவத்து ஆத்திமாலை கொடாத கொடுமையும் ஒரு காலத்து மறந்து உடனே நினைந்து அவன் கொடுமையை வெளியிட்டுக் காமன் வினைக்குப் பரிகாரமில்லாமை கூறி அஞ்சி 'அவன் வினை நீ காவாயாகில் இளம்பிடி போல்வார் எப்படி யாவார்?' எனத் தன்னைப் பிறர்போற் கூறி மைப்படியுங் கண்ணுள் வருந்தினாளென்க.

(கு - ரை) 386. தோகைச் சாயலார் - மயில்போன்ற மென்மையையுடைய மகளிர். மன்று - ஊர்ப்பொதுவிடம்; "மன்றத்து மடலேறி" (கலி. 58 : 22); "தென்றிக்கே வாளுக்குந் தேசிகன்வாழ் தென்சேந்தை, மன்றிற்கே யூர்வன் மடல்" (தத்துவ. அடங்கன் முறை.) பெருகு உடையா - பெருகிய உடையாக. 387. நீரேழும் - கடல்கள் ஏழையும். (உரை) கைமுதல் - கைமேல் கிடைத்த ஊதியம். கலவி - மெய்யுறு புணர்ச்சி. ஒருதலை வேட்கை - கைக்கிளை. முன்னர்க் கூறிய உலா - விக்கிரம சோழனுலா. அவ்வுலாவில் மதுமயக்கத்தால் கனவு நிகழ்ந்ததாகக் கூறியது; "இவ்வாறு, கண்டு மகிழ்ந்த கனவை நனவாகக், கொண்டு பலர்க்குங் குலாவுதலும்" (விக்கிரம. 320-21.)

(பி - ம்) 385. 'மையலான் மெய்சோர்ந்து மால்கொள்ள' 'போலலராய்' 386. 'பொருகுடையா னீரேழு பாரும் புரக்கும்', 'போற்றும்'

குலோத்துங்க சோழனுலா உரை முற்றிற்று.

(வெண்பா)

1. என்றினி மீள்வ தரிதி னிரணியனை
அன்றிரு கூறு யடர்த்தருளிக்—கன்றுடனே
ஆவின்பின் போன வனக னனபாயன்
மாவின்பின் போன மனம்.

மா - இங்கே யானை. மனம் இனி மீள்வது என்று? (பி - ம்) 'இன்றின மீள்வ தரிதின்'

(கட்டளைக் கலித்துறை)

2. ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்
நீடுங் குடையிற் றரித்த பிரானென்பர் நித்தநித்தம்
பாடுங் கவிப்பெரு மாளொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றேயெமைச் சொல்லுவரே.

கடைமணி - அரண்மனை வாயிலிற்கட்டிய ஆராய்ச்சிமணி; இச்செய்யுள் 'ஒட்டக்கூத்தன் பாதி சோழன் பாதி பாடியது' என்னும் தலைப்பின்கீழ் "என்று நித்தம் நவம்" என்ற பாடபேதத்துடன் தமிழ் நாவலர் சரிதையிற் (128) காணப்படுகின்றது.

# *இராச ராச சோழனுலா

1. புயல்வண்ணன் பொற்பதுமப் போதிற் புவனச்
செயல்வண்ணங் காட்டிய சேயோன்—உயிரனைத்தும்
2. காட்டும் பதின்மரினுங் காசிப னேழ்புரவி
பூட்டுந் தனியாழிப் பொற்றேரோன்—ஓட்டி
3. அறவாழி மைந்தன்மே லூர்ந்தோ னவனி
புறவாழி முட்டப் புரந்தோன்—மறையோற்குப்
4. பூவிற் கிழத்தியையும் பூமிக் கிழத்தியையும்
நாவிற் பழுதஞ்சி நல்கினோன்—வாவியிற்
5 புக்க துறையிற் பகைப்புலியும் புல்வாயும்
ஒக்க வொருகாலத் தூட்டினோன்—புக்கால்

---

## குறிப்புரை

(கு - ரை) 1. புயல் வண்ணன் - திருமால். பொற்பதுமப்போதில் - அழகிய உந்தியாகிய தாமரைப்பூவில். புவனச்செயல் வண்ணம் - உலகங் களின் படைப்பின் தன்மையை. சேயோன் - சிவந்த நிறமுடைய பிரம தேவன்; கலிங்கத். 1.

(பி - ம்) * 'இராசேந்திர சோழனுலா'

1-2. உயிரனைத்தும் காட்டும் - உயிர்களின் வகைகள் அவ்வளவை யும் படைத்த. பதின்மர் - தசப்பிரஜாபதிகள். தனியாழி - ஒற்றைச் சக்கர முடைய. தேரோன் : சூரியன்; விக்கிரம. 3.

(பி - ம்) 2. 'காட்டொன்பதின்மரினும்'

2-3. அறவாழி ஓட்டி - தரும சக்கரத்தைச் செலுத்தி. ஊர்ந்தோன் - தேரை ஊர்ந்தவனாகிய ஆதி மனு; விக்கிரம. 4; குலோத். 2. அவனி - பூமியை. புறவாழிமுட்ட - பெரும்புறக்கடல் முடிய. மறையோற்கு - விசுவாமித்திர முனிவனுக்கு.

4. பூவிற்கிழத்தி - திருமகள். பூமிக்கிழத்தி - பூமிதேவி. நாவிற்பழுது - பொய்க்கு. நல்கினோன் : அரிச்சந்திரன். வாவி - குளம்.

(பி - ம்) 'பழுதஞ்ச'

5. புல்வாய் - மான். ஊட்டினோன் : மாந்தாதா; விக்கிரம. 5; குலோத். 7, குறிப்பு. புக்கால் - அடைக்கலமடைந்தால்.

(பி - ம்) 'புக்குத்'

6. மருனிறை யென்று சரணடைந்த வஞ்சப்
புருநிறை புக்க புகழோன்—அருநீர்த்
7. தரங்கக் கடலேழுந் தன்பெயரே யாகத்
துரங்கப் பசுநாடித் தொட்டோன்—வரங்கொள்
8. சுரநதி தன்பெய ராகச் சுருதி
வரனதி சாபத்தை மாய்த்தோன்—தரணிபர்
9. மல்லன் மரபை ரகுவின் மரபென்று
சொல்ல வுலகளித்த தொல்லையோன்—செல்லலால்
10. வந்திரந்த வானவர்க்குத் தானவர்தம் போர்மாய
இந்திரனை யேருக்கி யேறினோன்—முந்தும்

---

6. இறைமருனென்று - சிறிதும் மறுக்கமாட்டானென்று ; இறையும் என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது ; இறை - அரசன் எனினுமாம். சரணடைந்த - அடைக்கலமடைந்த. வஞ்சப் புருநிறை - வஞ்சனையையுடைய புருவினது நிறைக்காக. புக்க - தராசிலே புகுந்த. புகழோன் : சிபி ; விக்கிரம. 11 ; குலோத். 17. அருநீர் - வற்றாத நீரையுடையி.

7. தன் பெயரேயாக - 'ஸாகரம்' என்னும் பெயரையுடையனவாக ; "சகரர் தொட்டலாற் சாகர மெனப்பெயர் தழைப்ப, மகர வாரிதி சிறந்தது" (கம்ப. அகலிகைப். 43.) துரங்கப் பசு - குதிரையாகிய யாகப் பசுவை. தொட்டோன் - தோண்டினவன் ; சகரன். வரம்கொள் - மேன்மையைக் கொண்ட.

8. சுரநதி - கங்கை. தன் பெயர்ஆக - பாகீரதி எனத் தன் பெயரால் விளங்க ; "சகரர் தம்பொருட் டருந்தவம் பெரும்பகற் றள்ளிப், பகிர தன் கொணர்ந் திடுதலாற் பகீரதி யாகி" (கம்ப. அகலிகைப். 61.) சுருதிவரன் - கபிலமுனிவர். அதி சாபத்தை - மிகக் கொடிய சாபத்தை. மாய்த்தோன் : பகீரதன் ; குலோத். 8. தரணிபர் - அரசருடைய.

(பி - ம்) 'தன்பெயரேயாக', 'வரநதி'

9. மல்லல் மரபை - வளப்பத்தையுடைய வமிசத்தை. தொல்லையோன் - ரகு. செல்லலால் - துன்பத்தால்.

(பி - ம்) 'சொல்லலால்', 'சொல்லதனுல்', 'சொல்லாமல்'

10. வந்து - பூமிக்கு வந்து. வானவர்க்கு - தேவர்கள் பொருட்டு. தானவர் - அசுரர். ஏருக்கி - காளையாக்கி. ஏறினோன் : ககுத்தன் ; குலோத். 3; கலிங்கத். 188 ; "தான்றனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்தென், வான்றரக்கிற் றிகொலென்று குறையிரப்ப வரங்கொடுத்தாங், கேன்றெடுத்த சிலையினனொ யிகல்புரிந்த விவர்குலத்தோர், தோன்றலைப்பண் டிந்திரன்காண் விடையேருய்ச் சுமந்தானும்" (கம்ப. குலமுறை. 3.) முந்தும் - முற்பட்டுச் செல்லும்.

(பி - ம்) 'போர் மாள'

11. ஒருதேரா லையிரண்டு தேரோட்டி யும்பர்
வருதேரால் வான்பகையை மாய்த்தோன்—பொருது
12. சிலையால் வழிபடு தெண்டிரையைப் பண்டு
மலையால் வழிபட வைத்தோன்—நிலையாமே
13. வாங்குந் திருக்கொற்ற வாளொன்றின் வாய்வாய்ப்பத்
தூங்கும் புரிசை துணித்தகோன்—வீங்கு
14. குடகடற்குச் சார்பு குணகடலே யாக்கும்
வடகடற்குந் தென்கடற்கு மன்னன்—முடுகிக்
15. கரையெறிந்த பொன்னி கடலேழுங் கோப்ப
வரையெறிந்த மன்னர்க்கு மன்னன்—தரையின்
16. பெருமகளைத் தீவேட்ட பின்னருஞ் சேடன்
திருமகளைக் கல்யாணஞ் செய்தோன்—பரநிருபர்

---

11. ஐயிரண்டுதேர் - சம்பரனுடைய பத்துத் தேர்களை. உம்பர்வரு தேரால் - தேவலோகத்திலிருந்து வந்த தேரால். வான்பகை : சம்பரனை. மாய்த்தோன் : தசரதன் ; குலோத். 9.

(பி - ம்) 'பொருத'

12. சிலையால் - வில்லால். வழிபடுதெண்டிரை - தான் வணங்கிய கடலை. வழிபட - வழியுண்டாகும்படி. சிலையால் வழிபட என இயைக்க. வைத்தோன் : இராமன்.

(பி - ம்) 'வழிபடாத்'

13. தூங்கும் புரிசை - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் மதில்களை. கோன் - தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் ; விக்கிரம. 9; குலோத். 13.

(பி - ம்) 'வாங்கு', 'தூங்கு'

14. குடகடல் - மேல்கடல். குணகடல் - கீழ்கடல். ஆக்கியவன் : ஸம்ஹார்ஷண சக்கரவர்த்தி ; குலோத். 14. முடுகி - விரைந்து.

15. பொன்னி - காவிரியாறு. கடலேழும் கோப்ப - எழு கடல்களிலும் கலக்கும்படி. வரைஎறிந்த - நடுவேயுள்ள மலைகளை வெட்டிய. மன்னன் : சிவகன் ; விக்கிரம. 12; குலோத். 15. "ஒழுகு பெருநதி யுவரி சிறிதென வுமிழவொரு பனை வெட்டினன்", "ஒருபனை கிழித்ததனிலு வரிசிறுகப் பெருக வொருநதி வகுத்தறிவோம்" (குலோத். பிள்ளைத். 48, 53) என்பவற்றிற் குறிப்பிடும் வரலாறு இதுபோலும்.

(பி - ம்) 'கடலெழுந்தோர் காப்ப' 'மன்னன் திரையின்'

16. தரையின் பெருமகளை - பூமிதேவியை. தீவேட்ட பின்னரும் - நெருப்பின் முன்னே மணஞ் செய்துகொண்ட பின்பும் ; "அவனிமாதெனும், ஒரு மகண் மணமுங்கண்டு" (கம்ப. மந்திரப். 29.) சேடன் திருமகளை - நாககன்னிகையை. செய்தோன் : கிள்ளிவளவன் ; விக்கிரம. 10; குலோத். 19; கலிங்கத். 195. பரநிருபர் - மற்ற அரசருடைய.

(பி - ம்) 'பொரு நிருபர்'

17. கன்மலை மார்புங் கடவுள் வடமேருப்
பொன்மலை மார்பும் புலிபொறித்தோன்—சொன்மலைய
18. நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு
வில்லவன் காற்றளையை விட்டகோன்—புல்லார்
19. தொழும்புடைய வாகத்துத் தொண்ணூறு மாறும்
தழும்புடைய சண்டப்ர சண்டன்—எழும்பகல்
20. ஈழ மெழுநூற்றுக் காதமுஞ் சென்றெறிந்து
வேழந் திறைகொண்டு மீண்டகோன்—சூழி

---

17. கன்மலை மார்பும் - கற்களையுடைய மலையைப் போன்ற மார்பிலும். சிற்றரசர், பேரரசருடைய கொடி முதலியவற்றைத் தம் மார்பில் பொறித்துப் பணிவைப் புலப்படுத்தல் மரபு: "இடுகொடி யணிந்த மார்பர்" (சீவக. 2145); "மீளிவன் கொடிவிடை வேந்தர் மார்பினும், தோளினுந் தீட்டிய தொண்டை மன்னவா" (சாஸனப்பாடல்); "தாரு முடியு முரசுந் தமக்குரிய, பாரு முடன்பெறுவர் பார்வேந்தர்-வீரப், பெருமான் மகதேசன் பேரெழுதித் தத்தம், திருமார்பி லாளோலை செய்து", "பேரரசர் தேவிமார் பெற்ற மதலையர்தம், மார்பகலங் கண்டு மகிழ்வரே - போர்புரியு, வல்லானகளங்கன் வாணன் றிருநாமம், எல்லா மெழுதலா மென்று", "மேவலர் மார்பினுந் திண்டோ ளினுஞ்செம்பொன் மேருவினும், சேவெழு தும்பெருமான்" (பெருந்தொகை, 1158, 1182, 1205.) கடவுள் வடமேரு - தெய்வத் தன்மையுள்ள வடக்கேயுள்ள மேருவாகிய. மலைமார்பும் - மலையினது நடுவிடத்திலும்; மார்பு - நடுவிடம்; "குன்றின், நெஞ்சு பகவெறிந்த வஞ்சுடர் நெடுவேல்" (குறுந். கடவுள்); "விஞ்சையம் பெருமலை நெஞ்சகம் பிளந்து" (பெருங். 1. 51 : 8.) புலிபொறித்தோன் : கரிகாலன்; விக்கிரம. 13, குறிப்பு. சொன்மலைய - சொற்களின் தொகுதியையுடைய; புகழைச் சூட எனினும் ஆம். (பி - ம்) 'சொன்மலை'

18. பொய்கை : பொய்கையாரென்னும் புலவர். வில்லவன் - சேரமான் கணைக்காலிரும்பொறை. காற்றளை - கால்விலங்கை. கோன் - செங்கணன்; விக்கிரம. 14; குலோத். 20. புல்லார் - பகைவர்.

19. தொழும்புடைய ஆகத்து - வணங்கும் பரப்பையுடைய மார்பில்; புடை - பரப்பு. தொண்ணூறும் ஆறும் தழும்பு - தொண்ணூற்றாறு தழும்புகள். தழும்புகளே வீரத்திற்குரிய அடையாளமாதலின் அதனை எடுத்துக் கூறினர்; "அலகில் வெற்றியு முரிமையு மிவையென அவயவத்தினி லெழுதிய வறிகுறி, அவையெ னப்பல வடுநிரை யுடையவர்" (கலிங்கத். 353); விக்கிரம. 15; குலோத். 21. சண்டப்ரசண்டன் - வீரருக்குள்ளே சிறந்த வீரன்; இவன் முதலாம் இராசராசன்.

(பி - ம்) 'தொழும்புடையாகத்துத்', 'எழும்புகலி', 'எழுபகலில்'

20. ஈழம் - இலங்கை. எழுநூற்றுக் காதம்: "குறுகு கழல் வீரர் பொருதுபடு மீழ முடைய வெழுநூறு மடையமீக் குடருநிரை நீரின் முதிய

21. மதகயத்தா லீரொன் பதுசுரமு மட்டித்
துதகையைத் தீத்த வுரவோன்—முதுவானக்
22. கங்கையு நன்மதையுங் கௌதமியுங் காவிரியும்
மங்கையுட ளுடு மரபினேன்—பொங்கி
23. அலைவீசு வேலை யனைத்தினும்போய்த் தெம்மீன்
வலைவீசி வாரிய மன்னன்—கொலையானை
24. பப்பத் தொருபசிப்பேய் பற்ற வொருபரணி
கொப்பத் தொருகளிற்ருற் கொண்டகோன்
—ஒப்பொருவர்
25. பாட வரிய பரணி பகடொன்றின்
கூடல சங்கமத்துக் கொண்டகோன்—நாடும்

---

கடலூடு புதியகடல் காணு மிரவி" (குலோத். பிள்ளைத். 63.) வேழம் - யானைகளை. ஈழம் யானையில் சிறந்ததென்பது "கொங்க ருடல்கிழிய......ஈழத்தா னிட்ட விறை" (பெருந். 924) என்னும் பாடலாலும் அறியப்படும்; கோன் : இவன் முதலாம் பராந்தகன். சூழி - முகபடாத்தையுடைய.

21. ஈரொன்பது சுரம் - பதினெட்டுப் பாலை நிலங்கள். உதகை : விக்கிரம. 17, குறிப்பு; குலோத். 24; "பறிப்ப வெழிற்பதி னெண்சுரமும் பொடி யாமடியப் பெயரும் பண்டித சோழன் மகற்கு மகன் பெறு மன்னவர் மன்னவனே" (குலோத். பிள்ளைத். 42.) தீத்த - சுட்ட; இஃது எரிபரந் தெடுத்தலென்னும் துறை. உதகையைத் தீத்தமை: "உதியர் குதிபாய வுதகையெழ வேவ வுவரிதிரைதீய வுடலினோர்" (குலோத். பிள்ளைத். 58.)

(பி - ம்) 'தீர்க்க', 'தீயுய்த்த' 'முதுவடிவாம்', 'முதுவரவிற்', 'முதுவறற்'

22. மங்கையுடன் - தன் தேவியோடு. மரபினன் : இராசேந்திர சோழன்.

(பி - ம்) 'காவிரியுஞ் சிந்துவும்'

23. வேலை - கடல். தெம்மீன் - பகைவர்களாகிய மீன்களை. வலைவீசி வாரிய - போராகிய வலையை வீசிப்பிடித்த. மன்னன் : இராசேந்திர சோழன்.

(பி - ம்) 'அகத்தினும் போய்' 'நிலையானை'

3-4. கொலையானை பப்பத்து - கொலைசெய்யும் யானைகள் பத்துப் பத்தை. பற்ற - தன் உணவிற்காகக் கொள்ள. ஒரு பரணி - ஒப்பற்ற பரணியை. கொப்பம் : விக்கிரம. 20, குறிப்பு. ஒப்பொருவர் - ஒப்பாக வேறொருவர். (பி - ம்) 'வெப்பொருவர்'

25. பாடவரிய - பாடுதற்கு முடியாத. பகடொன்றின் - ஒரு யானையால். கூடலசங்கமம் : விக்கிரம. 21-2, குறிப்பு.

(பி - ம்) 'பரணி பகட்டணி வீழ்' 'கூடலார் சங்கமத்து'

26. கலகமுஞ் சுங்கமுங் காய்கலியு மாற்றி
உலகை முன்காத்த வுரவோன்—பலவும்
27. தரணி யொருகவிகை தங்கக் கலிங்கப்
பரணி புனைந்த பருதி—முரணில்
28. புரந்தர னேமி பொருவு மகில
துரந்தரன் விக்கிரம சோழன்—பரந்தபனென்
29. ருய பெயர்கொண் டகிலாண் டமும்புரந்து
சேய பெரிய திருக்குலத்து—நாயகன்
30. சிற்றம் பலமுந் திருப்பெரும்பே ரம்பலமும்
மற்றும் பலபல மண்டபமும்—சுற்றிய
31. மாளிகையும் பீடிகையு மாடமுங் கோபுரமும்
சூளிகையு மெத்தெருவுந் தோரணமும்—ஆளுடையான்

---

26. கலகம் - சோழநாட்டில் ஏற்பட்ட குழப்பம்; கலிங்கத். 258-60. சுங்கம்: விக்கிரம. 26, குறிப்பு; குலோத். 26. காய்கலி - மக்களை வருத்து கின்ற கலியின் துன்பம். உரவோன் - முதற் குலோத்துங்க சோழன்.

(பி - ம்) 'மக்கலியும்' 'உலகமுன்'

26-7. பலதரணியும் என உம்மையை மாறிக் கூட்டுக. கலிங்கப் பரணி: இப்பெயருடைய ஒரு நூல் விக்கிரம சோழன்மீது ஒட்டக் கூத்த ரால் இயற்றப்பெற்றது; "செருத்தந் தரித்துக் கலிங்க ரோடத் தென் றமிழ்த் தெய்வப் பரணிகொண்டு, வருத்தந் தவிர்த்துல காண்ட பிரான் மைந்தற்கு மைந்தனை வாழ்த்தினவே" (தக்க. 776); 'இப்பரணி பாடினர் ஒட்டக்கூத்தரான கவிச்சக்கரவர்த்திகள்; இப்பரணி பாட்டுண்டார் விக்கிரமசோழ தேவர்' (மேி, உரை); குலோத். 28-9. பருதி: விக்கிரம சோழன். முரண் இல் - மாறுபாடில்லாத.

(பி - ம்) 'தாங்கக் கலிங்கப்' 'பருதிவரத'

28. புரந்தரன் நேமி பொருவும் - இந்திரனையும் திருமாலையும் ஒத்த; "நீரிடைக் கண்டுயி னெடிய நேமியும்", "நேமியோ குலசியோ நெடுங்க ண்சிசியோ" (கம்ப. மிணிவிட்டு. 17, 70.) பரந்தபன் - பகைவரை வருத்து பவன்.

(பி - ம்) 'பொருத வகில', 'பொருவ வகில' 'துரந்தரன் ராசேந்த்ர' 'பரந்தம னென்று', 'பரந்தக னென்று'

29. சேய - படைப்புக் காலந்தொட்டு வந்த.

(பி - ம்) 'ருயபெயரன்' 'புரந்த'

30-33. இக்கண்ணிகளில் இரண்டாம் குலோத்துங்கன் தில்லையில் செய்த திருப்பணிகள் கூறப்படும்.

31. மாளிகை - திருமாளிகைப் பத்தி. பீடிகை - ஸ்ரீபீடம்; தக்க. 773. சூளிகை - மேல்மாடம். ஆளுடையான் - ஸ்ரீ நடராசப்பெருமானது.

32. கோயிற் றிருக்காமக் கோட்டமு மக்கோயில்
வாயிற் றிருச்சுற்று மாளிகையும்—தூயசெம்
33. பொன்னிற் குயிற்றிப் புறம்பிற் குறும்பனைத்தும்
முன்னிற் கடலகழின் மூழ்குவித்த—சென்னி
34. திருமகன் சீராச ராசன் கதிரோன்
மருமக னாகி மறித்தும்—திருநெடுமால்
35. ஆதிப் பிறவி யனைத்தினு மும்பர்க்குப்
பாதிப் பகைதடிந்து பாதிக்கு—மேதினியிற்
36. செந்தா மரையா டிருமார்பில் வீற்றிருக்க
வந்தான் மனுவங்க்ச மாமேரு—முந்தி
37. உடுத்த திகிரிப் பதினா லுலகும்
அடுத்த வரராச ராசன்—அடற்றிகிரிக்

---

32. திருக்காமக் கோட்டம் - அம்பிகையின் கோயில். திருச்சுற்று மாளிகை - மதில்.

33. புறம்பிற் குறும்பு என்றது திருமாலை. கடலாகிய அகழிலே; **குலோத்.** 39; "முன்றிற் கிடந்த தடங்கடல்போய் முன்னைக் கடல்புகப் பின்னைத் தில்லை, மன்றிற் கிடங்கண்ட கொண்டல்" (தக்க. 777.) சென்னி- இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய. தில்லைத் திருப்பணி: **குலோத்.** 38-58.

(பி - ம்) 'குறும் பெறிந்து', 'குயிற்றிப் புறத்தாற் பொதுநீக்கி' 'முன்னர்க்கட', 'முன்னைப் புவன முழுதாண்ட'

34. கதிரோன் மருமகனாகி - சூரியனுடைய வழித்தோன்றலாகி. மறித்தும் - திரும்பவும்.

(பி - ம்) 'மருமகனாக'

35. ஆதிப்பிறவி - பத்து அவதாரங்கள். உம்பர்க்கு - தேவருக்கு. பகை தடிந்து - பகைவர்களை அழித்து. பாதிக்கு - அழிக்கப்படாமல் நின்ற பாதியை அழித்தற்கு.

(பி - ம்) 'அனைத்தினும்போ யும்பர்க்குப்' 'தடிந்த'

36. செந்தாமரையாள் - திருமகள். மனுவங்க்ச மாமேரு - மனுகுலத் தரசர்களுள் பெரிய மேரு போன்றவன்.

37. திகிரி - கடல். அடுத்த - பொருந்திய. வரராசராசன்; பாட்டுடைத் தலைவன் பெயர்; "வரராச ராசன் கை வாளென்ன வந்தே", "வாழி வரராச ராசனே" (தக்க. 549, 812.) அடல்திகிரி - பகைவரை அடுதலையுடைய சக்கரத்தை ஏந்திய.

(பி - ம்) 'தடற்றிகிரிக் கண்ணனன்'

38. கன்னன் கனகளபன் கண்டன் கதிரோனும்
தண்ணென் கவிகைச் சனநாதன்—எண்ணும்
39. தவன குலதிலகன் றன்பெருந் தேவி
புவன முழுதுடைய பூவை—அவனியில்
40. எண்பெரு மாதிரத்து மேறு முடனுணைப்
பெண்பெருமா ளந்தப் புரப்பெருமாள்—மண்பரவ்
41. ஓகை விளக்கு முபய குலரத்னத்
தோகை யுடனே துயிலெழுந்—தாகிய
42. மூர்த்தத் தனந்த முரசார்ப்பக் காவிரித்
தீர்த்தத் தபிடேகஞ் செய்தருளிப்—போர்த்திகிரி
43. மேலைக் குரவர்க்கும் விண்ணவர்க்கும் வேதியர்க்கும்
காலைக் கடவ கடன்கழித்து—மூலப்

---

38. கன்னன் : திருமால். கனகளபன் : "கருமாமுகிற் றிருநிறத்துக் கனகளப ராசராசன்" (இரண்டா மிராசராசன் மெய்க்கீர்த்தி.) கண்டன் : இரண்டாமிராசராசனுடைய சிறப்புப் பெயர் ; இராசராச. 257, 260, 317, 373 ; 'கண்டனென்றது சிறப்புப் பெயர் ; இதனை இயற்பெயரென்று மயங்காதொழிக ; இராசராசனென்பது இயற்பெயர்' (தக்க. 549, உரை.) : 'கண்டனலங்காரம்' என்னும் ஒரு நூல் இவன் பெயரால் இயற்றப்பட்டது போலும். கதிரோனும் தண்ணென் - சூரியனும் குளிர்கின்ற. சனநாதன் : இஃது இரண்டாம் ராஜராஜனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்று ; "பண்சிலம்ப வண்டாடும் பைந்தார்ச் சனநாதன்" (கண்டனலங்காரம்.) எண்ணும் - மதிக்கப்படும்.

(பி - ம்) 'கண்ண னகளங்கன்', 'கண்ணன் கலைகள்வன்' 'கதிரோன்மன்' 'சனராசன்'

39. தவனகுலம் - சூரியகுலம். புவன முழுதுடைய பூவை : இவள் பெயர் மெய்க்கீர்த்தியில் அவனி முழுதுடையாளென்று காணப்படுகின்றது. மாதிரத்தும் - திசைகளிலும். உடனுணைப் பெண் பெருமாள் - உடன் ஆணை செலுத்தும் தேவி ; பெண் பெருமாள் : 'பெண் பெருமாளுக்குப் பிள்ளையார் அருளிச் செய்வார்' (தக்க. 184, உரை.) ; "நஞ்சிலே தோய்ந்த நளினவிழிப் பெண்பெருமாள், நெஞ்சிலே யிட்ட நெருப்பு" (தனிப்பாடல்.)

41. ஓகை - மகிழ்ச்சியை.

42. மூர்த்தத்து - முகூர்த்தத்தில். அனந்த முரசு - பல முரசுகள். காவிரித் தீர்த்தத்து - காவிரி நீரால். போர்த்திகிரி - போரைச் செய்யும் ஆக்ஞா சக்கரத்தையுடைய.

(பி - ம்) 'காவேரித்'. 'காவிரியிற் றீர்த்தமபிடேகஞ்'

43. மேலைக்குரவர்க்கும் - தன் குலத்திலிருந்த முன்னோருக்கும். விண்ணவர்க்கும் - தேவர்களுக்கும். வேதியர்க்கும் - அந்தணர்க்கும். காலைக் கடவ கடன் - காலையில் செய்யவேண்டிய கடன்களை. அந்தணர்க்குக்

44. பெரும்பே ரணிதம் பிதாமகன் காலை
வரும்பே ரணியென்ன வாய்ப்ப—விரம்பப்
45. பவளச் சடையோன் பணித்த படியே
தவளத்ரி புண்டரஞ் சாத்திக்—குவளைப்பூங்
46. கார்க்கோல மாடியிற் காண்பான் மகன்காமன்
போர்க்கோலங் காண்பானே போற்கண்டு-பார்த்திபர்தம்
47. தொல்லைத் திருமரபுக் கெல்லாந் தொழுகுலமாம்
தில்லைத் திருநடனஞ் சிந்தித்து—வல்லவர்
48. சூழச் சுருதி யனைத்துந் தொகுத்தெடுப்ப
வேழப் பெருமானை மேல்கொண்டு—வாழி

---

காலையிற் செய்யும் கடன் கோதானம்; இஃது 'அரசன் ஆகொடுக்கும் பார்ப்பான்' (தொல். வினை. 37, சே) என்ற உதாரணத்தாலும் 'கபிலை அண்ணிய புண்ணிய நிலை' (பு. வெ. 202) என்பதனாலும் அறியப்படும்.

(பி - ம்) 'மேலைக் குருசிற்கும்'

44. மூலப் பெரும் பேரணி - கிரீடம். தம் பிதாமகன் என்றது சூரியனை. பேரணியென்ன - பெரிய அழகைப் போல.

(பி - ம்) 'தன் பிதாமகன்'. 'பெரும் பேரணிகள்'

45. பவளச் சடையோன் - சிவபெருமான். பணித்தபடி - ஆகமங்களிற் கூறியபடி. தவளத்ரி புண்டரம் - வெள்ளிய திருநீற்றாலாகிய மூன்று கீற்றை.

45-6. குவளைப்பூங் கார்க்கோலம் - குவளைப் பூவைப்போன்ற அழகிய கரிய நிறத்தை.

(பி - ம்) 'பணித்த பணியே'

46. ஆடியில் - கண்ணாடியில். காமன் போர்க்கோலம் - மன்மதனுடைய போருக்குரிய அலங்காரத்தை. கார்க்கோலத்தை ஆடியிற் கண்டு என்ன இயைக்க.

46-7. பார்த்திபர்தம் தொல்லைத் திருமரபுக்கு - சோழ அரசருடைய பழைய குலத்தில் தோன்றியவர்க் கெல்லாம்.

47. தில்லைத் திருநடனம் சிந்தித்து : குலோத். 38; "எல்லையி லனந்தமூல வேதசுர கீதத் திசைத்தபல தாளவழி யிட்டுமெழ விட்டும், தில்லையினடஞ் செய்கம லங்களை வணக்குஞ் சிந்தையபயா" (குலோத். பிள்ளைத். 87) என்று இரண்டாங் குலோத்துங்கனைப்பற்றிக் கூறியிருப்பதும் இங்கே யறியத் தக்கது. (பி - ம்) 'திருநடமும்'

48. எடுப்ப - எடுத்து ஓத. வேழப் பெருமான் - பட்டத்துயானை; இராசராச. 283, 300; இது 'குதிரை நம்பிரான்' (சீவக. 2157, ந.) என்பது போன்ற ஒரு வழக்கு. மேல்கொண்டு - ஏறி.

(பி - ம்) 'எடுத்தவேழப்பெருமானை'

49. அரச வலம்புரி யார்ப்ப வதன்பின்
முரசொரு மூன்று முழங்கத்—திரையின்
50. சுடற்பொற் கவரி யெழப்பொங்கத் தொங்கற்
கடவுட் கவிகை கவிப்ப—புடவியின்
51. மீட்டுங் குறையவுணர் போர்கருதி விண்ணவர்கோன்
தீட்டுங் கொடிப்புலியாய்ச் சேவிப்ப—வாட்டானைத்
52 தென்னருஞ் சேரலருஞ் சிங்களருங் கொங்கணத்து
மன்னரு மாளவரு மாகதரும்—பின்னரும்
53. காந்தாரர் காலிங்கர் கௌசல ருள்ளிட்ட
பூந்தார் நரபாலர் முன்போத—வேந்தர்
54. பொருவாத பூபால கோபால னென்னும்
திருநாம நின்று சிறக்க—வருநாளில்

---

49. அரசவலம்புரி - அரசனுக்குரிய ஒற்றை வலம்புரிச்சங்கு. முரசு மூன்று : விக்கிரம. 28, குறிப்பு. திரையின் - பாற்கடலின் திரையைப்போல; கவரிக்குத்திரை : "திருப்பாற் கடற்றிரையிரண்டு வந்தென வெங்கும் வீடா வென விரு மருங்குங்கவரி யிரட்டவே" (தக்க. 284); "பாலின்வெண் பரவைத் திரைகருங் கிரிமேற் பரந்தெனச் சாமரை பதைப்ப" (கம்ப. கிந் தனை. 16.) தொங்கல் - மாலைகளையணிந்த. பொங்கர்த்தொங்கல் என்ற பாடத்துக்குச் சோலையைப்போன்ற மயிற்பீலிக்குடை என்று கொள்க. கடவுட் கவிகை - தெய்வத்தன்மையையுடைய வெண்கொற்றக்குடை.

(பி - ம்) 'வலம்புரியூத'

50. (பி - ம்) பொங்கர்த் தொங்கற்'

51. குறையவுணர் - முன்புகொல்லப்படாமல் குறையாகவுள்ள அசுரரது. விண்ணவர் கோன் - இந்திரன்; இந்திரனுக்கும் புலிக்கொடிக்கும் உள்ள சம்பந்தம் விளங்க வில்லை; 91.

52. சிங்களர் - இலங்கையரசர். கொங்கணத்து மன்னர் - கொங்கானத்திலுள்ள சிற்றரசர்.

52. காந்தாரர் - காந்தார நாட்டரசர். கௌசலர் - கோசலதேசத்தரசர். பூந்தார் - தமக்குரிய அழகிய மாலை.

53-4. வேந்தர் பொருவாத - ஏனை அரசர்தனக்கு ஒவ்வாத; "பிறர்க்கு நீ வாயி னல்லது நினக்குப், பிறருவம மாகா வொருபெரு வேந்தே" (பதிற். 73 : 2-3); "பிறர்க்குவமந் தானல்லது, தனக்குவமம் பிறரில்லென" (புறநா. 377 : 10-11).

(பி - ம்) 'கோசலரு முன்னிட்ட'

54. பூபால கோபாலன் : மற்ற அரசர்களாகிய ஆக்களைக்காப்பவன்; இப்பொருள், "கோலெடுத்துக் கோத்துரத்துங் கோகனகச் செங்கைவடி, வேலெடுத்துங் கோத்துரத்தல் விட்டிலனே - சால்படுத்த, பூபால னினும்

55. தென்மாடக் கூடற் சிறைவிட்ட கார்புகார்ப்
பொன்மாட வீதிப் பொடியடக்கத்—தன்மீது
56. கன்மாரி பெய்யும் பிழையாற் கடவுளர்கோன்
பொன்மாரி பெய்யும் புயலேவப்—பின்னரும்
57. காமாரி சேயென்றே காக்கு மெழுவரினும்
பூமாரி கௌமாரி முன்பொழிய—யாமந்தீர்
58. காலை வெயிலொதுங்கக் கார்களாற் கார்களும்போய்
மாலை வெயிலால் மறித்தொதுங்க—கோலப்
59. பெருங்குற் றுடைவாளப் பேரொளி மேரு
மருங்கிற் பெரும்புலி மான—நெருங்கிய
60. கோளி னொழுங்கு மழுங்கக் குலரத்ன
ஒளி மகர வொளியெறிப்பத்—தோளில்

---

போமோ பராந்தகற்குக், கோபால னை குணம்'' (தனிப்பாடல்) என்னும் பாடலிலும் அமைந்துள்ளது.

(பி - ம்) 'பொருதாத பூபாலர்' 'சிறக்க வருளினால்'

55. கூடற்சிறை விட்ட - மதுரையிலே சிறையிலிருந்து விடுவித்த; குலோத். 78; சிலப். 11 : 26-9. கார் - மேகம். புகார்ப்பொன் மாடவீதி - காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள பொன்னாற் செய்த மாடங்களையுடைய வீதிகளினது. தன்மீது - கண்ணபிரானாக அவதரித்த தன்மேல்.

(பி - ம்) 'சிறைமீட்ட' 'பொடியடங்க'

56. கல்மாரி - கல்போன்ற மழையை. பெய்யும் பிழையால் - பெய்த குற்றத்தால். கடவுளர்கோன் - இந்திரன். பொன் மாரி பெய்யும் புயல் - பொன் மழையைப் பொழியும் புட்கலாவர்த்தம் என்னும் மேகத்தை.

(பி - ம்) 'புயலேய்ப்ப' 'பின்வரும்'

57. காமாரி சேய் - முருகக் கடவுள். எழுவரினும் ஸப்தமாதர்களிலும். பூமாரி - பூமழையை. கௌமாரி - ஸப்தமாதர்களில் ஒருத்தி.

57-8. யாமந்தீர்காலை - இரவு நீங்கிய காலையில்; யாமம் - இரவு; "யாம மும்பக லும்மறி யாமையால்" (சீவக. 135.)

58. கார்களால் வெயில் ஒதுங்க; கார், நீர்த்திவலையைச் சிந்திவந்தது: "மேகத்தொரு பந்த ரெடுத்துடுவாம் வெண்முத்த மொழுக்கி மினற் கொடியால், மாகத்து நிரைத்து மழைச்சிலையால் வழிதோரண மிட்டனன் வாசவனே" (தக்க. 182.) மாலை வெயிலால் - மாலைகளிலுள்ள மணியின் ஒளியால். கார்களும் மறித்து ஒதுங்க - மேகங்களும் மறுபடியும் ஒளி மழுங்கிச் செல்ல.

59. உடைவாளுக்குப் புலி உவமை. மேருமருங்கிற் புலி யென்றது சோழர் மேருவில் தீட்டிய புலிக்கொடியை.

60. கோளின் ஒழுங்கு - ஒன்பது கோள்களின் ஒழுங்கும். மழுங்க - ஒளி கெடும்படி. ஒளி - வரிசை; "உம்பர்க் கேயு மாளிகை யோளி நிழல்

61. இருபொறை தீரு மிருபாப் பரசும்
இருதொடி யாயகொல் லென்ன—வரரத்னம்
62. தாமே குயின்று தடங்கோளு நாளுஞ்சூழ்
மாமேரு வென்ன முடிவயங்கப்—பூமேற்
63. புடைநிலவுந் தங்கள் புகழ்நிலவின் மேலே
குடைநிலவுஞ் சக்ரகிரி கோல—உடையதன்
64. கைவைத் தருளாமே தாமே கடன்கழிக்கும்
தெய்வப் படையைந்துஞ் சேவிப்பப்—பெய்கணைத்

---

பாய்" (கம்ப. மிதிலைக்காட்சி. 22.) மகரவொளி - மகரவடிவமான காதணியின் ஒளி. நவமணிகளாற் செய்த காதணியின் ஒளியால் ஒன்பது கோள்களும் ஒளி மழுங்கின; "அன்புறு பதும ராக மாதியா மரத னங்கள், ஒன்பதுங் கதிரோ னாதி யொன்பது கோளு மேற்றி" (திருவிளை. மாணிக்கம் விற்ற. 52.)

(பி - ம்) 'மலர்ந்த குலரத்னத், தோளி'

61. இருபொறை தீரும் - இரண்டு பாரங்கள் நீங்கிய. இரு பாப்பரசு. ஆதிசேடன், வாசுகி. தொடிக்குப் பாம்பு உவமை; 95. வரரத்னம் - மேலான மணிகள்.

(பி - ம்) 'இருந்தொடி' 'வரகனகம்'

62. குயின்று - அமைக்கப் பெற்று. கோள் - கிரகம். நாள் - நட்சத்திரம். முடி - கிரீடம். கிரீடத்திலுள்ள இரத்தினங்களுக்குக் கோளும் நாளும் உவமை. பூமேல் - பூமியில்.

(பி - ம்) 'பூமிப்'

63. புடை நிலவும் - சுற்றிலும் விளங்குகின்ற; என்றது சோழருடைய புகழ் பூமிமுழுதும் பரவி அஃது இடங்கொள்ளாமையால் அதனைச் சுற்றிலும் நின்றது என்பது கருத்து; "சுழலுமிசை வேண்டி" (குறள், 777, பரிமேல்.), "மண்டேய்த்த புகழினன்" (சிலப். 1 : 36) என்பதும் 'பூமி சிறுகும்படி வளர்ந்த புகழ்' (அரும்பதவுரை) 'மண்தேய்த்த' என்றார் புகழ்வளரப் பூமி சிறுகலான்; மண் இடத்திற் சிறிதுஎன்றார் வள்ளுவனாரும்' (அடியார்க்கு நல்லார்) என்னும் அதன் உரைகளும் இக்கருத்துப்பற்றியன. புகழாகிய நிலவு. குடை நிலவும் - குடையினுடைய வெண்மையான ஒளியும். சக்ரகிரி கோல - சக்ரவாளகிரியைத் தனக்குள்ளே அகப்படுத்த.

(பி - ம்) 'புகழ்நிலவின் மீதே'

64. படை ஐந்து - சக்கரம் முதலிய ஐந்து ஆயுதங்கள். இக்கண்ணி, "சக்கர முதற் படைகளைந்து முதனளே தன்னுடைய வானவதனலைவை நமக்குத், திக்கு விசயத்தின் வருமென்றவை பயிற்றிச் செங்கை மலர் கொந்தில சுமந்தில தனக்கே" (கலிங்கத். 247) என்னும் தாழிசையை நினைப்பிக்கின்றது. பெய்கணை - இடப்பட்ட அம்புகளையுடைய.

(பி - ம்) 'வெய்யகணைத்'

65. தூணிப் புறத்தோடுந் தோளிற் சிலையோடும்
பூணித் தனங்கவேண் முன்போத—மாணிக்கக்
66. கோவையான் முக்குவட்டுக் குன்று யொருதிருப்
பாவையாற் கொல்விப் பனிவரையாய்—ஓவாது
67. செய்ய தமிழ்முழங்கத் தெய்வப் பொதியிலாய்
வெய்ய புலிமுழங்க மேருவாய்—வையகஞ்சூழ்
68. கோர முடன்போத நேமிப் பொலன்குன்றாய்
வார்கவரி யாலிமய மால்வரையாய்—வேரி

---

65. தூணிப்புறத்தோடும் - அம்பறாத்தூணியையிட்ட முதுகோடும். சிலையோடும் - கரும்பு வில்லோடும். பூணித்து - தன்கடமையை மேற்கொண்டு. அனங்கவேள் - மன்மதன். மன்மதன் மெய்காவலனாகச் சென்றான்; " மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு, வில்லி கணை தெரிந்து மெய்காப்ப " (நளவெண்பா, 99).

(பி - ம்) 'தொட்ட சிலையோடும்'

65-6. மாணிக்கக் கோவையால் - மாணிக்க மாலைகளால்.

66. முக்குவட்டுக்குன்றாய் - இலங்கையிலுள்ள திரிகூடமென்னும் மலையாகி. திரிகூடம் மாணிக்கத்தை யுடையது; குலோத். 145, 375-6. திருப்பாவையால் - திருவாகிய பாவையால். கொல்லி மலையில் பூதத்தாலெழுதப்பட்ட பாவையின் வடிவம் உண்டென்பது நூல்வழக்கு; " கொல்லிக் குடவரைப், பூதம் புணர்த்த புதிதியல் பாவை ", " கொல்லி......குடவரை யகத்துக்கால்பொரு திடிப்பினுங் கதழுறை கடுகினும், உருமுடன் றெறியினு மூறுபல தோன்றினும், பெருநிலங் கிளரினுந் திருநல வுருவின், மாயா வியற்கைப் பாவையின் " (நற். 192 : 8-9, 201 : 5-11.)

67. புலி - கொடியாகிய புலி. மேருவில் புலிக்கொடி எழுதப்பட்டது இங்கே அறியற் பாலது; 59.

68. கோரம் : சோழனுடைய குதிரை. நேமிப்பொலன் குன்று : சக்ரவாளகிரி. சக்ரவாளகிரி பொன்னிறமுடையதாதலின் 'பொலன் குன்று' என்றார்; தக்க. 2, உரை. கவரி-சாமரை. இமயமலை கவரிமான்களை மிகுதியாகவுடையது; " கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி, பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவும், ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம் " (பதிற். 11 : 21-3); " நரந்த நறும்புன் மேய்ந்த கவரி, குவளைப் பைஞ்சுனை பருகி யயல, தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும், வடதிசை யதுவே வான்றோ யிமயம் " (புறநா. 132 : 4-7.)

68-9. வேரி விடும் - தேனைத்துளிக்கின்ற.

(பி - ம்) 'நேமிப் பெருங்குன்றாய்'

69. விடுங்குழையார் சென்னி மிலைச்சிய சென்னி
கொடுங்குழையார் வீதி குறுக—நடுங்காமல்

## குமரங்கள்

70. விண்ணாடு காத்து முசுகுந்தன் மீண்டநாள்
மண்ணாடு கண்ட மடந்தையரும்—நண்ணார்மேல்
71. சோளன் பரிசார்ந்தே சூழ வருஞ்சக்ர
வாள கிரியர மங்கையரும்—தோளிணையால்
72. கோழியிற் சோழ குலத்தொருவன் முன்கடைந்த
ஆழியிற் கொண்ட வரம்பையரும்—ஊழியின்
73. சித்த வரையிற் றிருக்கொற்ற வில்லொன்றால்
வாய்த்த வரையர மாதரும்—போய்த்தனியே

69. குழை ஆர் - தழையையுடைய ஆத்திப்பூவை. சென்னிமிலைச்சிய சென்னி - தலையில் சூடிய சோழன். கொடுங்குழையார் வீதி - வளைந்த குழையை யணிந்த மகளிரது வீதியை.

(பி - ம்) 'நடுங்கிய'

70. விண்ணாட்டை நடுங்காமல் (69) காத்து. முசுகுந்தன் விண்ணாடு காத்தமை: குலோத். 43; "கடுவிசை யவுணர் கணங்கொண் டண்டிக், கொடுவரி யூக்கத்துக் கோநகர் காத்த, தொடுகழன் மன்னற்கு" (சிலப். 6 : 7 - 9.) நண்ணார் மேல் - பகைவர் மேல்.

(பி - ம்) 'மீண்டவந்நாள்'

71. பரி சார்ந்து - குதிரையின் மேலேறி. சூழவரும் - வலமாக வருகின்ற; 68; "வேற்றுப்புலத் திறுத்துக், குணகடல் பின்ன தாகக் குடகடல், வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப, வலமுறை வருதலு முண்டென் றலமந்து . . . . துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" (புறநா. 31 : 12-7.) சக்ரவாளகிரி மங்கையர்: "கிகிரிவரையி லர மகளிர்கடை திறமினோ" (தக்க. 37.);

(பி - ம்) 'பரிசான்றே', 'பரிசாந்தேர்' 'சோளன் பொருஞான்றே', 'சோளன் பரிகரஞ்சூழ' 'கிரியிலர'

72. கோழியில் - உறையூரில். தோளிணையால் முன்கடைந்த. சோழன் கடல்கடைந்தது: "கடல் கலக்க வெழு மின்னமுதுதன்னை யொருவன், கடவுள் வானவர்களுண்ணவருள் செய்த கதையும்" (கலிங்கத். 190); "நரைதிரைமூப் பிவைமாற்றி யிந்திரனு நந்தாமற், குரைகடலை நெடுவரையாற் கடைந்தமுது கொடுத்தானும்" (கம்ப. குலமுறை. 4.) ஊழியின் - முறைமையால்; ஊழி: ஊழ் என்பதன் திரிபு; சீவக. 149, 2974, ந.

73. சித்தவரை என்றது உதயகிரியை; "உதயவரையர மகளிர்க டிறமினோ" (தக்க. 43); சித்தல் - இருளைப் போக்கல். தனியே போய்.

(பி - ம்) 'திருக்கோலவில்'

74. கோதண்டங் கொண்டிரு சேடி யுடன்கொண்ட
வேதண்ட லோக விமலையரும்—காதலால்
75. தந்த பணிபதி தன்மகளைச் சேவித்து
வந்த கடவுண் மடந்தையரும்—பந்தாடும்
76. மேரு வரையிற் புலிபொறித்து மீண்டநாள்
வாரும் வரையர மாதரும்—வீரவேள்
77. வாங்கயிலிற் கூரிய கண்ணு ரொருவளவன்
தூங்கெயிலிற் கைக்கொண்ட தோகையரும்—பாங்கின்
78 நிதியோடுங் கூட நிதியோ னளகைப்
பதியோடுங் கொண்டார் பலரும்—முதலாய
79. சாய லரமகளிர் தத்தந் திருமரபில்
கோயி லுரிமைக் குழாநெருங்கி—வாயிலும்

---

74. கோதண்டங் கொண்டு - வில்லையே துணையாகக் கொண்டு; "தநுவன்றித் துணையில்லான் றருமத்தின் கவசத்தான்" (கம்ப. குலமுறை. 14.) இரு சேடி - வடசேடி தென்சேடி தக்க. 19.; வேதண்டலோகம் - வெள்ளி மலையையுடைய வித்தியாதரவுலகம்.

75. பணிபதி - நாகர்களுக்கு அரசன்; சோழனொருவன் நாககன்னிகையை மணந்தமை இக்கண்ணியிற் குறிக்கப்படுகிறது; 16; விக்கிரம. 10; குலோத். 19. சேவித்து வந்த மடந்தையர்: 'ஆயம் - தோழிமார்; சேவிக்கும் தோழிமாருமாம்' (சிலப். 16 : 85, அரும்பத.) பந்தாடும் - பந்தைப் போல ஆடிய.

76. புலிபொறித்தவன்: கரிகாலன். வரை - மலை. வேள் - மன்மதனுடைய.

(பி - ம்) 'புலியெழுதி'

77. வாங்கு அயிலில் கூரிய - வாங்கிய அம்புகளைக் காட்டிலும் கூர்மையான; அயில் - ஆயுதப் பொதுப் பெயர். கண்ணுராகிய தோகையர். தூங்கு எயிலில் - ஆகாயத்தில் சஞ்சரிக்கும் மதில்களில். பாங்கின் - நன்மையையுடைய.

78. நிதியோன் - குபேரனது.

(பி - ம்) 'கூடனிதியோன்'

79. சாயல் அரமகளிர் - மென்மையையுடைய தெய்வமகளிர். கோயில் உரிமைக்குழாம் - கோயிற்பணிக்கு உரிமையையுடைய மகளிர் கூட்டம்; தோல்வியுற்ற பகைவருடைய மனைவியரைக் கோயிற்பணிக்கு அமைத்தல் வழக்கம்; "கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி, அந்தி மாட்டிய நந்தா விளக்கின், மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ, வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்" (பட். 246-9.); 'பகைவர் மனையோராய்ப் பிடித்து வந்த மகளிர் பலரும் நீருண்ணுந் துறையிலே சென்று முழுகி மெழுகும் மெழுக்கத்தினையும், அவர்கள் அந்திக் காலத்தே கொளுத்தின

80. மாளிகையுஞ் சாலையு மாலயமு மண்டபமும்
சூளிகையு மெம்மருங்குந் தோரணமும்—சாளரமும்
81. தெற்றியு மாடமு மாடரங்குஞ் செய்குன்றும்
சுற்றிய பாங்கருந் தோன்றுமே—பற்றி
82. மயங்கி மறுகிற் பிணங்கி வணங்கி
உயங்கி யொருவர்க் கொருவர்—தயங்கிழையீர்

## குழாங்களின் கூற்று

83. தற்கோடி யோரிரண்டு கொண்டு சதகோடி
கற்கோடி செற்ற சிலைகாணீர்—முற்கோலி
84. வட்ட மகோததி வேவ வொருவாளி
விட்ட திருக்கொற்ற விற்காணீர்—வெட்டிச்

---

அவியாத விளக்கினையுமுடைய பூக்களைச் சூட்டின தறியினையுடைய அம்பலம்' (ஷை. உரை.); கொற்ற மன்னமங்கையர், ஏத்தல் சான்ற கோயிலும்" (சீவக. 154.)

(பி - ம்) 'குழாமீண்டி'.

80. சூளிகை - மாளிகையின் மேலேயுள்ள அறை. தோரணம் - தோரணக் கம்பம்; "இந்திர தனுவிற் றோன்றுந் தோரண மிவர்ந்து நின்றான்", "இந்திர சாப மென்ன நின்றதோ ரணத்தினும்பர்" (கம்ப. சம்பு மாலி. 15; அட்சகுமாரன். 21.) சாளரம் - பலகணி.

(பி - ம்) 'மாளிகையுங் கோயிலும்' 'சூளிகையு மெத்தெருவும்'

81. தெற்றி - திண்ணை. பாங்கரும் - பக்கத்திலுள்ள இடங்களும். தோன்றுமே - அவ்விடங்களில் தோன்றுதபடி.

(பி - ம்) 'தெற்றியு மாடரங்குஞ் செய்குன்றுஞ் சேரவே' 'தோன்றுமற்'

82. மறுகில் - வீதியிலே. பிணங்கி - மாறுபட்டு. உயங்கி - வாடி. தயங்கிழை - விளங்குகின்ற ஆபரணம்.

(பி - ம்) 'வணங்கிப் பிணங்கி'

83. தற்கோடி ஓரிரண்டு - தன்னுடைய முனைகள் இரண்டை; தன் என்றது வில்லை. சதகோடி - இந்திரனுடைய. கற்கோடி - கோடியளவான கற்களை. இந்திரன் கல்மழை பெய்தது; 56. முன்கோலி - முன்னே வளைத்து.

(பி - ம்) 'கலைகாணீர்' 'முற்கோடி'

84. மகோததி - கடல். வாளிவிட்டது இராமாவதாரத்தில். வெட்டி - மலையை வெட்டி.

85. சுழியிட்ட காவிரிக்குச் சோணுடு வாழ
வழிவிட்ட வாள்காண வாரீர்—ஒழிய
86. மதியெறிந்து வல்லேற்று வானெறிந்து தூங்கும்
பதியெறிந்த கொற்றவாள் பாரீர்—உதியர்
87.• இடப்புண்ட பேரிஞ்சி வஞ்சியி லிட்ட
கடப்ப முதுமுரசங் காணீர்—கொடுப்பத்
88. தரைகொண்ட வேற்றரசர் தஞ்சென்னிப் பொன்னிக்
கரைகண்ட போர்முரசங் காணீர்—சரதப்

---

85. சோணுடு வாழக் காவிரிக்கு வழிவிட்ட வாள்: "மலைகொன்று பொன்னிக்கு வழிகண்ட கண்டன், வரராச ராசன்கை வாளென்ன வூந்தே" (தக்க. 549); "சைய மலைச்சிறைதீர் வாட்கண்டன்" (தொல். புறத். 36, ந. மேற்.)

86. மதியெறிந்து - சந்திரனை வீசி. வல்லேற்று வான் - வலிய இடியையுடைய மேகத்தை. தூங்கும்பதி - ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஊர்களை. உதியர் - சேரர்.

(பி - ம்) 'வாளெறிந்த மாறன்'

87. இடப்புண்ட - பெயர்க்கப்பட்ட. பேரிஞ்சி வஞ்சியில் - பெரிய மதிலையுடைய வஞ்சி யென்னும் தம் ஊரில். கடப்பமுதுமுரசம் - கடம்ப மரத்தால் செய்யப்பட்ட பழைய முரசம்; இமய வரம்பன் நெடுஞ்சேர லாதன் கடலிற் சென்று தன் பகைவரது காவல் மரமாகிய கடம்ப மரத்தை வெட்டிச் செய்த முரசு இது; பதிற். 11 : 12-4, 12-3, 17 : 5, 20 : 4 : அகநா. 127 : 4, 347 : 4-5; சிலப். 25 : 11. "இஞ்சியின் வல்லுரு மேறு கிடந்த, வஞ்சியின் வாகை புனைந்தவன் வாழியே" (தக்க. 800) என்பதனுற் சோழன் சேரநாட்டின்மேல் படையெடுத்து வென்றமையறியப்படும். கொடுப்ப - இவன் கொடுத்தலால்.

(பி- ம்) 'இடிப்புண்ட' 'கடிப்பு முதுமுரசம்'

88. தரைகொண்ட - தம் நாட்டை மீட்டும் பெற்றுக்கொண்ட. தம் சென்னி - தம் தலையால். பொன்னிக்கரை கண்ட - காவிரிக்குக் கரை கட்டிய; விக்கிரம. 13; குலோத். 18. சோழனுக்குத் தோற்ற அரசர் தம் தலைமீது மண்சுமந்து காவிரிக்குக் கரைகட்டின ரென்பது கருத்து. 88-9. சரதப் பவித்ர விசயப் படை - உண்மையையும் தூய்மையையுமுடைய வெற்றியைத் தரும் மழுவாகிய ஆயுதம்.

(பி - ம்) 'சென்னிமேற் பொன்னிக் கரைகொண்ட'. 'காணீர், அரசர், பவித்ர'

89. பவித்ர விசயப் படைப்பரசு ராமன்
கவித்த வபிடேகங் காணீர்—தவித்துலகில்
90. மூவெழுகா லெக்கோக் களையு முடித்தவனி
மூவெழுகாற் கொண்ட முடிபாரீர்—தாவி
91. வரப்பு மலைசூழ் வரவா யிரங்கண்
பரப்பு மொருவேங்கை பாரீர்—புரக்கநின்
92. றூடம் பரமடங்க வோங்கி யுயரண்ட
கூடம் பொருவுங் குடைபாரீர்—கூடற்
93. பெரும்பெருமா ளெவ்வேந்து முன்போதப் பின்பு
வரும்பெருமாள் வந்தனன் வாரீர்—இருங்கடற்

---

89. கவித்த அபிடேகம் - சூட்டிய கிரீடத்தை. தவித்த உலகில்: தொகுத்தல் விகாரம்; என்றது அரசருடைய கொடுமையால் உலகம் வருந்தியதென்பது கருத்து.

(பி - ம்) ‘கவித்துலகில்’, ‘கவிற்றுலகில்’

90. மூவெழுகால் - இருபத்தொரு தலைமுறை. எக்கோக்களையும் - எவ்வளவு பெரிய அரசர்களையும். பரசுராமன் தான் வென்ற நாடுகளையும் அந்நாட்டு அரசர் முடிகளையும் காசிபருக்குக் கொடுப்ப அவர் பரம்பரையில் வந்த சோழருக்கு அவை உரிமையாயின. பரசுராமன் இருபத்தொரு தலைமுறை அரசரை வென்றது: “ஒரு மழுவாள் வேந்த னொருமூ வெழுகால், அரசடு வென்றி யளவோ” (தொல். புறத். 20. ந. மேற்); “செருவிற் சினவி யிருபத் தொருகால், அரசு களைகட்ட பரசு ராமன், மேவரு சாந்திமத் தீவரண் கருதி, இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்” (பெருந். 782.)

91. வரப்புமலை - எல்லையாகிய மேருமலையை. தாவிச்சூழ்வர - தாவிச் சுற்றி வருதற்கு. ஆயிரங்கண் பரப்புமொரு வேங்கை என்றது இந்திரனாகிய புலிக்கொடியை; 51; “புலியெனக் கொடியிலிந்திரனை வைத்தவனும்” (கலிங்கத். 193.) நின்று புரக்க - நிலைபெற்றுக் காக்க: “நின்றளிக்குந் தனிக்குடைக்கீழ்” (கம்ப. கையடை. 8.)

(பி - ம்) ‘புரக்கணின்று’

92. ஊடு அம்பரம் அடங்க - இடையேயுள்ள ஆகாயம் அடங்கும்படி. அண்டகூடம் - அண்டகோளகை. பொருவும் - ஒத்திருக்கும்; “மந்தாரம் காம்பா மணிவிசும் போலையா, திங்க ளதற்கோர் திலகமா - எங்கணும், முற்றுநீர் வைய முழுது நிழற்றுமே, கொற்றப்போர்க் கிள்ளி குடை” (முத். 35.) கூடல் - காவிரிப்பூம் பட்டினம்; 55; “கூடல், நராதிபன் கூத்தனெதிர் நண்ணி யோர் கண்ணிக், கொராயிரம்பொன் னீந்த வுலாவும்” (தமிழ்விடு. 58 - 9.)

(பி - ம்) ‘கூடம் பரவுங் கொடைபாரீர்’

93. பெருமாள் - இராசராச சோழன். சிற்றரசர் முன் போதப் பின் போதல்; 53 - 4. இருங்கடல் - பெரிய கடலில்.

(பி - ம்) ‘பொரும் பெருமாள்’ ‘அருங் கடன்’

94. ரேன்றருக்க மண்டலமுந் தோற்க வுலகங்கள்
மூன்றுக்குஞ் சூடு முடிபாரீர்—தோன்ற

95. அணைத்தரு காயிர மாயிர மாகப்
பணைத்த பணிவலயம் பாரீர்—அணைக்கட்

96. சிரித்த சுரேசனை வென்ருெரு தென்னன்
பரித்த மணியாரம் பாரீர்—தரித்தருள

97. வேண்டிய நாளின் முனிவுண்டு வெட்டுண்ட
பாண்டியன் கட்டு வடம்பாரீர்—மீண்டும்

98. திருந்து மதனன் றிருத்தாதை செவ்வி
இருந்த படிபாரீ ரென்பார்—பெருந்தேவர்

---

94. அருக்க மண்டலம் - சூரிய மண்டலம். உலகங்கள் மூன்று என்றது தமிழ்நாடு மூன்றையும்; உலகத்தின் கூறுகளையும் உலக மென்றல் மரபு; "சேயோன் மேய மைவரை யுலகமும்" (தொல். அகத். 5.) கிரீடத்துக்குச் சூரியமண்டலம் உவமை. இக்கண்ணி சில பிரதிகளில் இல்லை.

(பி - ம்) 'ரேன்றர்க்க'

95. பணைத்த - பெருத்த. பணிவலயம் - பாம்புகளாலாகிய வாகுவலயம்; என்றது சேடன் வாசுகியாகிய இரண்டு பாம்புகளையும்; 61. அணைக்கண் - சிம்மாசனத்தில்.

(பி - ம்) 'இணைக்கட்'

96. சுரேசனை - இந்திரனை. தென்னன் - உக்கிர குமார பாண்டியன். பரித்த - தாங்கிய. பாண்டியன் இந்திரன் ஆரத்தைத் தாங்கியது; "செங்கண் ணாயிரத்தோன் றிறல்விளங் காரம், பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி", "தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே" (சிலப். 11 : 24-5, 17, உள்வரி வாழ்த்து.)

(பி - ம்) 'சிரித்த வசுரனை'

97. முனிவுண்டு - சோழனல் கோபிக்கப்பட்டு. பாண்டியன்: வீர பாண்டியன். கட்டு வடம் - ஒரு வகைக் காலணி; "கட்டு வடக் கழலினர்" (பரி. 12 : 24); "வட்ட வாழியுங் கட்டு வட விணையும்" (பெருங். 2. 19 : 181.)

(பி - ம்) 'ஈண்டும்'

98. மீண்டும் திருந்து மதனன் - சிவபெருமானல் எரிக்கப்பட்ட பின்பும் வடிவம் பெற்ற மன்மதன். மதனன் திருத்தாதை - திருமால்; என்றது சோழனை. செவ்வி - அழகு. மதனன் தாதை யாதலால் அழகைப் பற்றிச் சொல்லவேண்டா என்பது கருத்து; "காமனர் தாதை" (பெரியதிரு. 1. 1 : 3.) பெருந்தேவர் : படைத்தல் முதலிய முத்தொழிற்கும் உரிய மூவர்

99. முக்கொடி முப்பத்து மூவர்க்கு முன்னுயர்த்த
எக்கொடியு முன்ன ரெடுத்துளவால்—அக்கொடியால்
100. தொல்லா ரணமனைத்துஞ் சொல்லுஞ் சுரவரசர்
எல்லாருங் காணு மிவனென்பார்—புல்லிய
101. நீர்ப்பூ புதற்பூ முடியன்றி நேராதார்
போர்ப்பூ முடிதடிந்து போக்கியபின்—போர்ப்பூவில்
102. மேதகு கொற்றவைக்கு வேந்தர் பிரானுவந்த
தாதகி யொன்றுமே சார்பென்பார் - மீது
103. பரந்த வவுணர் சிறைப்படும தெண்ணி
இரந்தன கொண்டன வென்று - புரந்து
104. தனிச்சே வகம்பூமி தன்னதே யாக
இனிச்சே வடிவிடா ளென்பார் - பனிச்சாரல்

---

99. முக்கொடி - அன்னம், கருடன், காளையாகிய மூன்று கொடிகள். முப்பத்துமூவர் - முப்பத்து மூன்று கோடி தேவர்கள்.

(பி - ம்) 'முக்கோடி'. 'எக்கோடி மன்னர்', 'எக்கோடி தேவர்', 'அக்கோடி தொல்லாரணம்'

100. தொல் லாரணம் - பழைய வேதம். சுரவரசர் - தேவர்களுக்கு அரசர். புல்லிய - அற்பமான. (பி - ம்) 'சுரவசுரர்', 'சுரவல்லர்'

101. நேராதார் - பகைவருடைய. முடியைத் தடிந்து போர்ப்பூவைப் போக்கிய பின்; போர்ப்பூ - போர்க்களத்தில் அடையாளமாகச் சூடும் பூ. போர்ப்பூவில் - போர்ப்பூக்களில்.

(பி - ம்) 'நீர்ப்பூ முதற்பூ', 'முடிகடிந்து', 'மேற்பூவின்'

102. கொற்றவைக்கு - துர்க்கைக்கு. வேந்தர் பிரான் - இராச ராசன். தாதகி - ஆத்தி மாலை. இவனால் வெல்லப்பட்ட அரசர் வீரமிழந் தமையின் அவர்களது போர்ப்பூக்களை விட்டு, சோழனுடைய ஆத்தி மாலை யொன்றையே கொற்றவை தனக்கு இருப்பிடமாகக் கொண்டாள். ஆத்தி போர்ப்பூ என்பது: "கலங்க லொலிபுனற் காவிரி நாடன், அலங்க லமரழுவத் தார்" (பு. வெ. 242.)

(பி - ம்) 'வேந்தர் பிரானிவன்', 'வேந்தர் பிரானணிந்த

103. அவுணர் - அசுரர். இரந்தன கொண்டன என்று - யாசித்துக் கொள்ளப்பட்டன வென்று.

(பி - ம்) 'சிறைப்படு மென்ன', 'சிறைப்படு மென்னை' 'இரந்தன சோணாட்', 'புரந்த'

104. தனிச் சேவகம் - ஒப்பில்லாத வீரச் செயல். தன்னதேயாக - தன்னுடையதே ஆக. சேவடி விடாள் - சோழனுடைய பாதங்களை விட மாட்டாள்; இதிலடங்கிய வரலாறு திருமால் மகாபலியிடம் பூமியை யாசித்து அதனை அளந்த கதை. பனிச்சாரல் மண்டும் மலை - பனியையுடைய சாரல்கள் மிக்க மந்தரமலை. (பி - ம்) 'இனிச்சே வகம்விடாள்'

105. மண்டு மலையால் வருந்தா வகைவருந்திப்
பண்டு கலக்கிய பாற்கடலுட் - கொண்டதோர்

106. செங்கோ கனகை திருமார்பி லன்றியே
எங்கோ விருப்பா ளினியென்பார் - நங்காய்

107. திருப்பது மாபதி யித்திரு மார்பில்
இருப்பது காட்டுமி னென்பார் - சிரித்தெதிரே

108. அங்கட் கமலை யமலன் பெருந்தேவி
நங்கட் புலனாயி னன்றென்பார் - நங்கைமீர்

109. கண்ணாகுந் தாமரையுங் கைதொழுதே மெம்மறையும்
பண்ணாகுஞ் செந்தா மரைபணிந்தேம் - வண்ணத்

110. தொடித்தா மரையுந் தொழுதன நாபிக்
கடித்தா மரைதொழுவேங் காட்டீர் - பிடித்தென்ன

111. அத்தா மரைதன் னடித்தா மரைக்கன்றி
மைத்தா மரைக்கெளிதோ மற்றென்பார் - உய்த்தால்

---

105. வருந்தா வகை - அசுரரால் துன்ப மடையாதபடி. பண்டு கலக்கிய - சோழன் முற்காலத்தில் கடைந்த. மலையால் வருந்திக் கலக்கிய என இயைக்க.

(பி - ம்) 'பாற்கடலிற்'

106. செங்கோகனகை - சிவந்த தாமரைப் பூவிலுள்ள திருமகள். நங்காய் : விளி.

(பி - ம்) 'திருமார் பினிலன்றி', 'யிவளென்பார்'

107. திருப்பதுமாபதி - திருமகள்.

108. அம்கண் கமலை - அழகிய கண்களையுடைய திருமகள். கமலையாகிய பெருந்தேவி. நம்கண் புலனாகில் - நம்முடைய கண்ணுக்குத் தோற்றினால்.

(பி - ம்) 'மங்கைமீர்', 'மங்கையர்'

109. எம்மறையும் பண்ணாகும் செந்தாமரை : வாய்; என்றது அன்னமாக இருந்து வேதங்களை வெளிப்படுத்தினமை பற்றி; "அன்ன மாய் முன்னொருகா லறம்பயந்த வறனும்நீ" (பெருந் தொகை, 14.); "அன்ன மாகி யருமறைக ளருளிச் செய்த வமலனிடம்", "அன்ன மாகியன் றரு மறை பயந்தவனே" (பெரிய திருமொழி, 5 : 1 : 9, 3 : 8.)

(பி - ம்) 'கண்ணாரும்' 'எம் மருங்கும் பண்ணாரும்' 'எம்முறையும்'

110. தொடித்தாமரை : கைகள். நாபிக் கடித்தாமரை - நாபியாகிய வாசனையையுடைய தாமரை. பிடித்துக் காட்டீரென்ன.

(பி - ம்) 'பிடித்தன'

111. மைத்தாமரை - மை எழுதப்பட்ட கண்கள்.

(பி - ம்) 'வந்தென்பார்', 'உய்த்தார்'

112. ஒருபெருந் தாதகி தோய்சுரும்பை யோட்டற்
இருபெருஞ் சாமரையு மென்பார் - அருவி
113. அருகெய்த வொட்டா வயிரா பதத்தின்
இருகன்ன சாமரையு மென்பார் - தெருவத்துத்
114. தங்களின் மாறுடி யுள்ளந் தடுமாறித்
திங்க ணுதலார் தெருமர லும் - அங்கவரில்

## பேதை

115. பேதைக் குழாத்தொரு பேதை சிலபழங்
காதற் குழாத்தோர்தங் கையடையாள் - மீது
116. பிறந்தணிய கிள்ளை பெருத்தாயர் கொங்கை
மறந்தணிய செவ்வி மடமான் - புறந்தணியத்

---

112. தாதகி - ஆத்தி மாலையில். சுரும்பை ஓட்டற்கு - வண்டுகளை ஓட்டும்பொருட்டு. இருபெருஞ் சாமரை என்றது சோழனுக்குப் பக்கத்தில் வீசப்படும் கவரிகளை ; 84 - 5. அருவி - மத அருவியினது.

(பி - ம்) 'தோய் சுரும்பை யோட்டா விருபெருஞ் சாமரமும்', 'என் பார் பெருகி'

113. அயிராபதம் - சோழன் ஏறிய யானை. இரு கன்ன சாமரை - இரண்டு காதுகளிலும் அணிந்த சாமரைகள். யானையின் காதில் கவரிகளை யணிதல் வழக்கம் ; "நினயானைச் சென்னி நிறங்குங் குமத்தால் புனையாப் பூ நீரூட்டிப் புனைகவரி சார்த்தா" (பரி. 19 : 85 - 6.) தெருவத்து - வீதியில்.

(பி - ம்) 'தெருவகத்துத்', 'தெருமந்து'

114. தங்களின் மாறுடி - தமக்குள் மாறுகப் பேசி. திங்கள் நுதலார் - பிறைபோன்ற நெற்றியையுடைய மகளிர். தெருமரலும் - மனஞ் சுழன்றவுடன்.

(பி - ம்) 'தெருமர, அங்கவரில்', 'தெருவயர, அங்கவரில்'

115. ஒரு பேதை - ஒப்பற்ற பேதை. பழங்காதற் குழாத்தோர் - முதிர்ந்த அன்பையுடைய செவிலித் தாயர். கையடையாள் - அடைக்கலமாக வுள்ளவள்.

(பி - ம்) 'பேதைக் குழாத் தொருத்தி' 'முதுபெருங்காதைக் குழாத்தோர்தம்'

116. பிறந்தணிய - அணிமையிலே பிறந்த ; "பிறந்தணிய கிள்ளை" (விக்கிரம. 115.) பெருத் தாயர் - செவிலித் தாயரது. புறந்தணிய - புறத்தே தாழும்படி.

(பி - ம்) 'திங்கள் பெருத்' 'மடமான், பிறந்தணிய' 'மடமான் பிறந்தணிய'

117. தோகை தொடாமஞ்ஞை தோற்றத்தாற் சுற்றத்தார்க்
கோகை விளக்கு மொருகரும்பு - பாகைத்
118. தொடைபோய முல்லைத் தொடையலே போல
இடைபோய தூய வெயிற்ருள் - உடையோன்
119. செறிந்து விடாத திருத்தோற்ற முற்றும்
அறிந்து பிறந்த வறிவோ - நெறிந்தகுழல்
120. எம்பாவை யெங்கொல்லிப் பாவை யெனப்பாடும்
அம்பாவை பாடும் படியறிவாள் - உம்பர்
121. வெருவக் கரையை மிகும்பொன்னி யன்றிப்
பருவத்து வேறு படியாள் - உருவக்
122. குறைவனை யென்றெழுதுங் கோலத்து ஞாலத்
திறைவனை யல்லா லெழுதாள் - இறைவன்

---

117. தோகை தொடா மஞ்ஞை: விக்கிரம. 114. ஓகை - ஆர வாரத்தை; "பொரு தோகை சுரராச புரமேற விடுகானை புகழ்பாடு வாம்" (தக்க. 5); உவகை யென்பதன் மரூஉ வெனினுமாம். கரும்பு: விக்கிரம. 114; குலோத். 124.

(பி - ம்) 'தோற்றத்தே' 'நகைவிளைப்பது' 'ஒரு திருப் - பாகைத்'

117-8. பாகைத்தொடை - இரு பிளவாகத் தொடுத்தல்; "மிக்க கோடு கோடிபல வெற்பனேக பாகைபட" (தக்க. 466.)

118. முல்லைத் தொடையலே போல - முல்லைமாலையைப் போல. இடைபோய - இடை வெளிகள் மிக்க. பேதைப் பருவமாதலின் 'இடை போய எயிறு' என்றார்; "செறிநிறை வெண்பலும் பறிமுறை நிரம்பின" (குறுந். 337.)

119. திருத்தோற்றம் - அவதாரங்கள். அறிவோ - அறிவினலோ. நெறிந்தகுழல் - வளைந்த கூந்தலையுடைய பேதை.

(பி - ம்) 'பிறந்தோ வறிவோ', 'செறிந்த குழல்'

120. அம்பாவை - அழகிய பாவைப்பாட்டை.

(பி - ம்) 'அறியாள்'

120-21. உம்பர்வெருவ - தேவர்களும் அஞ்சும்படி.

121. கரையை மிகும் - வெள்ளம் கரையைக் கடந்து செல்கின்ற. பொன்னியன்றி - காவிரியாற்றிலல்லாமல். வேறுபடியாள் - வேறு ஆறு களில் நீராடாள்.

(பி - ம்) 'பருவத்தும் வேறும்'

121-22. உருவக் குறைவனை - உருவமாகிய குறையையுடைய மன்மதனை; உருவமாகிய காரியத்தை வனைத லெனினுமாம்.

122. கோலத்து - சித்திரத்தில். ஞாலத்து இறைவனை - சோழனை.

(பி - ம்) 'வேறெழுதும்' 'இறைவனை யன்றி' 'இறைவனை யல்லது

123. முழங்கேழ் கடல்கொடுத்த முத்தேழு மல்லால்
கழங்கேழு மாடக் கருதாள் - வழங்கிய
124. முற்றி லெடுத்துக் கொழித்து முழுமுத்தால்
சிற்றி லிழைக்கின்ற செவ்விக்கண் - சுற்றும்
125. பனிநீங்கத் தோன்றும் பகலவன்போல் வையம்
துனிநீங்கத் தோன்றிய தோன்றல் - முனியும்
126. பொறைவிட் டெயில்விட்டுப் பொய்கை கவிக்குச்
சிறைவிட்ட சோளேந்த்ர சிங்கம் - நறைவிட்ட
127. அந்தாமச் செங்கழுநீர் மார்ப னழகிய
செந்தா மரைக்கட் டிருநெடுமால் - வந்தானை
128. ஓகைய ராகி யுலப்பில் பலகோடித்
தோகைய ரோடத் தொடர்ந்தோடித் - தாகம்
129. தணியத் தணியத் தமரும் பிறரும்
பணியப் பணியப் பணிந்தாள் - மணிமார்பில்

---

123. இறைவனுக்குரிய ஏழுகடல்; குலோத் 150; இறைவன் சோழன். கழங்கு ஏழும் - ஏழுகழங்குகளையும் கொண்டு. கழங்காடல் கடம்பர் கோயிலுலா, 183 - 190.

(பி - ம்) 'கழங்கேழுங் கொள்கை', 'முழங்கிய'

124. முற்றில் - சிறு சுளகு; "முற்றிலைப் பந்தைக் கழங்கைக் கொண் டோடினை" (திருவேங்கடத் தந்தாதி, 97.) முழு முத்தால் - பெரிய முத்துக் களால். சிற்றில் - சிறு வீடு.

124-5. சுற்றும் பனி - உலகத்தைச் சுற்றிய பனி.

125. பகலவன் - சூரியன். துனி - துன்பம்.

125-6. முனியும் பொறை - தன்னொடு பகைத்த சேரமான் கணைக்கா லிரும் பொறையை.

126. எயில் விட்டு - அவனுக்குரிய மதிலையும் கொடுத்து. பொய்கை கவிக்கு - பொய்கையார் பாடிய 'களவழி நாற்பது' என்னும் நூலுக்கு. நறை விட்ட - தேனைவிட்ட.

127. கழுநீர் மார்பன் : விக்கிரம. 129 ; குலோத். 115. நெடுமாலாகிய வந்தவனை.

(பி - ம்) 'அந்தாமஞ் செங்கழுநீர்'

128. ஓகையராகி - உவகையை யுடையவராகி. உலப்பில் - அழி வில்லாத. தோகையர் - மகளிர். தாகம் - சோழனைக் காணவேண்டுமென் னும் வேட்கை.

(பி - ம்) 'தோகைய ரோடு', 'தோகைய ரொட்டத்'

129. தமர் - சுற்றத்தார். மணி மார்பில் - கௌஸ்துபமென்னும் மணியையுடைய மார்பில்.

(பி - ம்) 'அணி மார்பில்'

130. ஆரந்தான் கண்டா ளயிரா பதந்தொழுதாள்
கோரந் தெரியவுங் கும்பிட்டாள் - வீரன்
131. படாகைப் பெரும்புலியும் பார்த்தொழிந்தா ளண்ட
கடாகத் ததிர்முரசுங் கண்டாள் - அடாதனவும்
132. சொல்லி யறியா தொழிந்தாள் சுருப்புநாண்
வில்லி யறியாது விட்டதே - நல்லார்சூழ்

## பெதும்பை

133. மற்று மொருத்தி வலம்புரி யாயிரம்
சுற்றுஞ் சலஞ்சலம்போற் றோன்றுவாள் - கற்றுடன்
134. அன்ன நடக்க நடந்தா ளருங்கிள்ளை
பின்ன ருடன்பேசப் பேசினாள் - இன்னிசையாழ்
135. பாட வதனுடனே பாடினாள் பைந்தோகை
ஆட வ்வதனுடனே யாடினாள் - கூடிய
136. நல்லிள மானோக்க நோக்கினா ணாணிரம்பி
முல்லை முகிழ்க்க நகைமுகிழ்த்தாள் - கொல்லும்

---

130. ஆரம் - ஆத்திமாலையை. அயிராபதம் : பட்டத்து யானை. கோரம் : சோழனுக்குரிய குதிரை.

131. படாகைப் பெரும்புலி - பெருங்கொடியிலுள்ள பெரிய புலியையும். அண்டகடாகத்து - அண்டச்சுவர் வரையிலும் சென்று. அதிர்முரசு - ஒலிக்கின்ற முரசு.

131-2. அடாதனவும் சொல்லி - தன் பருவத்துக்குப் பொருந்தாத வார்த்தைகளையும் சொல்லி.

132. அறியா தொழிந்தாள் - உணர்வற்றாள். சுருப்பு நாண்வில்லி - மன்மதன்.

(பி - ம்) 'சுரும்புறு நாண்', 'சுரும்புரு நாண்'

132-3. நல்லார் - மகளிர். வலம்புரி ஆயிரம் சுற்றும் சலஞ்சலம் : "இப்பியா யிரமே சூழ்ந்த திடம்புரி யென்று கூறும், ஒப்பில்சங் காயிரஞ்சூ ழுறுவலம் புரியென் றோதும், அப்படி யதுவுஞ் சூழ்ந்த சலஞ்சல மாகும்." (சூடாமணி நிகண்டு.) கற்று - தன்னுடைய நடையைக் கற்று.

(பி - ம்) 'கற்றுடனே'.

134. கிள்ளை-கிளி. பேச - பேசும்படி.

(பி - ம்) 'அன்ன நடப்ப'

135. பைந்தோகை - பசிய மயில். கூடிய - தன்னைச் சேர்ந்த.

136. மான் நோக்க - மான் தன்னைப் போல மருண்டு பார்க்கும்படி. நாள் நிரம்பி - பருவம் நிறைந்து. முல்லை முகிழ்க்க - முல்லைக்கொடி அரும்பும்படி. நகை முகிழ்த்தாள் - புன்சிரிப்பு உடையவளானாள்.

(பி - ம்) 'நாணிரம்பு'

137. மழகளிற்றின் கோடெழுச்சி யென்று மரவின்
குழவி யெயிறெழுச்சி யென்றும் - பழகி
138. எறியு மழையெழுச்சி யென்று முலகம்
அறியு முலையெழுச்சி யன்னம் - செறியும்
139. வரையேழி லுள்ள வயிரமும் வாங்கும்
திரையேழின் முத்தின் றிரளும்—தரையேழிற்
140. பொன்னும் பிலனேழிற் போகா விருள்போக
மின்னுஞ் சுடிகை வெயின்மணியும்—பின்னும்
141. பொழிலேழிற் போதும் புனையப் புனைவாட்
கெழிலேறும் நாளையே யென்னக்—கழிய
142. உழப்போ மினியென் றுடலுள்ள போழ்தே
எழப்போக வெண்ணு மிடையாள்—மழைத்துப்
143. புடைபோ யளகம் பொதுக்குவதன் முன்னே
கடைபோ யுலகளக்குங் கண்ணாள்—உடையதன்

---

137. மழகளிற்றின் கோடெழுச்சி - இளைய யானையின் கொம்பினது எழுச்சி. அரவக் குழவி - பாம்பின் குட்டியினது. எயிறெழுச்சி - பல்லினது தோற்றம்.

(பி - ம்) 'மழகளிற்றுக்' 'அரவக் குழவி'.

138. எறியும் - இடியினால் எறியும். மழை எழுச்சி - மேகத்தின் புறப்பாடு; முன் தோன்றாமல் பின்பு சிறிது சிறிதாகத் தோன்றுதல் பற்றி மழையெழுச்சியை உவமை யாக்கினார்.

(பி - ம்) 'முகிலெழுச்சி யென்று'

139. வாங்கும் திரை - சுருளும் அலைகளையுடைய கடல். தரை ஏழு - ஏழு தீவுகள்.

140. பிலன் - நாகலோகம். சுடிகை - உச்சிக் கொண்டை. பொழில் ஏழு - ஏழு தீவிலுள்ள ஏழு சோலைகள்.

141. புனைய - தன்னை அலங்கரித்துக்கொள்ள. எழில் ஏறும் - அழகு மிகும். என்ன - என்று கருதி.

141–2. இனிகழிய உழப்போம் - இனிமேல் மிகவும் வருந்துவோம்.

(பி - ம்) 'புனையும் புனைநாட்கு', 'புனையும் புன்னாட்டு' 'எழிலேனும்' 'என்னக் கழல'

142. எழப்போக - தூரத்தே போக. எண்ணும்-நினைக்கும். மழைத்து - மேகத்தின் தன்மையையுடையதாய்.

(பி - ம்) 'எழப்போக வென்னும்'

143. புடை போய் - பக்கத்தே பரவி. அளகம் - கூந்தல். பொதுக்குவதன் முன்னே - இளைஞருடைய உயிரைத் துளைப்பதற்கு முன். கடை போய் - கண்ணின் கடைப்பக்கத்திற் சென்று.

(பி - ம்) 'போமளகம்' 'புதுக்குவதன் முன்னே' 'உடைய தம்'

144. சேரிச் சிறுசோறுஞ் சிற்றிலும்போய்ச் சில்லணிபோய்ப்
பேரிற் பெருஞ்சோற்றுப் பேரணியாள்—ஓரையில்
145. தன்னாய நிற்பத் தனிநா யகன்கொடுத்த
மின்னாயஞ் சேவிப்ப வீற்றிருப்பாள்—மென்மலர்
146. மேய் சிறுமுல்லைப் பந்தர் விடவெடுக்கும்
பாய பருமுத்தின் பந்தராள்—நாயக
147. உச்சியிற் கொண்டை முடிப்பி னுலகுடையோன்
முச்சியிற் சூட்டு முடிக்குரியாள்—நிச்சமும்
148. நல்லுயிர்ப் பாவை துணைபெற நாயகன்
கொல்லியிற் பாவை கொளவிருப்பாள்—மெல்லியற்
149. பாங்கிக்கு நங்கோமான் விந்தைப் பசுங்கிளியை
வாங்கித் தரப்போய் வணங்கென்பாள்—ஆங்கொருத்தி

---

144. பேரில் - பெரிய வீட்டையும். பெருஞ்சோற்றுப் பேரணியாள் - பெருஞ் சோறு அடுதலையும் பெரிய ஆபரணங்களை அணிதலையும் உடையவள். ஓரையில் - விளையாடுமிடத்தில்.

(பி - ம்) 'ஓர்வயின்'

145. தனிநாயகன் - சோழன். மின் ஆயம் - மின்னலைப் போன்ற மகளிர்திரள். சேவிப்ப - தன்னை வணங்கும்படி.

(பி - ம்) 'தனிநா யகனளிக்கும்' 'வீற்றிருந்தாள்'

146. முல்லைப் பந்தர்விட - முல்லைக் கொடியின் பந்தலில் விளையாடுவதை விடும்படி. முத்தின் பந்தர் - ஸஹஸ்ரதாரை யென்னும் முத்தக் கோவை; "நிகர் வேறு வேறாய நிலவு வீசு பேரார நிபுட மாலை" (தக்க. 106.)

146-7. நாயகவுச்சியில்-சிறந்த தன் தலையில்.

(பி - ம்) 'திருமுல்லைப்' 'விடமெடுத்த', விடமெடுக்கும்', 'வடமெடுக்கும்' 'பந்தான' 'நாயகன்', 'நாயகி'

147. கொண்டை முடிப்பின் - தன்னுடைய கூந்தலை முடித்தலால். உலகுடையோன் - சோழன். முச்சியிற் சூட்டும் - தன்னுடைய தலையிலே சூட்டுகின்ற. முடி - கிரீடம். நிச்சமும் - நாள்தோறும்.

(பி - ம்) 'உச்சியிற் சூட்டு முடியில்'.

148. நல்லுயிர்ப்பாவை - உயிரையுடைய நல்லபாவை போன்ற மகளிர். துணைபெற - தன்னைத் துணையாக அடைய. நாயகன் கொல்லியிற்பாவை - சோழனுக்குரிய கொல்லி மலையில் எழுதப்பட்ட பாவையை. மெல்லியல் - மென்மையான தன்மையுடைய. நம்கோமான் - சோழனுடைய. (பி - ம்) 'மெல்லியல்'

149. விந்தைப் பசுங்கிளியை - வியப்பைத் தரும் பசுமையான கிளியை. பாங்கிக்கு என்பாள் என இயைக்க. ஆங்கொருத்தி: சீதை.

(பி - ம்) 'பாங்குத்தன் கோமான் விந்தைப்' 'பசுங்கிளிக்கு'

150. மாயமான் வேண்ட மருதானை வான்மதியின்
மேயமான் வேண்டி விடப்பெறுவாள்—சேயவொளி
151. தென்பா லிலங்கைவாழ் தெய்வ மணிபணிப்பீர்
என்பாவை பூண வினிதென்பாள்—அன்பால்
152. உயிர்த்துணைப் பாங்கி யொருநோன் புணர்த்த
எயிற்புறத் தெல்லாருஞ் சூழ—அயிற்படை
153. வீரனை யெய்த வியன்காவிற் சென்றெய்தி
மாரனை நோக்கி வழிபட—மாரன்
154. படியில் கடவுட் பணைமுழங்க வென்றிக்
கொடியின் மகரங் குமுற—நெடிய
155. அலகி லசோக நிழற்ற வடைய
உலகில் மதுகரமூதக்—கலகித்

---

150. மாயமான் வேண்ட - மாரீசனாகிய வஞ்சனையையுடைய மானைத் தனக்குப் பிடித்துத் தரும்படி வேண்ட. வான் மதியின் மேயமான் - ஆகாயத்திலுள்ள சந்திரனிடத்தில் பொருந்திய மானை. விடப்பெறுவாள் - தூதுவிடுவாள்.

(பி - ம்) 'வண்மதியின்', 'மாமதியின்' 'விடப்பொருவாள்' 'சேயவன்', 'சேயதோர்'

151. இலங்கை வாழ் - இலங்கையிலுள்ள திரிகூடமலையில் வாழும். சேய ஒளித் தெய்வமணி - சிவந்த ஒளியையும் தெய்வத் தன்மையையுமுடைய மணியை; "செம்மணிச் செஞ்சோதி சிங்களத்தை மாற்றினாய்" (குலோத். 375-6.) என்பாவை இனிது பூணப் பணிப்பீர் - என்னுடைய விளையாட்டுப்பாவை இனிமையாகப் பூணும்படி கட்டளையிடுவீர்.

(பி - ம்) 'தென்பா ரிலங்கை', 'பணிப்பாய்' 'இனியென்பாள்'

152. ஒரு நோன்பு - மன்மதனைக் குறித்துச் செய்யும் விரதம். எயிற்புறத்து - மதிலின் வெளியே.

152–3. அயிற்படை வீரனை - வேற்படையையுடைய முருகக்கடவுள் போன்ற சோழனை.

153. எய்த - அடையும் பொருட்டு. வியன்காவில் - பரந்த சோலையில். மாரனை - மன்மதனை. வழிபட - வணங்க. தாம் விரும்பிய கணவரையடையும் பொருட்டு மகளிர் மன்மதனை நோக்கி வழிபடுதல் **நாச்சியார் திருமொழியாலும், சீவக.** 2057-ஆம் பாடலாலும், **பெருங்.** 3 : 9-ஆம் பகுதியினாலும் அறியப்படும்.

(பி - ம்) 'வியன்தாவிற்' 'மாரனை நோற்று'

154. படியில் - ஒப்பில்லாத. பணை - முரசு; என்றது கடலை. குமுற - முழங்க. (பி - ம்) 'படியிற்' 'குமிற'

155. அலகு - அளவு. அசோகம் - அசோக மரங்கள். நிழற்ற - நிழலைச் செய்ய. மதுகரம் அடைய - வண்டுகள் முழுதும். கலகித்து - கலகம் செய்து; 'உடன்று - கலகித்து' (தக்க. 473. உரை.)

156 தலங்க லடவிக் குயிற்குல மார்ப்ப
விலங்கல் மலயக்கால் வீசக்—கலந்தெழும்

157. ஆவி யகிலொடு நீரோ டரமகளிர்
தூவிய தண்ணறுஞ் சுண்ணமும்—காவில்

158. விடவிட வந்துயிர் மீதடுத்துப் போன
வடிவும் பழம்படியே வாய்ப்பக்—கொடியிடை

159. எண்ணிய வெண்ண முடிப்ப வவளெய்தும்
புண்ணியம் போலப் பொழில்புகுந்தான்—அண்ணல்

160. சரம்போலுங் கண்ணி தனக்கனங்கன் றந்த
வரம்போல் வளமறுகில் வந்தான்—வரும்போதில்

161. ஏன்று மதன னியமியம்ப வேயனகன்
மூன்று முரசு முழங்கின—தோன்றுத

---

156. அலங்கல் - அசைதலையுடைய. அடவிக்குயிற்குலம் - சோலையி லுள்ள குயிலின் தொகுதி. விலங்கல் மலையக்கால் - பொதியில் மலையி லிருந்து வரும் தென்றற்காற்று.

(பி - ம்) 'அடைவிற் குயிற்குலம்' 'விலங்கு மலயக்'

157. ஆவி ஆகிலொடு - அகிற்புகையோடு. நீரோடு - சிவிறியால் வீசிய நீர்த்துளிகளோடு. அரமகளிர் - தெய்வப் பெண்கள். காவில் - சோலையில்.

158. மீதடுத்து - மேலே பொருந்துதலால்; அடுத்து: அடுக்கவெனத் திரிக்க. போனவடிவும் - முன்பு சிவபெருமானால் இழந்த வடிவமும். கொடியிடை: பெதும்பை.

(பி - ம்) 'மீதெடுத்துப்' 'வாய்ப்பத் துடியிடை'

159. எண்ணம் - சோழனை நாயகனாக அடைதல். அவள் எய்தும் - அவளையடையும். புண்ணியம் - நல்வினை. மாரன் (153) புகுந்தான் என முடிக்க. அண்ணல்: சோழன்.

(பி - ம்) 'முடிப்ப வளெய்தும்', 'முடிப்ப னிவனெய்தும்', 'முடிப்ப விவரெய்தும்'

160. சரம் - அம்பு. கண்ணிதனக்கு - கண்களையுடைய பெதும் பைக்கு. அனங்கன் - மன்மதன். வளமறுகு - வளத்தையுடைய வீதியில். அண்ணல் (159) வரம்போல் வந்தான். வரும்போதில் - வரும்சமயத்தில்.

(பி - ம்) 'போல வன்மறுகில்', 'வண்மறுகில்' 'போலிவன் மறுகில்.'

161. மதனன் இயம் - மன்மதனுடைய முரசாகிய கடல். இயம்ப - ஒலிக்க. அனகன் - சோழனுடைய.

(பி - ம்) 'இயம்பவே வேந்தன்' 'தோன்றுது'

162. வாரிக் களிறு முழங்கவே மானதன்
மூரிக் களிறு முழங்கியது—வேரித்தார்
163. கற்கு மசோக நிழற்றவே பார்கவித்து
நிற்கும் கவிகை நிழற்றியது—முற்கொண்டு
164. மற்றை யலகின் மதுகர மூதவே
ஒற்றை வலம்புரி யூதியது—முற்றுத
165. சொற்குதலைக் கோகுலங்க ளார்க்கவே சோளேசன்
அற்கமணிக் காகளங்க ளார்த்தன—தெற்கெழுந்த
166. மல்லன் மலயக்கால் வீசவே மானதன்
மெல்லென் கவரிக்கால் வீசியது—மெல்லியலும்
167. காமன் பெருநோன்பு கைவந்த தென்றெதிரே
கோமைந்தன் வேழங் குறுகினள்—கோமகனும்

---

162. தோன்றாத - கண்ணுக்குப் புலப்படாத. களிறு - இராப்பொழுது. மானதன் - சோழனுடைய. மூரிக்களிறு - வன்மையையுடைய பட்டத்து யானை.

162–3. வேரித்தார் கற்கும் - மலையாகப் பூக்கும் அசோகம் இப் பொழுது விடுபூவாக்ப் பூக்கும்படி கற்கும்; தார் - பூ; அசோகம் மாலையாகப் பூத்தல்; "கோதைதாழ் பூம்பிண்டிக் கோமான்', 'குழாத்திரண் மொய்ம் மலர்த்தாமந் தாழ்ந்து......விரிந்தது வீரன் பிண்டியே" (சீவக. 1420, 3012.) கற்கும் என்றது மாலையாகப் பூத்தலே அதற்கு இயல்பு என்ற கருத்து; 'துவலை கற்ப என்றார், மிகப் பெய்தலே தனக்கு இயல்பு என்பது தோன்ற' ((நெடுநல். 20, ந.)

163. கவிகை - சோழனுடைய குடை.

(பி - ம்) 'முற்கொண்ட'

164. அலகில் - கணக்கில்லாத. மதுகரம் - வண்டுகள். ஒற்றை வலம்புரி; விக்கிரம. 65-6; குலோத். 84. முற்றுத - முதிராத.

(பி - ம்) 'மற்றை யுலகில்'

165. குதலைச் சொல்லையுடைய கோகுலங்கள்: கோகுலம் - கோகிலம்; "கோகுலமாய்க் கூவுநரும், ஆகுலமாகுநரும்" (பரி. 9 : 65-6.) அற்க மணி (அர்க்கமணி) - சூரியனைப் போன்ற ஒளியுள்ள மணிகளையுடைய. இக் கண்ணி சில பிரதிகளில் இல்லை.

166. மல்லல் - வளப்பத்தையுடைய. கவரிக்கால் - கவரியின் காற்று. மெல்லியலும் - பெதும்பையும்.

167. நோன்பு - நோன்பின் பயன். கோமைந்தன் வேழம் - சோழ னுடைய யானையை, கோமகனும் - சோழனும்.

168. மல்கு முவகைக் கலுழி வரவரப்
பில்கு மதர்வைப் பெரும்பரப்—பல்குலும்
169. கொங்கைப் புதுவரவுந் தோளுங் குறைநிரம்ப
மங்கைப் பருவத்தை வாங்கினுள்—மங்கை
170. திருக்கொள்ளு மார்பற்குக் காமவேள் செவ்வேள்
வெருக்கொள்ளுஞ் செவ்வி விளைத்தாள்—பெருக்க
171. ஒருவ ரொருவர்க் குருகி யுருகி
இருவரு மீடழிய நோக்கி—வருகாமன்
172. செஞ்சாயல் வல்லியையுஞ் செந்தா மரைத்தடங்கண்
மஞ்சாய கோல மணுளனையும்—அஞ்சாதே
173. கொய்யும் பகழி கரும்பிற் சுரும்பிற்கோத்
தெய்யுந் தரமே யெழப்போனுன்—தையல்

---

168. உவகைக்கலுழி - உவகையின் பெருக்கு. பில்கும் - துளிக்கும். மதர்வை - செருக்குதலையுடைய.

(பி - ம்) 'பெரும்பரப்பா மல்குலும்'

169. புதுவரவு என்றது முன்பு இல்லாமை பற்றி. 168-9 ; விக்கிரம. 175-7 ; குலோத். 179-80. மங்கைப் பருவத்தைப் பெதும்பைப் பருவத்திலேயே வாங்கினுள். மங்கை என்றது இங்கே பெதும்பையை.

(பி - ம்) 'கொங்கைப் புதுவனப்பும்'

170. திரு - திருமகள். காமவேள் - மன்மதன் செவ்வேள் - முருகக்கடவுள். வெருக்கொள்ளும் செவ்வி - அச்சம் கொள்ளும் அழகை. பெருக்க - மிக.

(பி - ம்) 'பருவத்தே வாங்கின மங்கை'

171. இருவரும் - சோழனும் பெதும்பையும். ஈடழிய - தம்மன வன்மை அழிய. நோக்கி வருகாமன் - அதனைப்பார்த்து வருகின்ற மன்மதன்.

172. செஞ்சாயல் வல்லி - சிவந்த சாயலையுடைய கொடி போன்ற பெதும்பை. மஞ்சாய கோலம் - மேகத்தைப் போன்ற கரிய நிறத்தையுடைய. மணுளன் - சோழன்.

(பி - ம்) 'மஞ்சாய சேலையையும் வுள்ளையையும்'

173. கொய்யும் பகழி என்றது பூவாகிய அம்பை. கரும்பில் - கரும்பு வில்லில். சுரும்பிற்கோத்து - வண்டுகளாகிய நாணில் வைத்துக் கோத்து. எய்யுந்தரமே - எய்யுமளவா? எழப்போனுன் - தூரத்தே போனுன் ; 142. தையல் - இளம்பெண்.

(பி - ம்) 'எனப்போனுன்'

## மங்கை

174. ஒருத்தி தரள மிருநிரைகொண் டொப்பித்
திருத்தி யனைய வெயிற்றுள்—கருத்தின்
175. நிலையிற் சிறந்த நிகரிலா மேரு
மலையிற் பிறந்த வயிரம்—அலையிற்
176. பழக்கச் சலஞ்சலம் பாற்கடலே போல
முழக்கக் கருவுயிர்த்த முத்தம்—தொழத்தகும்
177. முன்னை யுலக முழுதுந் தருமுரக
மன்ன னபிடேக மாணிக்கம்—முன்னவன்
178. பாற்கட னீங்குநா ணீங்கிப் பழம்படியே
நாற்கட னாயகனை நண்ணுவாள்—மேற்கவின
179. பண்டு கடல்கடைந்தும் பாரெடுத்தும் வில்லிறுத்தும்
கொண்ட துணைவியருங் கூசுவாள்—புண்டரிகத்

---

174. தரளம் - முத்துக்களை. இருநிரை கொண்டு - இரண்டு வரிசைகளாகக் கொண்டு. ஒப்பித்து - அலங்கரித்து. எயிறு - பல்; "முத்திருத்தியவ் விருந்தனைய மொய்ந்நகையொடும்" (கம்ப. 3. 1 : 2.)

(பி - ம்) 'கொண் டொக்க' 'கருத்து'

174-5. கருத்தின் நிலையின் சிறந்த - மதிப்பிலும் நிலையிலும் சிறந்த.

175. அலையில் - கடலில்.

176. பழக்கச் சலஞ்சலம் - பழக்கத்தையுடைய சலஞ்சல மென்னும் சங்கு; 133. கருவுயிர்த்த - பெற்ற.

(பி - ம்) 'பாற்கடனூற்' 'பாற்கடன்மீ தூர' 'பாற்கடலே தூர' 'திருவுயிர்த்த'

177. உலக முழுதும் தரும் - உலகம் முழுவதையும் விலையாகத் தரக்கூடிய. தொழத்தகும் மாணிக்கம், தரும் மாணிக்கம் என இயைக்க. உரக மன்னன் - பாம்புகளுக் கரசனாகிய சேடன். அபிடேக மாணிக்கம் - கிரீடத்திலுள்ள மாணிக்கம். முன் அவன்; அவன் என்றது சோழனை.

(பி - ம்) 'முன்ன ருலகம்' 'மன்னவன்'

178. நீங்கி - தானும் நீங்கி. பழம்படியே - முன்னிருந்த படியே. நாற்கடல் நாயகனை - சோழனை. கவின - அழகுபெறும்படி.

(பி - ம்) 'நீங்கிய நாள்' 'மேற்கவினால்'

179. கடல்கடைந்து கொண்டது திருமகளை. பாரெடுத்துக் கொண்டது பூமிதேவியை. வில்லிறுத்துக் கொண்டது சீதையை. துணைவியார் - தேவியார். கூசுவாள் - தன்னைக்கண்டு கூசத்தக்கவள். புண்டரிகத்து - தாமரைப் பூவில்,

180. தாடும் பொழுதினு மன்னப் பெடையயிர்ப்பப்
பாடு மழலைப் பரிபுரத்தாள்—நீடிய
181. தூசுகள் வெள்ளென்று தூயன சேயன
கோசிக மாக்குங் குறங்கினள்—கூசிப்
182. பணியு மரசுப் பணிச்சுடிகை யேகோத்
தணியு மரைப்பட் டிகையாள்—துணியுங்கால்
183. அற்றுண் டிலதென்று மம்மருங்கு லின்றெமக்குப்
பற்றுண் டெனுமுதர பந்தனத்தாள்—கொற்றவன்
184. சங்க நிதிமுத்தத் தாமத்தாள் பத்மநிதி
துங்க நவரத்னத் தோள்வளையாள்—புங்கம்
185. தொடுக்கு மலரோன் சுறவுக் குறவு
கொடுக்கு மகரக் குழையாள்—அடுத்துப்

---

180. அயிர்ப்ப - ஆண் அன்னத்தின் குரலென்று ஐயப்படும்படி. பாடும் - ஒலிக்கும். மழலைப் பரிபுரம் - மழலை வார்த்தையைச் சொல்லும் சிலம்பு; "புள்வாய் மணிமழலைப் பொற்சிலம்பினிக் கொடியை" (சீவக. 638.)

(பி - ம்) 'பெடையுயிர்ப்ப'

181. வெள்ளென்று தூயனவாகிய தூசுகள்; தூசு - ஆடை. சேயன கோசிக மாக்கும் - தன் நிறத்தால் சிவந்தனவாகிய பட்டாடையாக்கும்; "பைங்கூற் பாதிரிப் போதுபிரித் தன்ன, அங்கோ சிகமும்" (பெருங். 1. 42 : 204-5.)

(பி - ம்) 'தூயன செய்யன்' 'மூசிப்'

182. அரசுப்பணி - பாம்புகளுக்கு அரசனுடைய. சுடிகை - உச்சியி லுள்ள மாணிக்கங்களை. அரைப் பட்டிகை - இடையிலணியும் ஓர் ஆபரணம்.

183. அற்றுண்டு - அவ்வளவு உண்டோ. இலதென்னும் - இல்லையோ வென்று ஐயப்படும். மருங்குல் - இடை. பற்று - ஆதாரம். எனும் - என்று கருதுதற்குக் காரணமான. உதர பந்தனம் - வயிற்றின் மேற் கட்டப்படுவது.

184. சங்க நிதியில் தோன்றிய முத்துக்களால் செய்த மாலையை அணிந்தவள். துங்கம் - மேன்மை. புங்கம் - அம்பாக.

(பி - ம்) 'பற்பநிதித்'

185. மலரோன் - மன்மதன். சுறவுக்கு - கொடியிலுள்ள சுறு மீனுக்கு. மகரக்குழை - மகரகுண்டலம்.

(பி - ம்) 'அடுக்கப்'

186. பணிதந் தலகில் பராவெடுத்துச் சிந்தா
மணிதந்த சூளா மணியாள்—அணியே
187. பரவி விறலியரும் பாணருந் தற்சூழ்ந்
திரவி புகார்பாடு மெல்லை—வரவரக்
188. கொங்கைக்குந் தோளிணைக்கு மாற்றுக் கொடிமருங்குல்
நங்கைக்கு வந்தொருத்தி நாயகியே—கங்கைத்
189. துறைவன் பொறையன் றமிழ்நாடன் சோணாட்
டிறைவன் றிருப்பவனி யென்றாள்—பிறைநுதலும்
190. வேனிற் கணிய குயில்போன் றும் வீழ்தாரை
வானிற் கணிய மயில்போன் றும்—தானே
191. வரவே நினையு மனக்களியா விற்றை
இரவே நமக்கிடையூ றென்றாள்—இரவில்
192. செயிர்க்கரங்கள் வேண்டா டிருக்குலத்து வெய்யோன்
வெயிற்கரங்க ளூடாட வேண்டும்—உயிர்க்கொலைசூழ்
193. தென்மலயத் தென்றலை யோட்டிப் புலியிருந்த
பொன்மலைய வாடாய் புகுதென்னும்—முன்மலைந்த

---

186. பணிதந்து - ஆபரணங்களைக் கொடுத்து. அலகில் - கணக்கில்லாத. பராவு - புகழ்தல். சூளாமணி - முடி மணி.

(பி - ம்) 'பணிதந் தலகிலம் பார்மடுத்துச்' 'அலகிறந்த பாரெடுத்துச்' மணியான், அணிவ'

187. இரவி - சோழனுடைய. புகார் - தலைநகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்தை.

188. ஆற்று - பொருத. மருங்குலையுடைய நங்கைக்கு.

(பி - ம்) 'அங்கைக்குந் தோளிணைக்கும்'

188-9. கங்கைத் துறைவன் என்றது கங்கைக்கரையிலுள்ள நாட்டை ஆண்டமைப்பற்றி; "மந்தா கினிக்கோன்" (குலோத். 171.)

189. பொறையன் - சேரன். தமிழ் நாடன் - பாண்டியன். ஒருத்தி என்றாள் என முடிக்க. பிறைநுதல் : மங்கை.

190. அணிய - அண்மையிலுள்ள. வீழ்தாரை வானிற்கு - கீழே விழும் துளிகளையுடைய மேகத்திற்கு.

(பி - ம்) 'தானும்'

191. இற்றை இரவு இடையூறென்றது மறுநாள் சோழன் பவனி வருதல் பற்றி.

(பி - ம்) 'எனக்கிடையூறு'

192. செயிர்க்கரங்கள் - குற்றத்தைச் செய்யும் சந்திரன் கிரணங்கள், வெய்யோன் - சூரியனுடைய.

193. கொலைசூழ் தென்றல் என இயைக்க.

194. கார்க்கடல் வாயடங்க நாயகன் கண்வளர்ந்த
பாற்கடல் வாராய் பரந்தென்னும்—மேற்பரந்து
195. கார்பாடும் புள்வாய்க் கடுப்பெய் தமுதிறைவன்
பேர்பாடும் புள்வாயிற் பொய்கென்னும்—ஈர்குரல்
196. அன்றிற் கொழிய மகன்றிற்கே யாக்குமிம்
முன்றிற் பனையு மெனமொழியும்—இன்றிரவை
197. ஊழிக் குயில்காய்ந் தொருபுலரி கூவிய
கோழிக்கே சோலை கொடிரென்னும்—வாழிய
198. பள்ளி யெழுச்சி பவனி யெழுச்சிதரும்
வெள்ளி யெழுச்சி யெனவிளம்பும்—நள்ளிருட்
199. கங்குற் கடற்கெல்லை யிவ்வாறு கண்டுவந்த
மங்கைப் பருவத்து வாணுதலும்—பொங்கொலிநீர்

---

193. புலியிருந்த பொன்மலைய - மேருமலையிலுள்ள. வாடாய் : விளி. சோழன் புலிக்கொடியிருந்த மேருமலையினின்றும் வருதலின் வாடை தென்றலைக் காட்டிலும் இனியதாயிற்று. மலைந்த - போர் செய்த.

(பி - ம்) 'புகாயென்னும்'

194. கார்க்கடல் - கரிய நிறத்தையுடைய கடல். கண்வளர்ந்த - பள்ளிகொண்ட. பரந்து வாராய் என்னும். மேற்பரந்து - மேலே பரவி.

195. கார்பாடும் - மேகத்தைப்பாடுகின்ற. புள்வாய் - வானம்பாடியின்வாயில். கடுப்பெய்து - கைப்பான பொருளைப் பெய்து. இறைவன் பேர்பாடும் புள் : கிளி, பூவை முதலியன. அமுதைப் பெய்க என்னும். ஈர்குரல் - பிரிந்தவரை ஈர்வதுபோன்ற குரலையுடைய.

(பி - ம்) 'கடுப்பெய் தமிழ்க்கிறைவன்'

196. மகன்றிற்கே - நீரில்வாழும் மகன்றிலென்னும் பறவைக்கு. மகன்றில் : "பூவிடைப் படினு மியாண்டு கழிந் தன்ன, நீருறை மகன்றிற் புணர்ச்சி போல" (குறுந். 57 : 1-2), "குறுங்கான் மகன்றி லன்ன, உடன் புணர்க் கோள்கைக் காத லோரே" (ஐங். 381 : 4-5), "அலர் ஞெமன் மகன்றி னன்னர்ப் புணர்ச்சி" (பரி. 8 : 44) என்பவற்றால் இப்பறவையின் இயல்பு விளங்கும். முன்றிற்பனை - வீட்டின் முன்னிடத்தேயுள்ள பனை.

(பி - ம்) 'இன்றிர வூழிக்'

197. ஊழிக்குயில் - யுகம்போல ஆக்கும் குயிலை. புலரி - விடியற் காலத்தை. கோழிக்கே : ஏகாரம் பிரிநிலை.

(பி - ம்) 'வாழியெம்'

198. வெள்ளி யெழுச்சி - சுக்கிரோதயம். விளம்பும் - சொல்லுவாள். நள்ளிருள் - செறிந்த இருளையுடைய.

199. கங்குற்கடற்கு - இரவாகிய கடலுக்கு; கங்குலைக் கடலாகக் கூறுதல் : "கங்குல் வெள்ளங் கடலினும் பெரிதே" (குறுந். 377 : 5.)

(பி - ம்) 'கடியெல்லை'

200. வையகங் காவலற்குப் பெய்யு மலர்மழைக்குக்
கொய்பொழில் சென்று குறுகினாள்—செய்ய
201. கொடுங்குழை மின்னக் குயில்கொழுதக் கோத
விடுங்குழை தேமாவின் மின்ன—நெடுங்குழை
202. வல்லிக் கொடியு முறுவலிப்ப வந்தெதிர்
முல்லைக் கொடியு முறுவலிப்ப—மெல்லியற்
203. பாந்தளுந் தோற்கும் பகட்டல்குல் கைம்மலரக்
காந்தளு நின்றெதிர் கைம்மலரப்—போந்தார்
204. பரவு மரப்பாவை கொள்ளப் பயந்த
குரவு மரப்பாவை கொள்ளப்—புரிகுழற்
205. சோலையின் மான்மதஞ் சூழ்வர வேழிலைப்
பாலையின் மான்மதம் பாரிப்பச்—சோலையின்

---

201. கொடுங்குழை - வளைந்த காதணி. கொழுத - குடைய. குயில் கொழுதல்: "மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்" (நற். 9 : 10); கோத: கொழுத என்பதன் மரூஉ. விடுங்குழை - தோற்றுகின்ற தளிர். நெடுங் குழை - நீண்ட காதணியை அணிந்த.

(பி - ம்) 'குயில் கோதிக் கோதி' 'கோதப் போத'

202. வல்லிக்கொடி: மங்கை. முறுவலிப்ப - சிரிப்ப. முறுவலிப்ப - பற்கள் போன்ற அரும்புகளைத் தோற்றுவிக்க; "எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த, முற்றிழையாள் வாட முறுவலிக்கும்" (தண்டி. 48, மேற்).

(பி - ம்) 'மெல்லிய'

203. பகடு - பெருமை. கைம்மலர - இடம் வளர; "வாமமே கலையி னுள் வளர்ந்த தல்குலே" (கம்ப. 1. 12: 62.) கைம்மலர - கையைப்போல் மலர; காந்தளுக்குக்கை: "கைவி ரிந்தன காந்தளும்" (சூளா. நாட்டுச். 11.) போந்தார் - தன்னுடன் வந்த ஆயத்தார்.

(பி - ம்) 'போந்தாள்'

204. மரப்பாவை - மரத்தாற் செய்யப்பட்ட பாவையை. பயந்த - பெற்ற. குராவினது பூவைப் பாவையென்றல் மரபு; "நாறு பூங் குரவம் பயந்த, செய்யாப் பாவை கொய்யும் பொழுதே" (ஐங். 344.)

(பி - ம்) 'மலர்ப்பாவை' 'பயந்து'

204-5. புரிகுழற் சோலையின் - முறுக்குண்ட கூந்தலாகிய சோலையில்; கூந்தலுக்குச் சோலையை உவமையாகக் கூறுதல்: "தண்டலையுங் கார் மணலும்......தன்குழலையொப்பாம்" (உவமான சங்கிரகம், 1.)

(பி - ம்) 'மலர்ப்பாவை' 'பயந்து'

205. மான்மதம் - கஸ்தூரி. ஏழிலைப் பாலை - ஒவ்வொரு காம்பிலும் எவ்வேழு இலைகளையுடைய மரம். மான்மதம் - யானையினுடைய மத நாற்றம். பாரிப்ப - பரவச் செய்ய. ஏழிலைப்பாலை மலரினது மணம்

206. வாங்கும் புதுமது வாணுதல் கொப்புளிப்பக்
கோங்கு மதுவெதிர் கொப்புளிப்ப—ஆங்குத்

207. திருவஞ்சு கோலத்தாள் செவ்வியா லெல்லாம்
பருவஞ்செய் சோலை பயப்பப்—பெருவஞ்சி

208. கொய்தன கொய்தன யாவும் பலகூறு
செய்தனர் செய்தனர் பின்செல்லக்—கொய்யாத

209. பொன்மல ராயம் பொழியப் பொழிற்கொண்ட
மென்மலர் கொண்டு வெளிப்பட்டாள்—மன்னனும்

210. எப்போதிற் போது மொருபோதி லேந்திழை
கைப்போதிற் பெய்தன கண்டருளா—அப்போதே

211. செங்கை தடவந்துஞ் சீறடி தீண்டியும்
கொங்கை சுணங்கெறிந்துங் கொப்புளித்தும்—மங்கை

---

யானையின் மதத்தைப் போன்ற மணமுடையது; "பாத்த யானையிற் பதங்களிற் படுமத நாற, காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப், பூத்த வேழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக், காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு" (கம்ப. வரைக்காட்சி. 6).

206. புதுமது - புதிய தேனை. வாணுதல் : மங்கை. கோங்கு - கோங்க மரம்.

207. திருஅஞ்சு கோலத்தாள் - திருமகளும் அஞ்சத்தக்க அழகையுடைய மங்கையினது. செவ்வியால் - அழகால். எல்லாம் - எல்லாவற்றையும். பெருவஞ்சி - பெருமையையுடைய வஞ்சிக் கொடிபோல்வாள்.

(பி - ம்) 'செல்லவே யெல்லாம்'

208. அடுக்குகள் மிகுதிபற்றி வந்தன. பொன்மலராதலின் கொய்யாத என்ற அடை கொடுத்தார்.

(பி - ம்) 'பின்செல்லப் பொய்யாத'

209. பொழிற்கொண்ட - சோழன்மேல் தூவுதற்குச் சோலையிற் பறித்துக்கொண்ட.

210. எப்போதில் போதும் - எல்லாப் பருவங்களிலும் உண்டாகும் பூக்களையும் ஒருபோதில் - ஒரே பருவத்தில். ஏந்திழை - மங்கை. கைப் போதில் பெய்தன - கையாகிய மலர்களால் சொரிந்தனவற்றை. கண்டருளா - கண்டருளி.

(பி - ம்) 'பெய்வன'

211. தடவந்தும் - தடவியும். கொங்கை சுணங்கெறிந்தும் என்றது மங்கை தழுவுதலை; "ஏடவிழ் மகிழ்சு வைக்க வெழிற்பாலை கண்பு கூடப், பாடல நிந்திக் கத்தேம் படிமுல்லை நகைக்கப் புன்னை, ஆடவீள் குராவ ணைக்க வசோகுதைத் திடவா சந்தி, பாடமாப் பார்க்க வார்சண் பகநிழல் பட்டத ளிர்க்கும்" (சூடாமணி நிகண்டு.)

(பி - ம்) 'குரிசில் கவர்த்தணிந்து' 'பொருவரிய'

212. பரிசி லுருவம் பயந்தன வென்று
குரிசி லெதிர்கவர்ந்து கொண்டான்—தெரிவரிய
213. தூசுந் துகிலுந் தொடியுங் கடிதடஞ்சூழ்
காசும் பலகாற் கவர்ந்ததற்கு—கூசி
214. இலகுஞ் சுடர்முடியு மியானையு மீரேழ்
உலகுங் கொடுப்பானே யொப்பப்—பலகாற்
215. கொடாத திருநோக்க முற்றுங் கொடுத்து
விடாது களிறகல விட்டான்—அடாதான்பால்

## மடந்தை

216. ஈரடியான் மூவுலகுங் கொண்டானை யெப்பிறப்பும்
ஓரடியு நீங்காதா ளோரணங்கு—சீருடைய
217. மானுங் கலையும் வளர வுடன்வளர்ந்து
தானு மதிய மெனத்தகுவாள்—பானின்று
218. அனலுங் குழைமகர மஞ்சப் புடைபோய்க்
கனலுங் கயலனைய கண்ணுள்—மினலால்

---

212. பரிசில் மங்கை உருவம் பயந்தன - இவளுடைய செயலுக்குப் பரிசிலாக மங்கையின் வடிவத்தைப் பெற்றன. குரிசில் : சோழன். தெரிவரிய - இழைகள் தெரிவதற்கு முடியாத.

213. தூசு - பட்டாடை. துகில் - பருத்தியாடை. காசு - மேகலையி லுள்ளவை. கவர்ந்ததற்குக் கூசி - தான் மங்கையிடமிருந்து கவர்ந்து கொண்டதற்கு நாணி.

(பி - ம்) 'ஒத்துப் பலகால்'

215. திருநோக்கம் - தன்னுடைய பார்வையை. முற்றும் கொடுத்து விடாது என்றபடி. களிறு அகலவிட்டான் - தன் யானையை அத்தெருவை விட்டு நீங்கும்படி செலுத்தினன். அடாதான்பால் - பொருந்தாதவனாகிய மகாபலியினிடத்தில்.

(பி - ம்) 'திருநோக்கு முட்டக் கொடுத்து' 'விடாத'

216. அணங்கு - மடந்தை. சீர் - சிறப்பு.

217. மானும் கலையும் - தான் வளர்க்கும் பெண்மானும் ஆண் மானும். மதிக்கும் மானும் கலையும் உண்மையால் மதியமெனத் தகுவாள் என்றார். பால்நின்று - பக்கத்தே நின்று.

218. அனலும் குழை மகரம் - கோபிக்கும் காதணியாகிய மகரமீன். 'படைபோய்' என்னும் பாடத்துக்குப் படையாய்ப் போய் எனப் பொருள் கொள்க. கனலும் - மகரத்தைக் கோபிக்கும். மினலால் - மின்னுதலால்.

(பி - ம்) 'சினமகரம்', 'சிலமகரம்' 'படைபோய்க்', 'கடை போய்க்'

219. இருளுடைய மேனின் றெறிசுடிகைப் பாப்புச்
சுருளுடைய வீங்கிய தோளார்—அருளொடும்

220. தம்புறஞ் சூழ்போதத் தாயரே வீக்கிய
வம்பற வீங்கும் வனமுலையாள்—பைம்பொனின்

221. பண்ணிறக் காஞ்சியுங் கட்டிய பட்டிகையும்
கண்ணிறப் போய கடிதடத்தாள்—தண்ணறுந்தார்

222. மின்மணி மோலியான் வீதி வரவேற்றுத்
தன்மணி மாளிகைத் தாழ்வரையிற்—பொன்னுருவில்

223. தைத்துத் துகிரு மரகதமுந் தாருக
வைத்துக் கமுக வனஞ்செய்து—முத்தின்

224. பொலன்றோ ரணநிரைத்துப் பொன்னடுத்த மேக
தலந்தோய் விசால தலத்து—மலர்ந்தபூங்

---

219. இருள் உடைய - இருள் தோற்றுப்போகும்படி. சுடிகை - உச்சி. பாம்புச் சுருள் - பாம்பு வடிவமாகிய தொடி; 61, 95.

220. தம்புறம் : தம் என்றது கொங்கைகளை. தாயரே : ஏகாரம் சிறப்பு. அருளொடும் (219) வீக்கிய என இயைக்க. வம்பு - கச்சு.

(பி - ம்) 'செம்பொனின்'

221. பண் - ஒலியையுடைய. பட்டிகை - அரைப்பட்டிகை; 182. கண் இற - மூட்டுக்கள் சிதறும்படி. போய - எல்லைகடந்து வளர்ந்த. தார்; இங்கே ஆத்திமாலை.

222. மோலியான் : சோழன். ஏற்று - எதிர்கொண்டு. தன் மணிக ளிழைத்த வீட்டின் கீழ்ப்பக்கத்தே; தாழ்வரை என்றமையால் மாளிகைக்கு மலையுவமை யென்பது பெறப்படும். பொன்னுருவில் - பொன்னாகிய வடிவத்தில்.

(பி - ம்) 'மௌலியான்' 'மாளிகையிற் றாழ்வரையில்' 'பொன் னுருவத்', 'பொன்னுருவைத்'

223. தைத்து - பொருத்தி. துகிர் - பவழம்; இது கமுகம் பழத்துக்கு உவமை. மரகதம் பசுங்காய்க்கு உவமை; "கருங்கமுகு பசும்பாளை வெண்முத் தீன்று காயெல்லா மரகதமாய்ப் பவளங் காட்ட" (பெரிய திருமொழி, 2. 10 : 7.) தாறு - குலை. முத்தின் - முத்தினால் ஆகிய.

224. பொலன் தோரணம் - அழகிய தோரணத்தை. நிரைத்து - வரிசையாக அமைத்து.

(பி - ம்) 'பொன்னெடுத்து', 'மலர்ந்தன'

225. கற்ப தருநிரைக் கற்ப லதைபடர்ந்து
பொற்ப மிசையடுத்த பூம்பந்தர்—நிற்பப்
226. புகரற்ற ரத்ன விதானமேற் போக்கி
நகைவச்ர மாலையே நாற்றி—பகல்விளங்கா
227. மைவிளக்கு வையாதே மாணிக்க வர்க்கமே
எவ்விளக்கு மாக வெதிரெடுத்து—நொவ்விய
228. பூநறுஞ் சுண்ணப் பொடியடங்க வீசிய
நான நறுநீர்த் தளிநளிய—மேனிலையிற்
229. கங்கையி னீர்முகந்தோ காவிரியி னீர்கொணர்ந்தோ
கொங்கை யிணைநீர்க் குடநிரைத்து—எங்கும்
230. அசும்பு பொலன்கொடியா லவ்வெல்லை யுள்ள
விசும்பு தவிர விலக்கிப்—பசும்பொன்யாழ்
231. முட்ட முயன்ற விறலியர் முன்னிருப்ப
இட்ட தவிசின் மிசையிருந்து—பட்டினஞ்சூழ்

---

225. கற்பலதை - கற்பகமரத்தில் படரும் காமவல்லியென்னும் கொடி. படர்ந்த பந்தரென இயைக்க. பொற்ப - பொலிவுபெற. மிசை யடுத்த - மேலே பொருந்திய.

(பி - ம்) 'கற்ப தருநிரைக்காங் கற்ப லகைமிடைந்த', 'கற்பலகை தந்து' 'மிசைப்படுத்த'

226. புகர் - மாணிக்கத்திற்குக் கூறப்பட்ட குற்றங்கள். விதானம் - மேற்கட்டியை. நகை - ஒளியையுடைய. நாற்றி - தொங்கவிட்டு.

(பி - ம்) 'புகரத்ன முத்த விதான' 'பகல் விளக்கா', 'பகலவன்'

227. மை விளக்கு - கருமையையுடைய விளக்கை. வர்க்கம் - தொகுதி. நொவ்விய - மென்மையான.

228. வீசிய - சிவிறியினால் வீசிய. கஸ்தூரியின் மணமுடைய நீர்த் துளிகள் குளிரைச் செய்ய. மேல் நிலையில் - தன்னுடைய மாளிகையின் மேல் நிலையிலுள்ள.

(பி - ம்) 'நறுநீர்த் துளி', 'நறுநீர் நளிர் நளிப்ப'

229. கொங்கையிணையாகிய நீர்க்குடங்களை.

(பி - ம்) 'கங்கையினீர் கொணர்ந்தோ' 'கொங்கை யிளநீர்க்', 'கொங்கையினன்னீர்க்'

230. அசும்பு பொலன் கொடியால் - துளிப்பதுபோன்ற பொன்னாற் செய்த கொடியால். அவ்வெல்லை என்பது தானிருக்கும் அவ்விடத்தை. விலக்கி - விசும்பின் மற்றப் பகுதியை விலக்கி.

(பி - ம்) 'அவ்வேலை யுள்ள'

231. முட்ட - முற்ற. இட்ட தவிசின் - பணிமகளிரால் இடப்பட்ட ஆசனத்தில். மிசை - மேலே. பட்டினம் - காவிரிப்பூம்பட்டினம்.

(பி - ம்) 'பெருமானை நல்கச் சதகோடி'

232. பொன்னிக்குங் கோதா விரிக்கும் பொருநைக்கும்
கன்னிக்குங் கங்கைக்குங் காவலனைச்—சென்னியை
233. தானைப் பெருமானை நல்ல சகோடங்கொண்
டியானைப் பெருமானை யேத்தெடுப்பாள்—மேனாள்

## யானையின் பெருமை

234. உகந்த பிடியுடனே யோரெண் பிடியும்
திகந்த களிறெட்டுஞ் சென்று—முகந்து
235. துறக்குங் கடன்முத லேழுஞ் சொரியச்
சிறக்கு மபிடேகஞ் செய்து—விறக்கும்
236. உயிர்காவன் மேற்கொண் டுலகைவலஞ் செய்யும்
அயிரா பதமத யானை—உயரும்
237. கடநாக மெட்டுங் கடநாக மெட்டும்
படநாக மெட்டும் பரந்தீர்த்—துடனுகைத்
238. தென்னர் வலம்புரியுஞ் சேரலர் சாமரையும்
கன்னுவ தங்கிசமாக் கைக்கொண்டு—பின்னவர்

---

232. பொருநை - தாமிரபர்ணி. சென்னி - சோழன்.

233. சகோடம் - சகோட யாழ். சகோட யாழைக் கொண்டது யானைப் பெருமானை வசமாக்குதற்கு; "யாழாய் மிடற்றால் வளைக்குதும் யாமென்பார்" (குலோத். 216.) யானைப் பெருமான் - சோழன் ஏறிவரும் யானை; 300. ஏத்தெடுப்பாள் - புகழத் தொடங்குவாள்.

234. உகந்த பிடி - தான் விரும்பிய பெண் யானை. எட்டுப்பிடியும் திசையானை எட்டுக்கும் உரியன. துறக்கும் - தம்மிடமுள்ள நீரை விடும். முகந்து சொரிய (235) என இயைக்க.

(பி - ம்) 'களிறெனவும்'

235. பிடியுடனே (234) அபிடேகம் செய்து. விறக்கும் - அஞ்சுகின்ற; "அவற்றுள், விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்" (தொல். உரி. 50.)

(பி - ம்) 'செய்து பிறக்கும்'

237. கடநாகம் - மதத்தையுடைய யானைகள். கடநாகம் - காட்டையுடைய மலைகள். படத்தையுடைய நாகம்; நாகம் - பாம்பு; குலோத். 34. பரந்தீர்த்து - தாங்குகின்ற பாரத்தைப் போக்கி. உடனுகை - சேர.

(பி - ம்) 'கதநாகம்', 'படந்தீந் துடனுகை'

238. தென்னர் - பாண்டியருடைய. வலம்புரி - வலம்புரிச் சங்கு. கன்னுவதங்கிசம் - காதிலணியும் பூக்கள். அவர் - அவ்விரண்டு அரசருடைய.

(பி - ம்) 'மன்னவர்'

239. வாளகை மௌலி யிரண்டு மிருகோட்டுக்
கோள்கையா கக்கொண்ட கோக்களிறு—மாளிகை

240. தாக்குண்ட வாயில்க டோறுந் தனிதூங்கித்
தூக்குண்ட கண்டை தொடருடனே—வீக்குண்டங்

241. காராத நாளைக்குப் போதக் கிடந்தார்ப்பத்
தாராகக் கொண்ட மதாசலநீர்—வாரா

242. நதிக்கு மலைக்கு மடவிக்கு நாளும்
குதிக்கு மதச்சுவடு கோத்து—மதிக்கும்

243. பிடிவிடாக் காதற் பெருங்களிறுங் கன்றும்
அடிவிடா தவ்வா றடையப்—படிவிடா

244. திட்டும் பெருவாரி யேழென்பா ரெட்டென்னக்
கூட்டும் பெருங்கடவுட் கொல்யானை—நாட்டில்

245. பணிகொண்ட பூதம் படைநான்கும் பற்றப்
பணிகொண்ட பௌவம் பரக்க—பணிகொண்ட

---

239. வாள் அகைமௌலி - ஒளி மலர்ந்த கிரீடங்கள்; "அகை மத்தத்து" (தக்க. 98.) கோள்கை - யானைத் தந்தத்திலிடும் பூண். கோக்களிறு - தலைமையையுடைய யானை.

(பி - ம்) 'மோலி'

240-41. அங்கு ஆராத நாளைக்கும் - அப்பகையரசர் அரண்மனை வாயிலில் ஒலியாத நாட்களுக்கும் ஈடுசெய்யும்படி.

(பி - ம்) 'தனிதூங்கத்' 'தண்டைத்'

241. போத - மிக. கிடந்துஆர்ப்ப - தன்மேலே கிடந்து ஒலிக்கும்படி. தார் - கண்டை மாலை. மதாசலம் - யானை. நீர் வாரா - தண்ணீர் வற்றிய.

(பி - ம்) 'மதசலதி வாரி'

242. நதி, மலை, அடவி என்றது நதிசரம், கிரிசரம் வனசரம் என்னும் மூவகை யானைகளைக் குறிப்பித்தது; குலோத். 212-14. கோத்து - ஒன்றாகக் கூட்டி.

(பி - ம்) 'மதச்சுவடு கொண்டு'

243. பிடிவிடா - பெண்யானை நீங்காத. அவ்வாறு அடைய - அந்த மதச் சுவட்டின் வழியே தன்னையடைய. படிவிடாது - பூமியை விடாமல்.

244. பெருவாரி - பெரிய கடல்கள். எட்டென்ன - மத நீரால் எட்டுக் கடலென்று சொல்லும்படி. கடவுள் - தெய்வத்தன்மையையுடைய.

(பி - ம்) 'ஈட்டுங் கரிவாரி' 'நாட்டிப்'

245. பணிகொண்ட - ஏவலைக்கொண்ட. பாண்டியர் ஒரு பூதத்தை ஏவல்கொண்டது; "பூதம் பணிகொண்ட பூழியன் மாறன்" (பாண்டிக் கோவை); "தடம்பூதம் பணிகொண்டு" (சின்னமனூர்ச் சாஸனம்); "பூதம் பணிகொண்டாய்", "பணிகொண்ட காரையு மூங்கீரை யும்பெரும் பூதத்தையும், பணிகொண்ட செண்பகத் தென்னு பராக்கிரம பாண்டியனே"

246. கார்முற்றும் பேரிடி வீழ்ப்பக் கௌரியர்
ஊர்முற்றுஞ் செற்ற தொருகூற்றம்—சேரர்
247. கனக்கு மனீகக் களந்தொறுங் கைக்கொண்
டினக்கு மரசுவா வெல்லாம்—தனக்குத்
248. துணிக்குங் கழைக்கரும்பு நெல்லுஞ் சுமக்கப்
பணிக்குங் கடவுட் பகடு—தணிப்பரிய
249. பூகங்கை தாடோயச் செங்கை புயல்வானின்
மாகங்கை தோயப்போய் மாமேரு—நாகங்கைக்
250. கொண்டு தனித்தங்கள் கோள்வேங்கை வீற்றிருப்பக்
கண்டு களிக்குங் களியானை—வண்டலம்ப
251. நின்று குதிக்கு மதத்தி னிலநெகிழ்ந்தெக்
குன்று மொளித்துக் குளிப்பமுன்—சென்றழுத்திப்
252. பண்டு வெளியின் மகதத்தைப் பாவடியால்
செண்டு வெளிகண்ட செங்கைமாக்—கண்ட
253. மதிலே யகழாக வாங்கி யகழே
மதிலா வெழாநிற்க வைத்துப்—புதுமலர்செய்
254. வாவியைச் செய்குன்ற மாக்கியச் செய்குன்றை
வாவிய தாக வெனவகுத்துத்—தாவுமான்

---

(பெருந்தொகை, 913, 943) ; "போய பருவம் பணிகொள் பூதங்க ளேயன் றிப், பேயு மரும்பணி செய்ய" (பெரிய. நின்றசீர் நெடுமாற. 6.) பணி கொண்ட - பணிதலைக் கொண்ட. பௌவம் - கடல்.

246. கார் முற்றும் - மேகங்கள் முழுவதும். கௌரியர் - பாண்டியர்க ளுடைய.

(பி - ம்) 'பேரணி' 'பேரடி' 'தொரு களிறு' 'சேரார்' 'வாரிற் கனக்கும்' 'திரக், கனக்கும் விசயக்'

251. நின்று குதிக்கும் - நிலைபெற்றுக் குதிக்கும்; குதிக்கு மென்றதனல் மதத்தின் மிகுதி பெறப்பட்டது; "முகபாகை குதிபாய் கடாம்" (தக்க. 3.) நிலநெகிழ்ந்து - தரைவல்லென்ற தன்மை நீங்கி. குன்று ஒளித்தல் : விக்கிரம. 290.

(பி - ம்) 'மதத்துநில நெகிழ்த்தெக்' 'மொளிப்பக் குளிப்பப்பின்', 'குளித்ததற் பின்' 'சென்றெழுதிப்'

252. வெளிஇல் - வெற்றிடம் இல்லாத. பாவடி - பரந்த அடி. செண்டுவெளி - யானைச் செண்டென்னும் விளையாட்டைச் செய்யுமிடம்; சீவக. 275, 277, ந.

(பி - ம்) 'பண்டுகையின்' 'மதத்தைப் பாவடியாற் றுவடிபோய்' 'செய்த செக்கண்மா' 253. 'மதிலேயெழா' 'புதுமைசெய'

254. வாவி - தடாகம். (பி - ம்) 'வாவிகள் செய்குன்றமாகவுஞ் செய்குன்றம்' 'வாவிகளாக வெழ'

255. வெள்ளிடை கோநக ராக்கியக் கோநகர்
வெள்ளிடை யாக வுடன்விதித்துத்—தெள்ளிப்
256. புரப்பா ரிரப்பாராய்ப் போக விரப்பார்ப்
புரப்பாரே யாக்கும் புகர்மாத்—திருக்குலத்துக்
257. கண்ட னயிரா பதமதங்கால் காலத்துக்
கொண்ட தொருசுவடு மேல்கொண்டு—வண்டு
258. கடியுங் களிறுங் களிருமே காதற்
பிடியும் பிடியாமே பின்னர்க்—கடிமதில்
259. மாற்று மருமணம் வங்காள பாகத்து
வேற்று மதமா ம்ருகமதத்தைப்—போற்ருர்

---

254-5. மான்தாவும் வெள்ளிடை - மான்கள் துள்ளி விளையாடும் திறந்த வெளிகளை.

255. கோ நகர் - அரசன் வாழு நகரம்.

(பி - ம்) 'வெழு விதித்து'

256. புரப்பார் - பகையரசர். புகர் - புள்ளி.

251-6. இக்கண்ணிகளின் பொருளமைதியோடு பின்வரும் செய்யுட்கள் ஒப்புநோக்கத்தக்கன ; "ஊரு மரவமுந் தாமரைக் காடு முழவரம்பும், தேரு முடைத்தென்பர் சீருத நாணந்தி சீறியநாள், ஊரு மரவமுந் தாமரைக் காடு முழவரம்பும்,தேரு முடைத்தென்பரேதெவ்வர் வாழுஞ் செழும்பதியே", "கோட்டை யிடித்தகழ் குன்ருக்கிக் குன்றகழ் தூராக்கித்தெவ்வர், நாட்டை மிதிக்குங் கடாக்களிற் ருனந்தி" (நந்திக்கலம்பகம்) ; "தள்ளா விடத்தேர் தடந்தா மரையடைய, எள்ளா வரிமா னிடர்மிகுப்ப - உள்வாழ்தேம், சிந்துந் தகைமைத்தே யெங்கோன் றிருவுள்ளம், நந்துந் தொழில் புரிந்தார் நாடு" (தண்டி. 77, மேற்.)

257. கண்டன் - இராசராசன். அயிராபதம் - பட்டத்து யானை. மதம் கால் - மதத்தைச் சொரிகின்ற. வண்டு - மதத்திற் படியவரும் வண்டை.

(பி - ம்) 'சுவடு கொள்ளுமே'

258. கடியும் - ஓட்டும். களிறு - ஆண் யானை. பிடி - பெண் யானை. கடி மதில் - காவலையுடைய மதிலை.

259. அருமணம் - ஒரு நாடு; இஃது யானையிற் சிறந்தது ; 'அருமண வன்' (நன். 209, 275, மயிலை. மேற்.) ; "சாவகமெறிந்தரு மணம் பொருத" (குலோத். பிள்ளைத். 92.) வங்காளத்து யானை : "வங்காளர் வேழவணி" (குலோத். பிள்ளைத். 13.) வேற்று மதமா - வேற்று யானைகளுடைய. போற்ருர் - பகைவருடைய.

(பி - ம்) 'மாற்று வருவன'

260. வயிரா கரமெறிந்த மானதன் கண்டன்
அயிரா பதமதமே யாக்கிச்—செயிர்தீர்ந்த
261. காதற் பிடிதேற்றத் தேருக் கடாக்களிறென்
றோதப் பெயரு மொருபொருப்புப்—பாதையிற்
262. கச்சியிற் கற்றளியிற் கல்விற் கலிங்கத்திற்
கொச்சியிற் கோதா விரிக்குளத்தில்—விச்சியில்
263. வல்லூரிற் கொல்லா புரத்தின் மணலூரில்
நெல்லூரிற் புத்தூரி னெட்டூரிற்—செல்லூரிற்
264 கோட்டாற்றிற் கொங்கிற் குடக்கூரிற் கொப்பத்தில்
வாட்டாற்றிற் காம்பிலியின் மண்ணையில்—வேட்டுத்
265. தரணி கவர்ந்து தமிழ்வேந்தர் பாடும்
பரணி புனைந்த பகடு—சரணென்று

---

260. வயிராகரம் : "வயிராகரத்துக் குஞ்சரக் குழாம்பல வாரி", "மதவரை யீட்டம், வயிரா கரத்து வாரி" (பெருந்தொகை, 798-9.) ம்ருக மதத்தை (259) அயிராபத மதமே யாக்கியென இயைக்க. செயிர் - கோபம்.
(பி - ம்) 'செயிர் தீர்த்தக் காதற்'

261. பிடிதேற்ற - பெண் யானை தெளிவிக்க. தேரு - தெளியாத. பொருப்பு - மலை. பாதை : வாதாபி என்பதன் சிதைவு.
(பி - ம்) 'பிடித்தேருத் தேரு'

262. கச்சியிற் கற்றளி - காஞ்சிபுரத்துள்ள கைலாஸநாதர் கோயில். விச்சி - ஒரு மலை ; குறுந். 328 : 5 ; பதிற். 9-ஆம் பதிகம் ; புறநா. 200 : 8.
(பி - ம்) 'காற்றளையிற்' 'கொச்சியில் வாதாவியிற்' 'விச்சையில்'

263. கொல்லாபுரம் - இப்பொழுது 'கொல்ஹாப்பூர்' என்று வழங்கும் ஊர். 'கொல்லாபுரம் பொருது' (குலோத். பிள்ளைத். 12.) மணலூர் - பாண்டியருடைய பழைய தலைநகரம். புத்தூர், நெட்டூர் : "அரசொடு முரசொடு முட்டிய நெட்டூரில், இறைபட வவனெயி லெழுவிடு முனைமதில் குத்திய புத்தூரை யெரியிட" (குலோத். பிள்ளைத். 40.)

264. கோட்டாறு : இஃது இக்காலத்தில் நாகர் கோயில் எனவழங்கும். கொங்கிற் குடக்கூர் - கொங்குநாட்டிலுள்ள குடக்கூர். கொப்பம் - துங்கபத்திரையின் கரையிலுள்ளது. வாட்டாறு - நாகர் கோயிலுக்குப் பக்கத்திலுள்ளது. காம்பிலி - சாளுக்கியருக்கு உரிய நகரம் ; "வட கம்பிலியுமன்று" (குலோத். பிள்ளைத். 89.) மண்ணை - மண்ணைக் கடக்கம் என்னும் ஊர் ; "மகோதை யெயிலன்று மதின் மண்ணை நகரன்று" (குலோத். பிள்ளைத். 89); இது 'மான்யகேதம்' என இக்காலத்து வழங்கும். வேட்டு - களவேள்விகளைச் செய்து.
(பி - ம்) 'கொங்குலவு கூடகூரில்' 'கம்பணையின்' 'கம்பலையின்'

265. தரணிகவர்ந்து - பகையரசருடைய நாடுகளைக் கவர்ந்து. பரணி : ஒருவகைப் பிரபந்தம். பகடு - யானையை. சரணென்று - தனக்குப் புகலென்று. (பி - ம்) 'தரணி புனைந்து'

266. வாடா மதுரயாழ் வாங்கி மடவரல்
பாடா விருந்த பருவத்து - நீடாப்
267. பரிசி லுடனே பணிப்பதுபோல் யானை
குரிசி லுடன்வந்து கூடத் - தெருவில்
268. வரவந்தான் மன்னர் பிரானென்று மாரன்
பொரவந்தான் கைவாங்கிப் போனான் - விரல்கவரும்
269. வீணைக் ககப்பட வேழ மிடற்றுக்கும்
ஆணைப் பெருமா ளகப்பட - வாணுதல்
270. ஐந்து சுரர்தருவு மைந்து திருமாலை
தந்து தொழவெழுந்து சாத்தினாள் - மைந்தனும்
271. பண்ணுக்கே தோற்பான் பணைமுலைக்கு மல்குலுக்கும்
கண்ணுக்குந் தோலானே கைக்கொண்டான் -
[வண்ணமும்

---

266. மதுரயாழ் - இனிய இசையையுடைய சகோடயாழை; 233. மடவரல் - மடந்தை. பாடாவிருந்த - பாடிக்கொண்டிருந்த. நீடா - தாமதியாமல்.

267. பரிசிலை உடனே பணிப்பதுபோல்; - பணிப்பது - கட்டளையிடுவது. குரிசிலுடன் - சோழனோடு.

268. வர - சோழன் வர. மாரன் - மன்மதன். போனான் - அவ்விடத்தைவிட்டு அகன்றான். விரல் கவரும் - விரல்களால் விரும்பி வாசிக்கப்படும்; விக்கிரம. 101-2. (பி - ம்) 'விரல் கவர'

269. வீணைக்கு வேழம் அகப்பட - வீணை யிசைக்கு யானைவசமாக. யானை இசைக்கு வசமாதல் ; குலோத். 216 ; "வகையுடை நல்யாழ் வரத்தில் பெற்றதூஉம், விசையுடை வேழம் வணக்கும் விச்சையும்" (பெருங். 2. 11: 154 - 5); "ஐம்புல வேழத்தின் வெங்தொழில் வீயக், கருணை வீணை காமுறத் தழீஇ" (ஞானமிர்தம், 4 : 10 - 11.) மிடற்றுக்கும் - கண்டப்பாட்டுக்கும். ஆணைப் பெருமாள் - ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தும் சோழன். அகப்பட - வசமாக ; 271. வாணுதல் - மடந்தை.

(பி - ம்) 'ஆணைப் பெருமான்'

270. சுரர்தரு ஐந்தும் - சுவர்க்கத்திலுள்ள கற்பகம் முதலிய ஐந்து மரங்களும். மாலைகளைத் தந்து தொழ, மடந்தை அவற்றைச் சோழனுக்குச் சாத்தினாள் ; மைந்தன் - சோழன்.

271. பண்ணுக்கே - இசைக்கே. பணைத்தல் - பெருத்தல். தோலானே - தோல்வியடையாமல். 271 - ஆம் கண்ணியின் பொருளோடு, 'பாடினளாய் வரினென்ற கருத்து : அவட்கும் அவ்வாறன்றித் தன் பெண்மையால் மயக்கி வென்று கோடல் அரிதென்பதாம்' (புறநா. 111 : 3 - 4, விசேடவுரை) என்பது ஒப்பிடற்குரியது. கைக்கொண்டான் - மாலைகளைக் கையிற் கொண்டான். வண்ணமும் - மாமை நிறமும்.

272. வெண்டுகிலுங் காஞ்சியு மேகலையுந் தோள்வளையும்
கொண்டவற்றின் மாறு கொடுப்பான்போற் - பண்டை
273. முடியுஞ்சிங் காதனமு முத்தக் குடையும்
படியு மரசும் பணித்தான் - பிடியும்
274. சிவிகையு நிற்பவச் சேயிழை வீதி
கவிகையுந் தானுங் கடந்தான் - குவிமுலை

அரிவை

275. ஏனை யரிவை யொருத்தி யிகன்மாரன்
சேனை திரண்டனைய செவ்வியாள் - வானில்
276. விடுசுடர்ச் செக்கர் வியாழமுந் தோற்கும்
படுசுடர்ச் செம்பொற் படியாள் - வடிவு
277. நெடிதோர்க்கி லொக்கு நிறைமதிய நேரே
படிதோற்கும் முத்தின் படியாள் - முடிவில்
278. குலபதும ராக பதிகுதி கொள்ளும்
பலபதும ராகப் படியாள் - அலைகடலில்

---

272. தோள்வளை - வாகுவலயம். கொண்டவற்றின் மாறு - மடந்தையிடமிருந்துதான் கொண்டவற்றிற்குப் பிரதியாக.

(பி - ம்) 'பல்வளையும்'

272-3. பண்டைமுடி - பழையதாக வருகின்ற கிரீடம்; "பவித்ர விசயப் படைப் பரசு ராமன், கவித்த வபிடேகங் காணீர்" (89.)

273. முத்தக்குடை - முத்து மாலைகளை யணிந்த குடை. படி - பூமி. பணித்தான் - கட்டளையிட்டான்.

(பி - ம்) 'பணிப்பான்'

274. சேயிழை - மடந்தையினது. கவிகை - குடை. வீதியைக் கடந்தான்.

275. ஏனை - மற்றைய. இகல்மாரன் சேனை - மாறுபாட்டையுடைய மன்மதனது சேனையாகிய மகளிர்.

276. செக்கர்ச்சுடர் - சிவந்த ஒளியையுடைய. படுசுடர் - மிக்க ஒளியையுடைய. (பி - ம்) 'படிசுடர்ப் பைம்பொற்'

277. நெடிது ஓர்க்கில் - நெடுநேரம் ஆராய்ந்தால். நிறைமதியம் - பூர்ண சந்திரன். படிதோற்கும் - ஒப்புக்குத் தோற்கும். முத்தின்படி - முத்தாற் செய்யப்பெற்ற ஒருவகை ஆபரணம்; "முத்தின், படிக்குச் சலாபம் பணித்தான்" (336.) (பி - ம்) 'நெடிதோற்கில்' 'படிகோக்கும்' 'படிநோக்கு'

278. பதுமராக பதி - சூரியன். குதிகொள்ளும் - மகிழ்ச்சியால் குதித்தலைக்கொள்ளும். பதுமராகப்படி - மாணிக்கத்தாற் செய்யப்பட்ட ஆபரணங்கள். கடல் - பாற்கடல்.

279. முற்று மரையாண் முகத்தா மரையாளப்
பொற்று மரையாளப் போதுவாள் - அற்றைநாள்

## நீர் விளையாட்டு

280. தண்ணென் கழுநீர்த் தடம்பொய்கை நாமெலாம்
அண்ணல் வருமளவும் மாடுதுமென் - றெண்ணிப்
281. புணைக்கும் மொருதன் புறங்காவ லாயத்
துணைக்குந் தடஞ்சுருங்கத் தோயப் - பணைத்துப்
282. புடைக்கும் விசும்பிடம் போதா முலைக்கும்
நடைக்கு முதற்பகை நாமென் - றுடைப்புண்டு
283. பின்னர்ப் பெருஞ்சக்ர வாகப் பெருங்குலமும்
அன்னக் குலமு மலம்வரப் - பின்னரும்
284. காற்குங் கருங்கட்கு முட்காதே கைவகுத்
தேற்குந் தரமோநா மென்றுபோய்த் - தோற்கின்ற

---

279. முன்தாமரையாள் - முன்னே தோன்றிய தாமரையில் இருப்பவள். முகத்தாமரையாள் - முகமாகிய தாமரையை உடையவள். அப் பொற்றுமரை - அந்தப் பொன்னுலாகிய தாமரையை; அ: உலகறிசுட்டு.

280. தண்ணென் - குளிர்ந்த. கழுநீர்த்தடம் பொய்கை - கழுநீர்ப் பூக்களையுடைய அகன்ற பொய்கையில்; பொய்கை - மானிடர் ஆக்காத நீர்நிலை; சீவக. 338. நாம் என்றது தோழியரையும் உளப்படுத்தி.

281. புணைக்கும் - தெப்பத்திற்கும். புறங்காவல் ஆயத்துணை - தன் பக்கத்தே காவலாகவுள்ள மகளிர் தொகுதி; "பொருவில் லொருத்தி புறங் காக்கும் மாதர், இருவி லிடைநின் றிறைஞ்சி" (குலோத். 300.) தடம் சுருங்க - தடாகம் நீர் குறையும்படி. தோய - படிய. பணைத்து - பெருத்து.

(பி - ம்) 'மொருவன்' 'பணைக்கும்'

282. புடைக்கும் - அகலுகின்ற. விசும்பு - ஆகாயமும்; உம்மை விகாரத்தால் தொக்கது. இடம் போதா - இடம்பற்றாத. உடைப்புண்டு - தோல்வி யுடைந்து.

(பி - ம்) 'றடைப்புண்டு'

283. முலைக்குச் சக்ரவாகப் பறவையும், நடைக்கு அன்னப்பறவையும் உவமை; நிரல் நிறை; பின்வருவனவற்றையும் இங்ஙனமே கொள்க. அலம்வர - மனம் சுழல.

(பி - ம்) 'படுஞ்சக்ர'

284. காலுக்கு உவமை வரால். கண்ணுக்கு உவமை சேல். உட்காதே - அஞ்சாமல். கைவகுத்து - சேனையை வகுத்து. ஏற்குந்தரமே - போரிடும் தகுதியுடையதா?

(பி - ம்) 'கைவகுத்த' 'போய்த் தோற்றது'

285. வாவியி லுள்ள வரால்களுஞ் சேல்களும்
தாவி விழுந்து தடுமாறத் - தீவிய
286. பொம்மென் சிலம்பு புலம்பு புறவடிக்கும்
அம்மென் கழுத்துக்கு மாற்றாது - மம்மர்ப்பட்
287. டெங்குந் தரியா திரியல்போ யாமையும்
சங்குந் தடத்தை விடத்தவழ - நங்கைதன்
288. செவ்வாயுங் காதுஞ் செயிர்த்தன வென்றொதுங்கி
எவ்வாயுங் காணா தெதிரேநின் - றவ்வாய
289. கொள்ளைக் குமுத மலருங் குழையிள
வள்ளைக் கொடியு முடன்மயங்க - வெள்ளம்போல்
290. பெய்யு மதயானைக் கோடும் பெருநெடுங்
கையும் புடைப்பக் கலுழ்ந்தனபோல் - தொய்யில்சூழ்
291. தாம முலையாலுந் தோளாலுந் தாக்குண்டு
காமர் தடமுங் கரைகடப்பக் - கோமகன்

---

285. வாவி - தடாகம். தீவிய - இனிய ஒலியையுடைய. பொம்மென் - பெருத்த. சிலம்பு - காலணி. புலம்பு புறவடிக்கும் - ஒலிக்கின்ற புறவடியென்னும் உறுப்புக்கும். மம்மர்ப்பட்டு - மயக்கத்திலகப்பட்டு.

(பி - ம்) 'தடுமாறத்'

286. தரியாது - நிலைத்திராமல். இரியல்போய் - கெட்டோடி.

(பி - ம்) 'சிலம்பும்', 'கழுத்திற்கும்'

287. புறவடிக்கு ஆமையும் கழுத்துக்குச் சங்கும் உவமைகள். தடத்தை - பொய்கையை. விட - நீங்கும் பொருட்டு. தவழ - தவழ்ந்து செல்ல. நங்கை - அரிவை.

(பி - ம்) 'தரியா விரியல்போய்'

288. செயிர்த்தன - நம்மைக் கோபித்தன. எவ்வாயும் - செல்லுதற் குரிய வேறு எந்த இடத்தையும். எதிரே நின்று - வாய்க்கும் காதுக்கும் எதிரே நின்று. அவ்வாய - அவ்விடத்திலுள்ள.

(பி - ம்) 'செயிர்த்தபின் சென்றொதுங்கி' 'எதிர்நின்ற' 'அவ்வாய

289. கொள்ளை - மிகுதி. குழை - குழைந்த.

290. யானையின் மதத்திற்கு வெள்ளம் உவமை. கோடு - கொம்பு. நெடுங்கை - நீண்ட துதிக்கை. புடைப்ப - புடைத்தலால். கலுழ்ந்தன போல் - கலங்கியதைப்போல. தொய்யில் - கொடி.

(பி - ம்) 'கலுழ்வது போற்'

291. தாமம் - மாலையை யணிந்த ; ஒளியையுடைய எனலுமாம். யானைக் கொம்பு நகிலுக்கும் துதிக்கை தோளுக்கும் உவமை. காமர் தடமும் - விருப்பம் வருதலையுடைய பொய்கையும். கோமகன் - சோழன்,

292. உள்ளம் பெருகப் பெருக வுலாக்கொண்டு
கள்ளம் பெருகுங் கருநெடுங்கண் - வெள்ளம்
293. படிய வருஞ்சிவப்பு வள்ளப் பசுந்தேன்
வடிய வருஞ்சிவப்பின் வாய்ப்ப - நெடிது
294. திளைக்குந் திருமகளை வாவியிற் சேவித்
திளைக்குங் கொடியிடையா ரேத்தித் - திளைத்துழித்
295. தம்மைக் கமல மலர்க்களித்துத் தாமவற்றின்
செம்மை கவர்ந்த திருக்கண்ணும் - மெய்ம்மையே
296. மெய்போய வைய மருங்குலு மேகலைபோய்க்
கைபோ யகன்ற கடிதடமும் - பைபோய்
297. நெறிக்கும் பணிவலைய நீங்கிய வேய்த்தோள்
எறிக்கும் பெரும்பே ரெழிலும் - நெறிப்படக்

---

292. உலாக் கொண்டு - உலாவுதலைக் கொண்டு; உலாவுதல் கண்களின் தொழில்; "கைபரந்து, வண்டிசைக்குங் கூந்தன் மதர்விழிகள் சென்றுலவ, எண்டிசைக்கும் போதா திடம்" (தண்டி. 23, மேற்.) கள்ளம் பெருகும் - கள்ளத்தன்மை வளர்கின்ற.

(பி - ம்) 'பருகப் பெருக'

292-3. வெள்ளம் படிய - நீராடுதலால்.

293. நீராடுவார்க்குக் கண்சிவத்தல் இயல்பு; "நீர்நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கும்" (குறுந். 354 : 1.) வள்ளப் பசுந்தேன் - கிண்ணத்திலுள்ள செவ்வித்தேன். வடியவருஞ் சிவப்பின் - வடிதலால் வருகின்ற செந்நிறத்தைப்போல. நெடிது - நெடுநேரம்.

(பி - ம்) 'வன்னப் பசுந்தேன்'

294. திளைக்கும் - இடைவிடாமல் ஆடும். திருமகளை - அரிவையை. சேவித்து - வணங்கி. இளைக்கும் - வருந்தும். கொடியிடையார் - பூங்கொடி போன்ற இடையை யுடைய மகளிர். ஏத்தி - புகழ்ந்து. திளைத்துழி - நீராடிய காலத்தில்.

295. தம்மை - தம்மிட முள்ள வெண்மையை. அவற்றின் - அத்தாமரை மலர்களின். செம்மை - செந்நிறத்தை. மெய்ம்மையே - உண்மையாக.

(பி - ம்) 'மலர்க்கருளித்'

296. மெய்போய - உண்மைத்தன்மை நீங்கிய. ஐய மருங்குலும் - சந்தேகத்திற்கிடமான இடையும். மேகலை போய் - மேகலைகள் நீங்கி கைபோய் அகன்ற - இடம் மிகவும் அகன்ற. கடிதடம் - அல்குல்.

(பி - ம்) 'பொய் போய' 'பைபோல்'

297. நெறிக்கும் - நெளியும். பணி வலையம் - பாம்புச் சுருள் என்னும் ஆபரணம். வேய்த்தோள் - பசு மூங்கிலைப் போன்ற தோள்; என்றது

298. கொண்டுபோந் தேறிய கோமகள் பேரழகு
பண்டுபோ னோக்கப் பயப்படுவார் - கண்டு
299. கலன்கலன் கண்ணெச்சிற் கென்று கடிதிற்
பொலன்கலன் கொண்டு பொதிந்தார் - இலங்கிழை
300. யானைப் பெருமா ளயிரா பதத்திருந்த
தானைப் பெருமானைச் சந்தித்தாள் - மேனி
301. பொருவிற்கே யெல்லா வரம்பையரும் போதாத்
திருவிற்கே குற்றேவல் செய்வான் - பொருவிற்கை

---

அலங்கரியாத இயற்கையழகைக் கூறியபடி. எறிக்கும் - வீசுகின்ற. பெரும்பேரெழிலும் - மிகப்பெரிய அழகையும். நெறிப்பட - முறைமைப்பட.

(பி - ம்) 'வெறிக்கும்' 'நீவிய', 'வீங்கிய'

298. ஏறிய - கரையில் ஏறிய. கோமகள் பேரழகு - அரிவையினது பேரழகை. பண்டுபோல் நோக்க - முன்பு நோக்கியதைப்போல இப்பொழுது நோக்க; என்றது இதுவரையிலும் தாம் பாராத புதிய அழகாதலின் அச்சம் விளைத்தது. புதுமை அச்சத்தை உண்டாக்குதல்: "மிடையும் புதுவனப்பு விண்ணோரும் வீழ, அடையுந் தனதுருக்கண் டஞ்சி" (விக்கிரம. 178); "வெதிர்பொரு தோளினை ளொருத்தி வேந்தன்வந், தெதிர்தலுந் தன்மன மெழுந்து முன்செல, மதிமுகங் கதுமென வணங்கி னளது, புதுமையா தலினவற் கச்சம் பூத்ததே" (கம்ப. உண்டாட்டுப். 49.)

(பி - ம்) 'கொண்டு பிறிதேறிக்'

299. கலன்கலன் என்று - ஆபரணம் கொண்டுவருக என்று விரைந்துசொல்லி; அடுக்கு விரைவுபற்றி வந்தது. கண்ணெச்சிற்கு - திருஷ்டி தோஷத்தை நீக்குதற்கு. கடிதின் - விரைவில். பொலன் கலன் கொண்டு - பொன்னாபரணங்களைக்கொண்டு. பொதிந்தார் - அரிவையின் இயற்கையழகை மறைத்தார்; "உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார், அமிழ்தினைச் சுவைசெய் தென்ன வழகினுக் கழகு செய்தார்......இமிழ்திரைப் பரவை ஞால மேழைமை யுடைத்து மாதோ" (கம்ப. கோலங்காண். 3.) இலங்கிழை - அரிவை.

(பி - ம்) 'கலங்கலங்கண்' 'பொலங்கலன் கண்டு'

300. யானைப் பெருமாள்: உத்தம இலக்கணமுடைய யானையை இங்ஙனம் கூறுதல் மரபு; இது குதிரை நம்பிரான் என்பது போன்றதோர் வழக்கு; சீவக. 2157. ந; அழகர் கிள்ளை. 152.

தானைப் பெருமாள் - சேனையையுடைய சோழனை. சந்தித்தாள் - எதிரே கண்டாள்.

(பி - ம்) 'யானைப் பெருமான்' 'தானைப் பெருமானைச்'

301. பொருவிற்கே - ஒப்புக்கே. போதா - பற்றாத. திருவிற்கே - திருமகள் போன்ற அரிவைக்கே. செய்வான் - செய்யும்பொருட்டு. பொருவில்கை - போர் செய்கின்ற வில்லைப்பிடித்த கையையுடைய.

(பி - ம்) 'செய்வாள்'

302. வானிற்கோ னஞ்ச வருவானை யஞ்சாதே
வேனிற்கோ னேபரவ மேற்செல்வான் - வானத்
303. தெடுக்குங் கொடிமகர ராசித் தொடையிற்
றொடுக்கு மகரம்போற் றோற்ற - வடுத்தெய்யும்
304. மன்றன் மலரம்பு விற்கரும்பு வண்டுநாண்
தென்றறேர் தானனங்கன் செற்றதென - மென்றோளி
305. பாங்கி யெடுத்த படாகைப் பசும்பொற்பூ
வாங்கி யெதிர்தூய் வணங்கினாள் - தாங்கி
306. எடுப்ப வெழுவா ளிருதிருத்தோண் மாலை
கொடுப்ப விறையவனுங் கொண்டான்-கொடுத்தவற்றுட்
307. பொன்மாலை போதகத்தைச் சூட்டிப் பொலன்குவளை
நன்மாலை சாத்தினா னாயகனும் - தன்மார்பில்
308. ஆர்மாலை கோமா னருளினா னம்மாலை
கார்மாலை யுட்கொண்டு கைக்கொண்டாள் - பார்மாலே

302. வானிற்கோன் - இந்திரன். வருவானை - வருகின்ற சோழனை. வேனிற்கோன் - மன்மதன்.

(பி - ம்) 'கோனஞ்சி வதிவானை'

303. கொடி - ஒழுங்கு. மகர ராசித் தொடை - மகர தோரணங்கள்; ராசி - கூட்டம்.

(பி - ம்) 'கொடிமாத ராசிற் றொடையிற்' 'போற்றோன்ற - தடுத் தெய்யும்'

304. மன்றல் - மணத்தையுடைய. மன்றல்......அனங்கன்.: "யானை யிரதம் பரியா ளிவையில்லை, தானு மனங்கன் றனுக்கரும்பு - தேனார், மலரைந்தி னல்வென் றடிப்படுத்தான் மாரன், உலகங்கண் மூன்று மொருங்கு" (தண்டி. 79, மேற்.) மென்றோளி - அரிவை.

(பி - ம்) 'தென்றற்றே ரானனங்கன்' 'தென்றற்றேர் கொண் டனங்கன்'

305. படாகைப் பசும் பொற்பூ - கொடியைப் போன்ற பசும் பொன் னாலாகிய பூவை. தூய் - தூவி. வணங்கினாள் - சோழனை வணங்கினாள்.

305-6. தாங்கியெடுப்ப - தோழியர்கையில் முகந்து எடுப்ப.

306. எழுவாள் - எழுகின்ற அரிவை. கொடுத்தவற்றுள் - அரிவை கொடுத்த மாலைகளுள்.

307. போதகத்தைச் சூட்டி - தான் ஏறிவந்த யானைக்குச் சூட்டி. குவளைமாலையைத் தான்சூடிக் கொண்டான். நாயகன் - சோழன்.

(பி - ம்) 'சாத்தினாள் நாயகனும்'

308. ஆர்மாலை - ஆத்திமாலையை. கார்மாலை - கரியமாலைப்பொழுது வருவதை; "தனிமை பொறுக்குமோ, கார்மாலை கண்கூடும் போது" (தண்டி. 16, மேற்.) பார்மாலே - பூமியைக் காக்கும் திருமாலே.

## அரிவையின் முறையீடு

309. மூதண்டங் காக்கு முதுதண்ட மாரவேள்
கோதண்டத் தீஞ்சாறு கொள்ளாதோ - மாதண்ட
310. முற்றக் கடல்கிடந்து வேவ முனிந்தின்னம்
கொற்றத் தனிவிற் குனியாதோ - நற்றடத்துள்
311. ஏறு முதலை யெறிதிகிரி வேண்மகர
வேறு முறிய வெறியாதோ - மாறுது
312. காந்து முழுமதியை யோரோர் கலையாக
ஏந்து சுடர்வடிவா ளீராதோ - பாந்தண்மேல்
313. வைய முடையான் வலம்புரியிவ் வைகறைவாய்
உய்ய வொருகுரல்வந் தூதாதோ - வையம்
314. தணியுந் தகைத்தோ தமியன்மா லென்று
பணியு மடக்கொடியைப் பாரா - வணிய

---

309-16, ஆம் கண்ணிகளில் சோழனைத்திருமாலாகப் பாவித்து அவனுடைய பஞ்சாயுதங்களும் தனக்குச் செய்ய வேண்டும் உதவிகளைக் கூறுகின்றாள்.

309. மூதண்டம் - பழமையான உலகை. முதுதண்டம் - பழமையான கதையென்னும் ஆயுதம். மாரவேள் - மன்மதனுடைய. கோதண்டத் தீஞ்சாறு - வில்லாகிய கரும்பின் இனிய சாற்றை. மாதண்டம் - பெரிய தண்டனை.

(பி - ம்) 'முழுத்தண்டம்' 'கோதண்டத் தின்சாறு'

310. முற்ற - முற்றும்படி. கடல் கடந்து வேவ என்றது இராமாவதாரத்தில் கடல் வற்றும்படி அம்பெய்ய நினைந்ததைக் கூறியது. குனியாதோ - வளையாதோ. நற்றடத்துள் - நல்ல தடாகத்துள்.

(பி - ம்) 'நற்றடத்தில்'

311. முதலையேறு - கஜேந்திரனைத் துன்புறுத்திய சிறந்த முதலையை. எறிதிகிரி - கொன்ற சக்கரம். வேள் மகரவேறு - மன்மதனுடைய சிறந்த சுறுமீன் கொடியை; "மீனே றுயர்த்த கொடி வேந்தனை" (சீவக. 6.) மாறுது - தன் தன்மை வேறுபடாமல்.

(பி - ம்) 'வாருது'

312. காந்தும் - சுடுகின்ற. முழுமதி - பூர்ண சந்திரன். வடிவாள் - கூரிய வாள். பாந்தள்மேல் - ஆதிசேடன் மேலுள்ள.

313. வையம் - பூமியை. வைகறைவாய் - விடியற்காலையில். உய்ய யான் பிழைக்கும்படி.

314. தணியும் தகைத்தோ - குறையும் தன்மையை உடையதோ. தமியன் மால் என்று - வேறுதுணையில்லாத என்னுடைய காமமயக்கம் என்று சொல்லி. பாரா - பார்த்து. (பி - ம்) 'புணியுங் கொடியிடையை'

315. உருத்தந்த தோற்றங்க ளொன்றினுந் தப்பா
வருத்தந் திருமனத்து வைத்தே-திருத்தடந்
316 தோளுந் திருமார்பு நீங்காத் துணைவியரில்
நாளும் பிரியாமை நல்கினான்—மீள
317. ஒருமகள் கண்ட னொருபெரும்பே ராகம்
திருமகள் போலத் திளைப்பாள்—இருநிலம்
318. தாளா லளந்து தரும்பெரியோன் றாதகித்
தோளா லளந்த துணைமுலையா—ளாளும்
319. திரையர மாதருஞ் சேவிப்பாண் மேரு
வரையர மாதரின் வாய்ப்பாள்—கரையில்
320. விருப்பவனி கூர வருகின்ற மீளி
திருப்பவனி முன்விரைந்து செல்வா—னுருப்ப
321. அணந்த பணிவலைய வண்ணன் முதனாண்
மணந்த மணச்செவ்வி வாய்ப்பக்—கொணர்ந்தணிந்த
322. சூடா மணியும் பணிவளையுஞ் சூடகமும்
கோடா மணிமகர குண்டலமும்—ஆடிய

---

315. உருத்தந்த - அச்சத்தைத் தந்த. தப்பா வருத்தம் - நீங்காத வருத்தத்தை.

(பி - ம்) 'ளொன்றினையுந் தப்பா' 'திருத்தந்த'

315-6. தடந்தோளும் - விசாலமான தோளையும்.

316. துணைவியரில் - தேவியரைப்போல; தேவியார் - பூமிதேவியும் திருமகளும். நாளும் பிரியாமை - ஒருநாளும் பிரியாத தன்மையை. நல்கினான் - கொடுத்தான். மீள - வேறு.

317. கண்டன் - சோழன். திளைப்பாள் - இடைவிடாது அனுபவிப்பாள்.

(பி - ம்) 'பேராகத் திருமகள்' 'இரு நிலமும்'

318. தாதகித் தோளால் - ஆத்திமாலையை யணிந்த தோள்களால்.

(பி - ம்) 'தாங்கிய' 'தோளால் வளர்ந்த'

319. திரையமாதர் - நீரரமகளிர். கரையில் - எல்லையில்லாத.

(பி - ம்) 'மாதரும்' 'மாதருள்'

320. விருப்பு - விருப்பம். அவனி கூர - பூமியிலுள்ள மக்கள் மிக அடையும்படி. மீளி - தலைவன். உருப்ப - கோபிப்ப.

321. அணந்த - மேல் நோக்கிய. பணிவலைய அண்ணல் - பாம்பைப் போன்ற வாகுவலையத்தை யணிந்த சோழன். செவ்வி - அழகு.

(பி - ம்) 'னுருப்ப தணந்த' 'அணிந்தபணி'

322. சூடாமணி - தலையிலணியும் மணி. பணிவளை - பாப்புச்சுருள் என்னும் ஆபரணம்; 219. சூடகம் - கைவளை.

(பி - ம்) 'கோடாழ் முதுமகர'

323. சச்சையு மாலையு மாரமுந் தாமமுங்
கச்சையு மேகலையுங் காஞ்சியும்—பச்சென்ற
324. பட்டுங் குறங்கணியும் பட்டிகையு நூபுரமும்
கட்டுங் கனவயிரக் காறையும்—இட்ட
325. திலகமும் மான்மதமுஞ் செஞ்சாந்து மெல்லா
உலகமுந் தோற்கு முருவும்—கலகமும்
326. மாரனுந் தானும் வருவானை மன்னரில்
வீரனுங் காணு வெருவராப்—பாரனைத்தும்
327. தேறுந் திருவைத் திருவவ தாரங்கள்
தோறும் பிரியாத் தொடர்பாலும்—ஏறுங்கண்
328. வாளாலும் வார்புருவ வில்லாலும் வாங்கமைத்
தோளாலு மீளத் துவக்குண்டு—நீளிய
329. மைவிடா நோக்கி திருக்கைம் மலரணை
கைவிடா வார்வங் கடைப்பிடித்துத்—தெய்வப்
330. புவனி விலையாய பொற்றுகிற் கெல்லாம்
அவனி முழுது மளித்தான்போற்—கவினிய

---

323. சச்சை - சந்தனம். ஆரம் - முத்துமாலை.

(பி - ம்) 'பச்சை நிறப்'

324. குறங்கணி - குறங்குசெறியென்னும் ஆபரணம். பட்டிகை - அரைப்பட்டிகை. நூபுரம் - சிலம்பு. காறை - ஒருவகைக் கழுத்தணி.

325. திலகம் - நெற்றிப் பொட்டு. மான்மதம் - கஸ்தூரி.

325-6. கலகமும் மாரனும்: "கலக மாரன்வெறு மொருவ னுலகு களவு போக" (தக்க. 25.)

326. காணு - கண்டு. வெருவரா - அச்சங்கொண்டு.

327. தேறும் - தெளிகின்ற.

(பி - ம்) 'தொடர்பாலும் வேறுங்கண்'

328. வார் - நீட்சி. வாங்கு அமைத்தோள் - வளைந்த மூங்கிலைப் போன்ற தோள். மீளத்துவக்குண்டு - மறுபடியும் கட்டப்பட்டு. நீளிய - நீண்ட.

329. நோக்கி - நோக்கத்தையுடைய தெரிவை. திருக்கைமலரணை - திருக்கைம் மலராகிய அணையை. கைவிடா - நீங்காத.

(பி - ம்) 'வைவிடா' 'மலரினைக்' 'கடைப்பிடித்துச் செய்ய'

329-30. தெய்வப் புவனி - தெய்வத்தன்மையுள்ள பூமி. "தெய்வப் பூதலந் தன்னில்" "தெய்வப் பொன்னி நாட் டுவமை வைப்பை" (கம்ப. நாட்டுப். 20; மருத்துமலை. 58).

(பி - ம்) 'புயவ னயவிலையன் போற்றுகின்ற தெல்லாம்' 'இயவனு முழுதுமீந்தான்'

331. அற்புத மாலை யணியப் பணிசெய்யுங்
கற்பக மொன்று கடைக்கணித்தான்—பொற்படிக்குப்
332. பாதங்க ளாதி முடியளவும் பாரிப்ப
மாதங்க ராசிதிரு வாய்மலர்ந்தான்—ஓதி
333. முடிக்குத் தலைக்கோலம் போல்வன முத்தின்
படிக்குச் சலாபம் பணித்தான்—வடிப்பலகை
334. அச்சிரா பரண மனைத்திற்குந் தன்வட
வச்சிரா கரமே வழங்கினான்—பச்சை
335. மணிக்குத் தலையாய மாணிக்க ரத்னப்
பணிக்கு த்ரிகூடம் பணித்தான்—தணிப்பில்
336. பெரும்பே ருவகைய னாகிப் பெருமாள்
விரும்பேர் மலர்க்கண்ணி மீண்டாள்—பெரும்போர்
337. வெருவரும் பார்வேந்தர் வேந்தனைப் போற்றும்
பொருநரும் பாணரும் புக்கார்—தெரிவைக்குப்
338. பாடிக் குழலூதிப் பாம்பின் படக்கூத்தும்
ஆடிக் குடக்கூத்து மாடினார்—பாடியில்

---

331. பணி செய்யும் - கட்டளைகளைச் செய்யும். பொற்படிக்கு - பொன் ஆபரணங்களுக்கு.

332. பாரிப்ப - நிறைய அணிந்து கொள்ள. மாதங்கராசி - பொற் குவியலை. ஓதி - கூந்தலையுடைய.

333. முடிக்கு - தலைக்கு. தலைக்கோலம் - சீதேவி என்னும் ஆபரணம். முத்தின்படி - முத்தால் செய்யப்பட்ட ஆபரணம். சலாபம் - முத்துக் குளிக்குமிடம்; "முத்துச், சலாபமுழுதும் பொறையர் சாலையொடு கொண் டாய்" (குலோத். பிள்ளைத் 91.)

334. சிராபரணம் - தலையிலணியும் ஆபரணங்கள். வட வச்சிரா கரம் - வடக்கேயுள்ள வயிராகர மென்னும் மலை.

335. த்ரிகூடம் - இலங்கையிலுள்ள ஒரு மலை; குலோத். 145, 377.
(பி - ம்) 'பிணிப்பில்'

336. விரும்பு ஏர் மலர்க்கண்ணி - விரும்புகின்ற அழகிய மலரைப் போன்ற கண்களையுடைய தெரிவை. பெரும் போர் - பெரிய போரில்.
(பி - ம்) 'விரும்போ புதுக்கண்ணி'

337. வெருவரும் - பகைவர் அஞ்சுகின்ற. பொருநர் - கூத்தர்.

338. பாம்பின் படக்கூத்து - காளியன் என்னும் பாம்பினுடைய படத்தில் கண்ணபிரான் ஆடிய கூத்து; குடக் கூத்து - குடங்களையெறிந்து ஆடும் கூத்து; பரி. 3 : 83, அடிக். பாடி - இடையர் வாழும் ஊர்.

339. ஆனிரையும் மாமா னிரையும்போ லானுலகிற்
கோநிரையு மீளக் குழாங்கொண்டு—மீனிரையின்
340. மீதும் புடையு மிடைய விழவெழவேய்
ஊதுந் திருப்பவள முட்கொண்டு—சீதக்
341. கடந்தூர வந்து ககன தலமும்
இடந்தூர வந்து மிணையக்—குடங்கள்
342. எழவெழ மேன்மே லெழுந்துங் குடங்கள்
விழவிழ மேன்மேல் விழுந்தும்—பழகிய
343. தோளிரண்டுந் தாளிரண்டுஞ் சோளேசன்றுளிரண்டும்
தோளிரண்டு மென்றென்று சொல்லியும்—கோளொளிய
344. நின்வேய் தவிர்கென்று நேரியின் மேருவிற்
பொன்வேய்ங் குழலொன்று போக்கினாள்—முன்னே

339. ஆமான் நிரை - காட்டுப் பசுக்களின் கூட்டம்; ஆனுலகிற்கோநிரையும் - கோலோகத்திலுள்ள பசுக்களின் தொகுதியும்; கோலோகத்தின் இயல்பு "மேல தானிலே யுலகத் தானும்" (புறநா. 6 : 6-7); என்பதாலும், சிவதருமோத்திரம், கோபுர இயலாலும், "விளங்குநம் முலகின் மேலாம் வைகுந்தமதன்மேற் கந்தன், வளங்கெழு முலகம் வெற்பின் மாதுல கதனின் மேலாம், களங்கனி யனைய கண்ட னுலகதன் மேலாம் பாங்கர், உளங்கவர் வனப்பின் மேவுங் கோவின துலக மாமே" (காசி காண்டம், 2 : 29) என்னும் செய்யுளாலுமுணரப்படும். மீன்நிரையின் - நட்சத்திரங்களின் தொகுதியைப் போல; "விசும் பின் மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை" (புறநா. 399 : 30-31); "காய மீனெனக் கலந்து கானிரை, மேய" (சீவக. 421.)

(பி - ம்) 'யம் பொன்னுலகில்' 'மாலக் குழாங்' 'மீனிரைபு'

340. புடை - பக்கம். மிடைய - நெருங்க. விழஎழ - விழும்படியும் எழும்படியும். வேய் ஊதும் - புல்லாங்குழலை வாசிக்கும். திருப்பவளம் - வாய். (பி - ம்) 'மீதும் புடையு மடைய வளவேயை'

340-41. சீதக்கடம்தூர - குளிர்ச்சியையுடைய காடுகள் நிறையும்படி.

341. ககனதலம் - ஆகாயம். இடம் தூர - இடம் நிறையும்படி.

(பி - ம்) 'வந்து மினிய குடங்கள்'

342. கோளொளிய - கொள்ளுதலைப் பெற்ற ஒளியையுடைய.

(பி - ம்) 'எழுந்தும் படங்கள்'

343. நின்வேய் - உன்னுடைய புல்லாங்குழலை; இது குழலூதியோரை நோக்கிக் கூறியது. நேரியன் - சோழனுடைய.

343-4. மேருவிற்பொன் - மேருமலையிலுள்ள பொன்னாற் செய்யப்பட்ட.

(பி - ம்) 'கோளீண்டுஞ் சோழேந்திர சிங்கந் திருத்தடங்' 'கேளண்ணிய'

344. போக்கினான் - பரிசாக அளித்தான்.

(பி - ம்) 'வேய்தவிரென்று' 'பின்னர்த்'

345. தசும்பிற்கு மாருகத் தங்கோமா னுவற்
பசும்பொற் றசும்பு பணித்தாள்—ஓசிந்துபோய்
346. நாடகப் பாம்பிற்கு நற்கற் பகங்கொடுத்த
ஆடகப் பாம்பொன் றருளினுள்—பாடுநர்மேல்
347. வற்ருத மானத வாவியில் வாடாத
பொற்று மரையே புனைகென்ருள்—கொற்றவன்
348. கொந்தார மாலை கொளவிளைத்த மாலைக்கு
மந்தார மாலை வருகென்ருள்—நந்தாத
349. பேறுந் திருவருளு மெய்தி யவர்பெயர
ஏறுந் தவிசுதர வேறினுள்—வேறொருத்தி

## பேரிளம் பெண்

350. கச்சை முனியுங் கனதனமுங் குங்குமச்
சச்சை கமழுந் தடந்தோளு—நிச்சமுரு
351. ஏந்த வுளதென் றிருந்த மலர்நின்றும்
போந்த திருமகள் போலிருப்பாள்—வேந்தர்

---

345. தசும்பிற்கு - மண்ணுற் செய்த குடங்களுக்கு. நாவற் பசும் பொற்றசும்பு - சாம்பூநதமென்னும் பசிய பொன்னுற் செய்த குடங்களை.

346. நாடகப்பாம்பிற்கு - கூத்தாடுதற்கு இடமான பாம்பிற்கு. ஆடகப்பாம்பு - பொன்னுற் செய்தபாம்பு. பாடுநர்மேல் - பாடிய பாணரது தலையில்.

347. மானதவாவியில் - மானசப் பொய்கையில் உள்ள. பொற்றும்மரை - பொன்னுற் செய்யப்பட்ட தாமரைப் பூக்களை. பாணர்க்குப் பொற்றுமரைப் பூவைச்சூட்டுதல், "ஒள்ளழல் புரிந்த தாமரை, வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே" (புறநா - 11 : 17 - 18) என்னும் அடிகளாலும் அவற்றின் அடிக்குறிப்பாலும் அறியப்படும்.

348. கொந்து ஆரமாலை - கொத்துக்களையுடைய ஆத்திமாலையை. கொள - தான் கொள்ளும்படி. மாலைக்கு - மாலைப்பொழுதிற்கு. மந்தார மாலை - மந்தாரமென்னும் தெய்வத்தன்மையுள்ள மரத்தின்மாலை. நந்தாத - கெடாத.

349. பேறு - பரிசு. அவர் - பொருநரும் பாணரும்.

350. குங்குமச்சச்சை - சிவந்தநிறமுடைய சந்தனம். நிச்சம் - தினந்தோறும். உரு - தன்னுடைய வடிவத்தை.

(பி - ம்) 'கச்சை முலையுங் கடிதடமும்' 'நிச்சமு மேந்த'

351. மலர்நின்றும் - தாமரைப் பூவினின்றும்.

352. பணியுந் தட்டமகுடம் பன்னூறு கோடி
அணியுந் திருத்தா ளபயன்—பணிவலய
353. வீக்கிலே வீங்கியதோண் மேரு கிரிச்சிகரத்
தாக்கிலே சாய்ந்த தடமுலையாள்—பூக்கமழும்
354. ஆரேற்ற பொற்றோ ளபயனை யாயிரம்
பேரேற்ற தெய்வப் பெருமானைக்—காரேற்
355. றடல்போ லடுதிகிரி யண்ணலைத் தன்பாற்
கடல்போ லகப்படுத்துங் கண்ணாள்—மடல்விரி
356. தெங்கினு மேற்குந் தசும்பினுந் தேர்ந்தளி
பொங்கு நுரையினும் போய்ப்புகா—தங்கு
357. நறவு குவளை நறுமலர்தோய்த் துண்ணும்
இறவு கடைக்கணித் தெய்தச்—சுறவுக்
358. கொடியோனை நோக்குவாள் கண்டாள்பொற் கொற்கை
நெடியோனை நேமிப் பிரானைப்—படியோனைக்

---

352. வேந்தர் - சிற்றரசர்.

352–3. பணிவலைய வீக்கில் - பாம்பைப் போன்ற வாகுவலையத்தைக் கட்டுதலால்; "தடஞ்சேர் வலயந் தழுவுந்திருத் தோள்களுக, வடஞ்சேர் வடமந் தரமாமலை தன்னை மான" (உத்தர. திருவோலக்க. 10.)

(பி - ம்) 'தனதடத்தாள்'

354. ஆர் ஏற்ற - ஆத்திமாலையைப் பெற்ற. ஆயிரம் பேரேற்ற என்றது சோழனைத் திருமாலாக நினைந்து கூறியது.

354-5. காரேற்றடல் போல் - மேகத்தினுள்ள இடியினது அடுதலைப் போல்.

(பி - ம்) 'எருவொளியை'

355. திகிரி - சக்கரம். கடல் போல - பாற்கடலைப் போல. பாற்கடல் பேரிளம் பெண்ணின் கண்ணுக்குவமை; சீவக. 167.

(பி - ம்) 'றடுபோர்', 'றடுதிகிரி'

356. தசும்பு - குடம். அளி - வண்டு; இது தேறலில் மொய்த்திருப்பது.

(பி - ம்) 'தேர்த்தெழுப்' 'போகாது தங்கு'

357. நறவு - கள்ளை. குவளைநறுமலர் தோய்த்து - குவளைப்பூவின் நாளத்தைத் தோய்த்து; "தோன்றரு கமலச் செவ்வாய் திறந்தன ளுகர நாணி, ஊன்றிய கழுநீர் நாளத் தாளினூ லொருத்தி யுண்டாள்" (கம்ப. உண்டாட்டு. 19.) இறவு - முடிவின்கண். கடைக்கணித்து - அருள் செய்து.

357-8. சுறவுக் கொடியோனை - மன்மதனை.

(பி - ம்) 357. 'கடைக்கணியத் தெய்வச்'

358. கொற்கை நெடியோனை - கொற்கை நகரத்தையுடைய நீண்ட வடிவமுடையவனை. நேமி - சக்கராயுதம்; ஆக்ஞா சக்கரமுமாம். படி-

359. கண்டனை மேதினியாள் காந்தனை வந்துய்யக்
கொண்டனை யென்று குறுகுவாள்—கண்டு
360. மலர்கண் வெளுப்புச் சிவப்பூர மற்றத்
திலகங் குறுவியராற் றேம்பப்—பலகுதலை
361. மாற்றந் தடுமாற்ற மெய்த மனத்துள்ள
தேற்றம்பித் தேற்றஞ் சிதைவிப்ப—ஏற்று
362. துகிலசைந்து நாணுந் தொலைய வளக
முகிலசைந்து நோவிடைக்கு முற்ற—அகிலமும்
363. சேனையு மன்னருந் தெய்வப் பெருமாளும்
யானையு நிற்க வெதிர்நின்று—கோனே
364. சதயுக மேனுந் தரணிபர் மக்கள்
பதயுக மல்லது பாரார்—உதயாதி

---

யோனை - மற்றவர்க்கு ஒப்பாகக் கூறப்படுபவனை ; 'படி - பிரதி என்பதின் சிதைவு' (அகநா. 22 : 5, உரை.)

(பி - ம்) 'பொற் கொங்கை'

359. கண்டன் - இராசராசன் பெயர். மேதினியாள் காந்தனை - பூமிதேவிக்கு நாயகனை. உய்யக் கொண்டனை - நாம் உய்யும்படி ஏற்றுக் கொண்டாய்.

360. மலர்கண் - மலர்ந்த கண். திலகம் - நெற்றியில் அணியும் பொட்டு. குறுவியரால் - சிறிய வியர்வைத் துளிகளால். வியர்வை தோற்றியது பொறிநுதல் வியர்த்தல் என்னும் மெய்ப்பாடு.

(பி - ம்) 'மலர்கண் ணிமைப்புச் சிவப்பூர மாற்றித்' 'குறுவேர்வாற்'

361. மாற்றம் - சொற்கள். தேற்றம் - தெளிவை. பித்தேற்றம் - கள்ளுண்டல். சிதைவிப்ப - கெடுக்க.

362. அசைந்து - நழுவி. அளகமுகில் - கூந்தலாகிய மேகம். அசைந்து - அவிழ்ந்து. இடைக்கு நோவு முற்ற - இடைக்குத் துன்பம் அதிகரிக்க. (பி - ம்) 'நான்று தொலைய'

363. தெய்வப் பெருமாள் - சோழன்.

(பி - ம்) 'பெருமானும்'

364. சதயுகமேனும் - நான்கு யுகங்களும் பழகினும், தரணிபர் மக்கள் - அரசருடைய மக்கள். பதயுகமல்லது - இரண்டு பாதங்களை யல்லாமல் ; "எருத்துமே னோக்குறின் வாழலே மென்னும், கருத்திற்கை கூப்பிப் பழகி - எருத்திறைஞ்சிக், கால்வண்ண மல்லாற் கடுமான்றேர்க் கோதையை, மேல்வண்ணங் கண்டறியா வேந்து" (தொல். மெய்ப். 8, பேர். மேற்.)

364-5. உதயாதிகாந்த - உதயத்தைப் போன்ற மிக்க ஒளியை உடையவனே ; "மாக்கட னிவந்தெழுதரு, செஞ்ஞா யிற்றுக் கவினை யாதோ" (புறநா. 4 : 15-6.)

365 காந்தனின் கைத்தலத்தைப் பார்மடந்தை கற்பாந்தத்
தேந்து மரவர சென்றிகவாள்—பூந்தொடி
366. நற்போர் மடந்தை திருத்தோளை நாமுடைய
வெற்போ ரிரண்டென்று வீற்றிருக்கும்—பொற்பிற்
367. கலந்தாளுஞ் சொற்கிழத்தி கன்ன துவயமென்
பொலந்தா மரையென்று போகாள்—நிலந்தாரா
368. அந்தா மரையா ளருட்கண்ணைத் தன்னிரண்டு
செந்தா மரையென்று செம்மாக்கும்—முந்துற்ற
369. மல்லா புரேச சிலகால மற்றிவை
எல்லாந் தனித்துடையோம் யாமன்றே—அல்லாது
370. மேகோ தகமிரந்த சாதகம் வெற்பைநிறை
ஏகோ தகம்பொழிந்தா லென்செய்யும்—மாகத்துக்

---

365. கைத்தலத்தை - தோள்களை. பார்மடந்தை - பூமி தேவி. கற்பாந்தத்து - கற்பத்தின் முடிவில். அரவரசு - ஆதிசேடன். இகவாள் - அத்தோள்களைவிட்டு நீங்கமாட்டாள்; குலோத். 295. பூந்தொடி - அழகிய வளையையணிந்த.

(பி - ம்) 'பூமடந்தை' 'சென்றிகழாள்'

366. போர்மடந்தை - துர்க்கை. வெற்பு - மலை; துர்க்கை விந்திய மலையிலுள்ளாளென்பது இங்கே அறிதற்குரியது; "தோளையே பற்றி வெற்றி திருவெனத் தோன்று வாரும்" (கம்ப. நீர் விளையாட்டு. 4.) வீற்றிருக்கும் - வேறொருவருக்கில்லாத பெருமையோ டிருப்பாள். பொற்பின் - பொலிவினால்.

(பி - ம்) 'வீற்றிருக்குங் கற்பிற்'

367. சொற்கிழத்தி - கலைமகள். கன்னதுவயம் - இரண்டு காதுகளை. "சூழு மலர்முகத்துச் சொன்மா மகளுடனே, தாழு மகரக் குழைதயங்க" (விக்கிரம. 45.) பொலந்தாமரை - அழகிய வெண்டாமரை.

(பி - ம்) 'கன்ன துயிலென்பொற்', 'கன்ன துயலென்பொற்', 'கன்ன துயிலென் போற்'

368. அந்தாமரையாள் - அழகிய தாமரைப் பூவிலுள்ள திருமகள். செம்மாக்கும் - பெருமைகொள்வாள்; "போதில், நிறைநின்ற செல்வி நெடுங்கண் களினும், உறைகின்ற நாளில்" (விக்கிரம. 34-5.)

(பி - ம்) 'கடைக் கண்ணைத்' 'எண்ணிரண்டு'

369. மல்லாபுரேச - மாமல்லபுரத்திற்குத் தலைவனே. தனித்துடையோம் என்றது பூமிதேவி முதலிய மகளிருக்குத் தனித்தனியே உரிய உறுப்புக்களை யாம் உடையோம் என்றபடி.

(பி - ம்) 'யாமென்றே'

370. மேகோதகம் - மேகத்தின் நீரை. வெற்பை நிறை ஏகோதகம் - மலைகளை நிறைக்கின்ற மிக்க நீரை. மாகத்து - ஆகாயத்திலுள்ள.

371. காலை வெயில்வேண்டுந் தாமரைக்குக் கற்பாந்த
வேலை வெயிலெறிக்க வேண்டுமோ—மாலைச்
372. சிலாவட்டஞ் சிற்சில நின்றுருகு மென்றால்
நிலாவட்ட நின்றெறிக்க நேரோ—குலாவலைஞர்
373. சேற்றாக்கால் மீளுந் திருநாடா நீதருமால்
ஆற்றாக்கால் மேன்மே லளிப்பரே—கோற்றொடியார்
374. நீங்கரிய மேகமே யெம்போல்வார் நீயளித்தால்
தாங்கரிய வேட்கை தவிர்ப்பரே—யாங்களே
375. தண்மை யறியா நிலவினேஞ் சந்ததமும்
உண்மை யறியா வுணர்வினேம் - வெண்மையினிற்
376. செல்லாத கங்குலேந் தீராத வாதரவேம்
பொல்லாத வெம்பசலைப் போர்வையேம் - நில்லாது
377. வாமே கலையே முலைவீக்கா வம்பினேம்
யாமேயோ விப்போ தெளிவந்தேம் - யாமுடைய

---

(பி - ம்) 370. 'வெற்பையே' 'மாகத்தின்'

371. காலை வெயில் - காலையிலுள்ள இளவெயிலை. கற்பாந்த வேலை வெயில் - கற்பத்தின் முடிவாகிய சமயத்திலுள்ள வெயிலை. மாலை - மாலைக் காலத்தில்.

372. சிலாவட்டம் - சந்திரகாந்தக்கல். நிலாவட்டம் - பூரண சந்திரன். குலாவலைஞர் - மகிழ்ச்சியையுடைய மீன் பிடிப்பவர்.

(பி - ம்) 'சென்றுருக வென்று' 'குலாவிளைஞர்'

373. சேல்தாக்கால் - சேல்மீன்களின் தாக்குதலால். மீளும் - தம் தொழில் முடியாமல் திரும்பிவருகின்ற; "வரிவராற்பக டாண்மே லேபாய் சோணாடா" (குலோத். பிள்ளைத். 25.) மால் - காம மயக்கத்தை. ஆற்றாக்கால் - பொறுக்க முடியாமற் போனால். கோற்றொடியார் - திரண்ட வளையலை அணிந்த மகளிர்.

374. மேகமே என்றது நிறத்தாலும் ஒத்திருத்தல் பற்றி. வேட்கை - ஆசை. தவிர்ப்பரே - நீக்குவரோ.

375. தண்மையறியா - குளிர்ச்சியாக வீசுதலை யறியாத; என்றது நிலாச்சுடுகின்றது என்றபடி. சந்ததமும் - எப்பொழுதும். உணர்வு - அறிவு. வெண்மையினில் - விடியற்காலத்தில்.

376. செல்லாத - முடிவடையாத. கங்குலேம் - இராப்பொழுதை யுடையோம்; என்றது இராப்பொழுது மிக நீண்டதாகத் தோற்றுகிற தென்றபடி. தீராத - நீங்காத. பொல்லாத - அழகை அழிக்கின்ற. 'புல்லாத' என்ற பாடத்திற்குத் தழுவாமையால் உண்டான என்று பொருள் கொள்க.

(பி - ம்) 'புல்லாத வெம்பசலை'

377. வா மேகலை = வாம மேகலை; வாமம் - அழகு: இது 'தழுங்குரல்' (சீவக. 40) என்பதைப் போன்றது. வீக்கா - கட்டாத. வம்பு - கச்சு.

378. நன்மை யொருகாலத் துள்ள தொருகாலத்
தின்மை யுணராயோ வெங்கோவே - மன்னவநீ

379. முன்பு கருடன் முழுக்கழுத்தி லேறுவது
பின்பு களிற்றின் பிணர்க்கழுத்தே - மின்போல்

380. இமைக்குங் கடவு ளுடையினைபண் டிப்போ
தமைக்குந் துகிலினே யன்றே - அமைத்ததோர்

381. பாற்கடற் சிபாஞ்ச சன்னியம்பண் டிப்போது
கார்க்கடற் சென்று கவர்சங்கே - சீர்க்கின்ற

382. தண்ணந் துழாய்பண்டு சாத்துந் திருத்தாமம்
கண்ணியின் றுரின் கவட்டிலையே - தண்ணென்ற

383. பள்ளியறை பாற்கடலே பண்டு திருத்துயில்கூர்
பள்ளி யறையின்று பாசறையே - வெள்ளிய

---

(பி - ம்) 377. 'விக்கா விம்மினேம்' 'யாமேயோ போதோம் யாமுடையவா மேனும்', 'யாமே யோவிப் போதேம் யாமுடைய வாமெனும்'

378. ஒரு காலத்து என்றது தலைவன் தலையளி செய்த காலத்தை. ஒருகாலத்து இன்மை யென்றது தலைவன் பிரிந்த காலத்தை.

379-84. இக்கண்ணிகளில் சோழனைத் திருமாலாக வைத்துக் கூறுகின்றாள்.

379. முன்பு - திருமாலாக இருந்த காலத்தில். பிணர் - சருச்சரை.

(பி - ம்) 'பிடர்க்கழுத்தே'

380. இமைக்கும் - ஒளிவிடும். கடவுள் உடையினை - தெய்வத் தன்மையால் தானாகவே அமைந்த பீதாம்பரத்தையுடையாய்; "மால்வரை, எரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை" (பரி. 1 : 9 - 10.) அமைக்கும் - மக்களால் செய்யப்படுகின்ற.

(பி - ம்) 'சமைத்ததோர்'

381. சிபாஞ்ச சன்னியம் : திருமாலின் கையிலுள்ள சங்கின் பெயர். கார்க்கடல் - கரிய நிறத்தையுடைய உப்புக்கடலில். சீர்க்கின்ற - பெருமையடைகின்ற.

382. துழாய் - துளசி. திருத்தாமம் - அழகிய மாலை. கண்ணி - தலையிற் சூடும் பூ. ஆர் - ஆத்தி. கவடு - பிளவு. கவட்டிலை ஆர் : "இளவரிக் கவட்டிலை யாரொ டேர்பெறத், துளவிய றும்பையின் சுழியஞ் சூடினான்" (கம்ப. முதற் போர். 115.) தண்ணென்ற - குளிர்ந்த.

383. பாசறையைப் பள்ளியறையென்றது சோழன் பகையரசரோடு எப்பொழுதும் போர் செய்த நிலையைக் குறித்தது; பாசறை - பகைமேற் சென்றவர் தங்கும் கூடாரம்.

(பி - ம்) 'தெள்ளியவரை'

384\. முத்தக் குடைகவித்து முன்கவித்த மாணிக்கக்
கொத்துக் குடையொக்கக் கூடுமே - இத்திறத்தால்
385\. எண்ணற் கரிய பெரியோனீ யெங்களையும்
அண்ணற் கிகழ வடுக்குமே - விண்ணப்பம்
386\. கொண்டருளு கென்ன முகிழ்த்த குறுமுறுவற்
றண்டரளக் கொற்றத் தனிக்குடையோன் - பண்டறியா
387\. ஆரமு மாலையும் நாணு மருங்கலா
பாரமு மேகலையும் பல்வளையு - மூரும்
388\. பிடியுஞ் சிவிகையுந் தேரும் பிறவும்
படியுங் கடாரம் பலவும் - நெடியோன்
389\. கொடுத்தன கொள்ளாள் கொடாதன கொண்டாள்
அடுத்தனர் தோண்மே லயர்ந்தாள் - எடுத்துரைத்த

---

384\. கவித்தும் - கவித்தாலும். முன்கவித்த-திருமாலாகிய காலத்தில் கவித்த. மாணிக்கக் கொத்துக் குடை யென்பது ஆதிசேடனை ; "சென்றாற் குடையாம்......அணையாந் திருமாற் கரவு" (திவ். 2134.) இத்திறத்தால் - மேலே கூறிய இக் காரணங்களால்.

(பி - ம்) 'குடைகவித்த முன்கவிகை'

385\. அண்ணற்கு - சேருதற்கு. விண்ணப்பம் - வேண்டுகோள்.

(பி - ம்) 'பெரியோய் நீ'

386\. முகிழ்த்த - அரும்பிய. தரளம் - முத்துமாலையை யணிந்த. தனிக்குடையோன் என்பது சோழனென்னும் துணையாய் நின்றது. பண்டறியா - முன்பு அறியாத.

(பி - ம்) 'கொண்டருளா யென்ன' 'முகிழ்க்கக்'

387\. ஆரம் - முத்து. அருங்கலா பாரம் - காஞ்சி முதலிய ஆபரணங்கள்.

(பி - ம்) 'மாலையுநாலு'

388\. பிடி - பெண்யானை. படியும் - நீராடுதற்குரிய. கடாரம் - ஒரு வகைப் பெரிய பாத்திரம் ; குலோத். 52, 150. நெடியோன் - நீண்ட வடிவத்தையுடைய சோழன்.

389\. கொடுத்தன என்றது ஆரம் முதல் கடாரம் இறுதியாக உள்ளன வற்றை. கொடாதன மயக்கம், பசலை முதலியன. அடுத்தனர் தோள் மேல் - பக்கத்திலுள்ளவருடைய தோள்களின்மேல் ; விக்கிரம. 192, 222. அயர்ந்தாள் - மயங்கிச் சாய்ந்தாள்.

390\. மால் - காம மயக்கத்தை. மனம் கொள்ளாமல் : மனம் அறு வென்றும், காம மயக்கம் கடலைப்போன்றதென்றும் கூறப்படுதலின் இங்ஙனம் கூறினர்.

(பி - ம்) 'மாத ருளங்கொள்ளா'

390. பேதை முதலாகப் பேரிளம்பெண் ணீருக
மாதர் மனங்கொள்ளா மால்கொள்ளச் - சோதி
391. இலகுடையான் கொற்றக் குடைநிழற்று மீரேழ்
உலகுடையான் போந்தா னுலா.

## வெண்பா

அன்று தொழுத வரிவை துளவணிவ
தென்று துயில்பெறுவ தெக்காலம் - தென்றிசையில்
நீரதிரா வண்ண நெடுஞ்சிலையை நாணெறிந்த
வீரதரா வீரோ தயா.

இராசராச சோழனுலா முற்றிற்று.

---

390-91. சோதியிலகு உடையான் - ஒளிவிளங்குகின்ற உடையை அணிந்த சோழன்.

391. நிழற்றும் - நிழலைச் செய்யும். ஈரேழுலகுடையான் - பதினன்கு உலகங்களையும் உடையவன். மால்கொள்ள உலாப் போந்தான் என இயைக்க. (பி - ம்) 'நிழற்ற வீரேழ்'

வெண்பா

(கு - ரை) அரிவை - தலைவி; இது பருவப்பெயரன்று. என்று துளவணிவது - எந்நாளில் நினக்குரிய துழாய் மாலையை நீதர அவள் அணிந்து கொள்வது? எக்காலம் துயில்பெறுவது - எந்நாளில் தானிழந்த உறக்கத்தை மறுபடியும் பெறுவது. நீர் அதிராவண்ணம் - கடல் முழங்காதபடி; இவ்விடம் ஏகாந்த ராமமென்று கூறப்படும். இராமபிரான் இராவண சங்காரத்திற்குரிய காரியங்களைப் பலருடன் ஆலோசித்துக் கொண்டிருக்கையிற் கடல் முழக்கம் ஒருவர் பேசியது ஒருவர்க்குக் கேளாதபடி செய்தமையின் அவர் கோபிக்க, உடனே ஓசையின்றி அடங்கியதனால், அவ்விடத்திற்கு ஏகாந்த ராமமென்றும், ஏகாந்த ராம நகரம் என்றும், அங்கு எழுந்தருளியிருக்கும் இராமபிரானுக்கு ஏகாந்த ராமனென்றும் பெயர்கள் உண்டாயின. நீரதிராமற் செய்த வரலாறு சிறிது வேறுபாட்டோடு 'வென்வேற் கவுரியர் தொன்முது கோடி, முழங்கிரும் பௌவ மிரங்கு முன்றுறை, வெல்போ ரிராம னருமறைக் கவித்த, பல்வீ ழாலம் போல, ஒலியவிந் தன்றிவ் வழுங்க லூரே" (அகநா. 70 : 13-17) என்பதிலும் காணப்படுகிறது. வீரதரா - வீரத்தைத் தரிப்பவனே. வீரோதயா - வீரத்தையுடைய உதயணனைப் போன்றவனே. உதயன் என்பதும் உதயணனுக்குரிய பெயர்.

# மூவருலா அரும்பத முதலியவற்றினகராதி

[எண்—கண்ணியின் எண்.]

1 என்பது விக்கிரம சோழனுலாவையும், 2 என்பது குலோத்துங்க சோழனுலாவையும், 3 என்பது இராசராச சோழனுலாவையும் குறிக்கும்.

---


அ : உலகறிசுட்டு, 3 : 279
அகளங்க நல்லூர், 2 : 28
அகளங்கன், 1 : 59, 152, 182, 209, 256, 284, இறுதிவெண்பா ; 2 : 27, 111
அகிலாண்டம், 3 : 29
அகிலாவி-அகிற்புகை, 2 : 75
அங்கம் - அங்கநாடு, 1 : 88
அங்காந்து, 1 : 205
அசலகுலம், 2 : 41
அசனியேறு, 1 : 293
அசும்புதல், 3 : 230, 322, 342
அசுரகிரசனம், 2 : 147
அசைந்தது - முன் இருந்த தன்மை கெட்டது, 1 : 206
அசோகம், 3 : 155
அசோகம் மாலையாகப் பூத்தல், 3 : [163
அஞ்சன சைலம், 2 : 62
அஞ்சனம், 1 : 103
அஞ்ஞானம் சூரியனுக்கும் தோற்காது, 2 : 35
அட்டை - கவந்தம், 1 : 83
அடிக்கொள்ளல், 1 : 120
அடியிடுதல், 1 : 133
அடுபுலி, 1 : 5
அண்டகடாகம், 3 : 131
அண்டகூடம், 3 : 92
அண்டர் - ஆயர், 2 : 118
அண்ணமங்கலம் : ஓரூர், 1 : 85
அண்ணல் - சேர்தல், 3 : 385
அண்ணற்படிவம், 1 : 50
அணங்கு - நோவு, 2 : 19
அணந்த - மேல் நோக்கிய, 3 : 321
அணிய, 3 : 189
அணிவகைகள், 3 : 322-4
அதிகன், 1 : 86
அதிராஜேந்திரன், 1 : 23
அந்தப்புரப் பெருமாள், 3 : 40
அந்தப்புரம், 1 : 92
அந்தம், 1 : 193
அநியமவுவமம், 2 : 327
அநுராகம், 2 : 331
அபயப்பிரதானம், 2 : 81
அபயன், 1 : 27, 107, 152, 2 : 149, 250, 3 : 352, 354
அபரம் - பின்புறம், 1 : 61
அபிஷேகம் - மகுடம், 1 : 31; 2 : 32, 36 ; 3 : 42, 89
அம்பரம், 3 : 92
அம்பிகை இருக்காதி மறைகளையும் உலகங்களையும் ஈன்றவள், 2 : 56
அம்புக்குக் கழு, 2 : 381
அம்மனே, 1 : 118
அம்மே, 1 : 130
அமுதமதன விமலை, 2 : 156
அயிராபதம் - சோழன் பட்டத்து யானையின் பெயர், 1 : 52, 64, 272, 289, 304 ; 2 : 81, 3 : 113, 130, 236, 257, 260, 300
அயிராவணம், 1 : 52
அயில் : ஆயுதப் பொதுப் பெயர், 3 : 77
அயில்வாளி, 1 : 301
அரசர்க்குப் பசு, 3 : 54
அரசர் காலையில் முன்னோர், விண்ணவர், வேதியர் முதலியோருக்குரியவற்றைச் செய்தல், 3 : 43
அரசர் போர்க்கண்ணியோடு தமக்குரிய அடையாளப் பூவையும் சூடல், 2 : 373
அரசுவா, 3 : 247
அரம்பையர், 3 : 72

அரமகளிர், 2 : 228, 3 : 79, 157
அரமகளிர்தன்மை, 1 : 104 - 6
அரி - பகைவன், 2 : 375
அரிச்சந்திரன், 3 : 4
அரிந்த - மெல்லிய, 1 : 207
அரிவைக்கு அமுதம், 1 : 228
அருக்கமண்டலம், 3 ; 94
அருண ஜடேசர், 2 : 63 - 3
அருத்தி - ஆசை, 1 : 134, 2 : 177
அருமணம் : யானையிற் சிறந்த ஒரு நாடு, 3 : 259
அருவிக்குவாள், 1 : 255
அரைப்பட்டிகை, 3 : 182, 221, 324
அல்குல், முலை, தோள்பருத்திருத்தல் உத்தம இலக்கணம், 1 : 38-9 260
அல்குலுக்கு அரவு, 3 : 203 ; ஆதி சேடன் படம், 1 : 307 ; கடல், 2 : 232; தேர், 2 : 169 ; தேர்த் தட்டு, 1 : 129
அலகை - அளவு, 2 : 41
அவதாரங்கள், 3 : 327
அவயவ பரிணமம், 2 : 124
அவலச்சுவையை உவகை மாற்றல், 2 : 278
அவனிசுரர் - பிராமணர், 2 : 37
அளகபாரம், 2 : 212
அளகம், 1 : 174
அளகைப்பதி, 3 : 77
அளியத்தார், 2 : 209
அறத்திகிரி, 1 : 26
அறிவுடையோர் பழிக்கு நாணுதல், 1 : 308
அறுகினைக்காப்பாக அணிதல், 1:41
அறுகு மங்கலப் பொருள், 1 : 41
அறைகழல், 1 : 35
அன்றில், 3 : 196
அன்றில் அலகோடு அலகு சேர்த்துத் துயிலல், 2 : 279
அன்றில் பனையில் வசித்தல், 2 : 374
அன்று என்பது பன்மைக்கும் வரும், 2 : 165.
அன்னப்பேடை, 1 : 115
அனகன், 1 : 70, 82, 178, 299, 306 ; 2; 157, இறுதி வெண்பா, 3 : 161
அனங்கவேள்: 3 : 65
அனங்கன், 1 : 172, 299, 341
அனங்கன் சேனைமுகம் மகளிர், 1 : 109
அனங்கனர், 1 : 303
அனந்தபணமவுலி, 2 : 237
அனந்தபாலன், 1 : 82
அனந்தம் - பல, 3 : 42
அனபாயன், 2 : 159, 315, இறுதி வெண்பா
அனீகம் - படை, 3 : 247
ஆகண்டமும் - அகண்டமளவும், 2 : 75
ஆகுபெயர், 2 : 8, 147
ஆங்கவன் : ஒருசொல், 1 : 2
ஆஞ்ஞாசக்கரம், 1 ; 26
ஆஞ்ஞாசக்கரம் உலகத்தை வலமாக வருதல், 1 : 27
ஆட்டுநீர், 2 : 314
ஆடைக்கு இளநிலா, 2 : 64
ஆணைப்பெருமாள், 3 : 268
ஆத்தி கவட்டிலையுடையது, 3 : 382
ஆத்தி மாலையைச் சோழன் போர்க் களத்தே சூடுதல், 2 : 138
ஆதிக்கடவுள திசைமுகன், 1 : 2
ஆதிமனு ஆவிற்காகத் தேரில் மைந்தனை யூர்ந்தது, 1 : 4; 2 : 2, 3 : 3
ஆதிமனுகுலம், 1 : 111
ஆதிமனுச்சக்கரவர்த்தி, 2 : 2, 3 : 3
ஆதியுகம், 1 : 120
ஆபரணங்களுக்குப் பிராணன் பூண், 2 : 231
ஆம்பல்மதிக்கு நெகிழ்தல், 1 : 188
ஆமான்நிரை, 3 : 339
ஆயவெள்ளத்தார், 2 : 209
ஆயவெள்ளம், 2 : 147, 239
ஆயிரம்பேரேற்ற பெருமாள், 3:354
ஆர் - ஆத்திமாலை, 1 : 27
ஆர்வம் - காதல், 1 : 133
ஆரச்சேறு - சந்தனக் குழம்பு, 1 : 36
ஆரம் - ஆத்தி, 1 ; 273, 2 : 176
ஆரமாலை, 2 : 138
ஆரவாரம், 2 : 315
ஆராய்ச்சிமணி, 1 : 340;2 : இறுதிக் கலித்துறை
ஆல்: ஒடு உருபின் பொருளில் வந்தமை, 2 : 46, தொறும் என்னும் பொருளில் வந்தமை, 2 : 57
ஆலி, 1 : 224.

